# ஒரு துளி நிழல்

ஓர் ஈழப்பெண்ணின் நாள்காட்டா
நாட்குறிப்புகளிலே இந்நாவலின் மூலம்

இ. தியாகலிங்கம்




20/2, ஜக்கரியா காலனி, முதல் தெரு,
சூளைமேடு, சென்னை - 94,
தமிழ்நாடு, இந்தியா.

# Oru Thuli Nizhal
(Novel)

By
**R. Thiyagalingam**

First Edition
December 2013

Mithra : 234
ISBN : 978-93-81322-22-2

Publication Editor
**Espo**

Pages : 168
Price : ₹ 160 /-

Printed & Published by
**Mithra Arts & Crations Pvt. Ltd.,**
20 / 2, Zackria Colony, 1st Street,
Choolaimedu, Chennai - 600 094.
Ph : +91 44 2372 3182 / 2473 5314
Email : mithraart@gmail.com
Web : www.mithra.co.in

# என்னுரை

ஆயுதம் கொடுக்கும் பலமும், நிராயுத பாணியாய் நிற்கும் பலவீனமும் நாம் கடந்து வந்த பாதையாகும். ஒரு மனிதனின் கையில் ஆயுதம் அகப்படும்போது மனிதம் அவனிடம் இருந்து நழுவி ஓடுகிறது. ஆணவம், போராசை என்கின்ற மனப்பிறழ்வுகளும் மனிதத்தைக் குழிதோண்டிப் புதைக்கும். இந்தக் கலவைகள் இழையோடியதே ஈழப்போராட்டம் என்றால் என்னைப் பலர் தூற்றுவர். தூற்றுவார் தூற்றினும் போற்றுவார் போற்றினும், அவைநோக்கா, துணிந்து நிற்கவேண்டியவன் எழுத்தாளன்.

ஈழவிடுதலை ஈன்றெடுத்த வேதனை, அழிவு, அரசியல் வியாபாரம், பொதுச் சொத்துகளைப் போட்டிக்குப் பதுக்குதல், பாதிக்கப்பட்டவர்கள் பற்றி பாராமுகமாய் இருந்துகொண்டு கோடம் பாக்கத்தை நோக்கி அலையும் புலம்பெயர்ந்த பினாமிகளின் கூட்டம், பதுக்கிய சொத்துக்காய்ப் பரிமாறப்படும் துப்பாக்கி வேட்டுக்கள் எனத் தொடர் வது ஈழத்தமிழரின் வருங்கால ஆரோக்கியத்துக்கு ஏற்றதல்ல.

போராட்டகாலத்தில் பொதுமக்களாய் வாழப் போராடியவர்களின் சோக வரலாறுகள் ஆயிரம் ஆயிரம். போராளிகள் மனுநீதிகண்ட சோழர்கள் அல்லர். அவர்கள் தாய்ப்பசுவுக்காய் தன் மகனை தேர்ச்சில்லில் இட்டவர்கள் அல்லர். போராடும்வரை

இந்த உண்மைகள் பேசப்படாமல் இருப்பது போராட்டத்தை நலிவுறப் பண்ணாது என்பர். இன்றும் அது பேசப்படாது விட்டால், வரலாற்றின் உண்மைப் பதிவை மறுதலித்த லாகும்.

ஆளும் வர்க்கத்தால் தமிழர்கள் மேல் போராட்டம் வலுவில் திணிக்கப்பட்டது. அதைக் கையில் எடுத்துக் கொண்டவர்களும் மக்கள்மேல் வலுவில் வன்முறையைத் திணித்தமை கொடுமையான வரலாறு. போராளிகளாலும் மானிடநேயச் சிதைவுகள் நிகழ்ந்துள்ளதை எத்தனைபேரால் இன்றுகூட உரத்துச்சொல்ல முடியும்? பொய்களையும், திரிபுகளையும் பிதற்றுவதால் உண்மைகள் என்றும் உறங்கிப் போய்விடுவதில்லை.

இத்தனைக்கும் மேலாக தமிழர்களின் போராட்ட காலத்தில் தமிழர்களே தமிழர்களை சிறைப்படுத்திய கோரமும் நடந்திருக்கிறது. போராட்டத்தைப் போராட்டமாக எண்ணிய வர்களைவிட போராட்டத்தை வியாபாரமாக்கியோர் தொகை எண்ணில் அடங்கா. அவர்களைப் படைப்பிலக்கிய அக்கறை புறக்கணித்துவிட வேண்டுமா?

தமது சிங்கள மொழித்திறனையும், கொழும்பு வாழ்க்கையின் பரிச்சையத்தையும் வைத்துக்கொண்டு அபலை களாக, உயிர்வாழ்ந்தால் போதும் என்கின்ற ஒரு நப்பாசையுடன் கொழும்புக்கு ஓடிவந்தவர்களைத் தமது வலைக்குள் வீழ்த்தி, மனிதம் வெட்கித் தலைகுனியும் படி வேட்டையாடி... கொடுமைகள் புரிந்த தமிழர்களும் வாழ்கிறார்கள் என்பது நெஞ்சைப் பிழியும் சோகமான வரலாறு.

ஈழப்போராட்டத்தில் வாழத்துடித்த ஒவ்வொரு உயிரும் எத்தனை தீ மிதிப்புகளை தாண்டி வந்தார்கள்? வாழ்கையில் சோதனை வரலாம். சோதனையே வாழ்கையாகிவிட்டால்? அப்படியான வாழ்கையை வாழ்ந்தவர்களின் கதையைச் சொல்வதை இலக்கியம் ஏற்றுக் கொள்ள மாட்டாதா?

ஈழத்தில் தமிழ்பெண்ணாய்ப் பிறந்து, வேதனை மட்டுமே வாழ்க்கை என்கிற விரக்தியின் விளிம்பிற்கு போனவளுக்கு

ஒரு கைவிளக்கை கொடுத்துக் கதையை நான் முடித்தால் யாழ்ப்பாணத்துக் கற்புநிலையை மாசுபடுத்தும் செயலாகி விடுமா?

நான் போதகன் அல்ல. கதைசொல்லி; சமூக அக்கறை யுள்ள கதைசொல்லி. இந்த நாவலின் மூலம் அதனை மீண்டும் வலியுறுத்த ஆசைகொண்டேன். அது பேராசையாகி விடுமா?

எனது இலக்கியப் பயணத்தில் நான் தவழத்தொடங்கியது தொடக்கம், இன்று எழுந்து நடக்கும் வரையும் எனக்கு ஊக்கமும், அறிவுரைகளும், அதற்கும்மேலாக பல உதவி களையும் மனங்கோணாதும், என்றும் சலிக்காதும் அள்ளி வழங்குபவர் ஈழத்து இலக்கிய பீஷ்மர் எஸ்.பொ. எனது இலக்கியப் பயணத்தில் 'அழிவின் அழைப்பிதழ்' என்கின்ற எனது முதலாவது நாவலை அந்த ஈழத்தின் இலக்கிய மேதை வெளியிட்டு என்னை தமிழ் இலக்கிய உலகிற்கு அறிமுகப்படுத்தினார். எஸ்.பொவின் படைப்புப் பயணம் என்றும் இலக்கியத்திற்கும், தமிழிற்குமானது. அந்த மேதையோடு எனக்கு உள்ள நட்பு பரிசுத்தமான, பரிபூரணமான, பலன்கள் எதிர்பாராத புனிதமான ஒன்று. அவர் முதுமை தமிழுக்கு தளம்பல் தந்துவிடுமா என்கின்ற தவிப்பு எனக்கு. அவர் எனது இலக்கியப்பயணத்திற்கு தரும் ஊக்கத்திற்கு நன்றி சொல்ல தமிழில் வார்த்தையில்லை என்கின்ற தேடல் என்னிடம். அவர் சேமம், ஈழத் தமிழரின் படைப்பின் உயர்ச்சிக்கான உத்தர வாதம் என்கின்ற அசையா நம்பிக்கை என்னிடம்.

என் நாவல்களை அழகாக அச்சிட்டுத்தரும் மித்ர வெளியீட்டு நிறுவனத்தினருக்கு எனது நன்றிகள். என் இலக்கியப் பயணத்திற்கு உலகம் எங்கும் இருந்து ஆதரவுதரும் வாசகர்கள் ஆகிய உங்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

அன்புடன்
**இ. தியாகலிங்கம்**

Tyristubbveien 77
0687 Oslo, Norway
(47) 22269049

# முன்னீடு

"ஏனப்பல பேசி யிறைஞ்சிடப் படுவதாய்
நாட்பட நாட்பட நாற்றமுஞ் சேறும்
பாசியும் புதைந்து பயனீ ரிலதாய்
நோய்க் களமாகி யழிகெனு நோக்கமோ?
விதியே, விதயே, தமிழ்ச் சாதியை
என்செய நினைத்தா யெனக்குரை யாயோ?"

என்று பாரதி குரலிலே புலம்புதல்தானோ தமிழ் ஈழரின் முடிவு? இந்தக் கேள்வியே, புலம் பெயர்ந்துள்ள தமிழ் ஈழரின் முன்னால் இன்று சதிராடிக் கொண்டிருக்கிறது.

இனவிடுதலை மற்றவரின் தயாளத்திலும், கருணையிலும் கிடைத்துவிடமாட்டாது. தமிழ் ஈழரின் விடுதலை வேட்கையிலும் - வேட்டையிலும் இது பலமுறை நிரூபணமாகியுள்ளது. 'சுறண்டலற்ற புதிய சமுதாயம் ஒன்றினை மார்க்ஸிய வேதத்தினைப் பிற்பற்றி, விடுதலைப் போரின் மூலம் நிறுவி, புதிய சுபிட்சத்தை அநுபவித்து வரும் நாடுகளான ருஷியா, சீனா, வியட்நாம், கியூபா போன்ற நாடுகள், பெரும்பான்மை இனமொன்றின் மூர்க்கமான சுரண்டலுக்கு எதிராகப் போராடிய ஒரு சிறுபான்மை இனம் அநீதியாகவும், அசுரத்தனமாகவும் அழிக்கப்படுவதைப் பார்த்தும், மனச்சாட்சிகளைத் தொலைத்தது எதனால்? சர்வதேச அரசியல் சதுரங்கத்திலே மார்க்ஸிய வேதம் தொலைந்து போனதா? பேரினவாதத்தின் அசுர வேள்விக்குத் துணைபோகும் அளவுக்கு மார்க்ஸியம் நீர்த்துப் போனதா? இந்தக் கேள்விகள் பலவும் என்னையும், நான் சார்ந்து நின்ற அரசியற் கோட்பாடுகளையும் நொருக்கிய போதிலும், தமிழ் ஈழர் ஒன்றுபட்ட இலக்கையில் சிங்கள பௌத்த ஏகாதியத்தின் கீழ் மறுவாழ்வு ஒன்றைத் தேடிக் கொள்ள முடியும் என்று கால் நூற்றாண்டுகளுக்குப் பின்னர் வேதம் ஓதும் புதிய சாத்தான்களின் எதிர்வுகூறலை ஜீரணிக்க முடியாது வாழ்கின்றேன். அந்தத் தொழுதுண்ணும் கூட்டம் வெள்ளிக் கிரீடங்கள் சூட்டி மகிழட்டும்! வரலாற்றினை ஒரு தடவை அசை மீட்டினால், உண்மை தரிசனமாகும். சேர் பொன். இராமநாதன் துவக்கம் அமிர்தலிங்கம் வரை நம்மின அரசியல்வாதிகள் ஒன்றுபட்ட இலங்கையில், அதிகாரப் பகிர்வு என்கிற கோஷத்தில் பதவிகளைத்

தேடியலைந்தார்கள். ஆனால், சிங்களரின் அரசியல் தலைவர்கள் தமிழ் ஈழரின் தனித்துவத்தைச் சிதைத்துச் சிங்கள மயமாக்குவதிலே சிரத்தை ஊன்றிச் செயற்பட்டார்கள். தமது பெரும்பான்மை அசுரத் தினை பாராளுமன்றத்திலும் வெளியிலும் பயன்படுத்தினார்கள். இதில் அவசரங்காட்டிய அவர்கள் வன்முறையையும் கையிலேந்தினார்கள். அந்த வன்முறைக்குப் பலிப்பொருளாகத் தமிழரை நிவேதித்தார்கள். 'எதிரியே நமது ஆயுதத்தைத் தீர்மானிக்கிறான்' என்கிற மாஸேதுங் கூற்றுப்படி தமிழ் ஈழர் வன்முறையை எதிர்கொள்ள, வன்முறையைத் தமது ஆயுதமாகக் கைப்பற்ற நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். இந்த வரலாறு முடிந்துவிட வில்லை. அடுத்த கட்டத்திற்கான ஆயுதத்தையும் சிங்களப் பேரினவாதமே தீர்மானிக்கும் என்பது என் ஊகம். இந்த ஊகம் அநுபவம் கற்றுத்தரும் பாடம்.

அகிம்சை என்பதும் ஒரு வகை வன்முறையே என்று நான் எளிமையாக விளங்கிக் கொள்ளுகிறேன். அகிம்சையை ஆயுதமாகக் கற்பித்த மகாத்மா காந்தி, 'சும்மா இருப்பதே சுகம்' என்று செயற்படவில்லை. அகிம்சை என்ற போராட்ட ஆயுதத்தின் ஒரு கூறாக உண்ணாநோன்பை மேற்கொண்டார். பட்டினி கிடந்து தன்னைத் தானே ஆக்கினைப்படுத்துதல், எவ்வகையில் உயிர் வதை செய்வதைத் தடுக்கின்றது? தன்னுயிருக்குப் பலவந்தமாகத் தானே தீங்கு விளைவித்துக் கொள்ளுதல், வன்முறையின் இன்னொரு ஸ்திதி. தற்கொலை முயற்சி அறத்துக்கு முரணானது. நியாயம், நீதி ஆகியவற்றைப் புரிந்துகொள்ளக்கூடிய நாகரிகமான, அதிகாரத்திலமர்ந்துள்ள சிறுபான்மையான ஆளும் வர்க்கத் தினருக்கு எதிராக, அவர்களுடைய மனச்சாட்சியைத் தட்டி எழுப்புவதற்காக அகிம்சை என்கிற தன்னைத்தானே வருத்தும் ஆயுதம் பயன்படலாம். சிறுபான்மை இனத்தின் இடுகாடுகளைக் கூடத் துவம்சம் செய்யும் ஒரு மிலேச்ச கூட்டத்துக்கு எதிராக அகிம்சை செல்லுமா? காந்தி படத்தினை ரூபாய் நோட்டுகளிலே பூஜை செய்யும் இந்தி அரசு திலீபனின் உண்ணாநோன்பைக் கேலி செய்து சாகடித்தது! அகிம்சை மூடர்களிடமும், அரசர்களிடமும் செல்லாது. இவை என் தளம். இந்தத் தளத்தினை வைத்து படைப்பிலக்கியம் படைக்கும் சுயேச்சை எனக்கு உண்டு.

ஆனால், இந்தக் கருத்துகளுக்கு முரணான கருத்தினை என் இளம் நண்பர் தியாகலிங்கம் வரித்துள்ளார். அஃது அவருடைய

உரிமை. தமது விசுவாசங்களை முன் நிறுத்திப் படைப் பிலக்கியங்களை படைக்கும் உரிமை அவருக்கு உண்டு. புலிகள் இயக்கத்தின் விடுதலை வெறியிலே பெருமையும், செருக்கும் கொள்ளுதல் என் வசம். அது வேறு. அதற்காகப் புலி இயக்கத்தினை விமர்சனஞ்செய்து, இன்னொரு எழுத்தாளன் இலக்கியம் படைத்தலாகாது என்பது நான் கடந்த அறுபது ஆண்டுகளுக்கும் மேலாக இலக்கியப்படைப்பிலே கைப்பற்றி ஒழுகி வரும் அறத்துக்குப் புறம்பானது. அறம் புறமாக நான் இலக்கிய வாழ்வை வசப்படுத்தவில்லை என்பதின் சாட்சியாக இதனைத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன். இது வேறு. எனக்கு முரண்பட்ட கொள்கைகள் இலக்கியத்தில் ஆகுமானது என்பதை கனம் பண்ணி வாழ்கிறேன். அதனை ஏற்றுக்கொள்ளும் பக்குவன் நான் என்பதற்கு இது சான்று. இது குறித்த பெருமையும் செருக்கும் என் வசம்.

நாவலின் உள்ளடக்கம் குறித்து தியாகலிங்கம் என்னுரையில் குறுகத் தறித்த விளக்கம் ஒன்று தந்துள்ளார். அதற்கு மேலும் நாவலின் சங்கதி குறித்த அறிமுகத்தில் உங்கள் நேரத்தைப் பறிக்க நான் விரும்பவில்லை. நாவலின் சுவைப்பு உங்கள் வசம்.

தியாகலிங்கம் எண்ணிக்கையால் மட்டுமல்ல, வண்ணத் தாலும், வகையாலும் புலம்பெயர்ந்து வாழும் தமிழ் ஈழ எழுத்தாளர் மத்தியிலே சாதனையாளராய் நிமிர்ந்தும், திமிர்த்தும் வருதல் எனக்கு மனநிறைவினைத் தருகின்றது. அவருடைய இன்னொரு நாவலை, அடுத்த மாதம் மித்ர வெளியீடு உங்கள் வாசிப்புக்குத் தர இருக்கின்றது. நூதன சங்கதிகளை முன்வைக்கும் இரண்டு புதிய நாவல்களை எங்களுடைய பரிசீலனைக்குத் தந்துள்ளார். அவை, இன்ஷா அல்லாஹ் அடுத்த ஆண்டு நமது வெளியீடாக வெளிவரும். அவருடைய படைப்புகளை தமிழ் இலக்கியமும், வாசகர்களும் வரவேற்று ஆதரித்து வருதல் ஆரோக்கியமானது. அவருடைய படைப்பு ஆர்வமும்-முனைப்பும் வளரவும் வளப்படவும் என்றும் வாழ்த்துதும்.

எஸ்.பொ

2A, Hakea Place
Epping 2121,
Australia
612-98685090

# ஒரு துளி நிழல்

## 1

"நீ கொக்கென்று நினைத்தாயா" என்பது போல இருந்திருக்கலாம் என் பார்வை. தமிழன்பன் முதல்முறை அவமானத்தில் நெளிவதாக எனக்குத் தோன்றியது.

வெள்ளையும் நீலமும் கலந்த ஒரு தூய்மையைத் தனது முதுகில் தடவிய வண்ணம் பதுமையாக 'குணசேகரா' நின்றது. உள்ளே விமான இருக்கைகளைவிட வசதியான இருக்கைகள் பயணிகளுக்காய்க் காத்திருந்தன. நேற்றைய பயணத்தின்போது சேர்ந்த கடலைக் கோதுகள் தற்போது, இல்லை. உள்ளே அக்கறையோடு துப்பரவு செய்யப்பட்டு, தூசு அவதானமாகத் துடைக்கப்பட்டு, பளிச்சென்றிருந்தது. தமிழ்ப் பேருந்துக்களில் மணம் பரப்பும் ஊதுபத்திப்புகை இல்லாமல் இருப்பதுகூட ஒருவகைத் திருப்தியை எனக்குத் தந்தது. பேருந்திற்குள் இன்னமும் அதிகக் கூட்டம் வந்து சேரவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் வந்துவிடும். பேருந்தில் வேலை செய்பவர்கள் தொலைக்காட்சியில் தற்போதே படம்போட்டுப் பார்த்தார்கள். ஓட்டுநர் எங்கோ தொலைந்து போக, நடத்துநர் ஓடிக்கொண்டிருக்கும் படத்தில் அரைவாசிக் கவனத்தோடு, வரும் பயணிகளைக் கவனித்தார்.

எனது எண்ணைச் சரிபார்த்தபோது அது யன்னலோரத்தில் இருந்தது. ஏதோ ஒரு புதியபாட்டு, எனக்கு

அப்பொழுது ஞாபகத்திற்கு வர மறுத்தது. வழமையாகப் பெண் என்று கொடுத்து இருந்தால், பெண்களுடன் சேர்த்து இருக்கை கொடுத்திருப்பார்கள். எங்கோ தவறு நடந்திருக்க வேண்டும். அந்த எழுத்துக்கள் தவறுதலாக மாற்றிப் பதியப்பட்டிருக்கிறது. தமிழன்பனைப் பார்த்த எனது பார்வையும் நெளிவும், ஆண் என்கின்ற அசிங்கம் ஏன் என்னருகில் வந்தது என்கின்ற கேள்வியை அவன்மீது எரிச்சலுடன் எறிந்து நின்றது.

அவனுக்கு என்மேல் வியப்பு, எரிச்சல், கோபம் ஆகியன ஏற்பட்டிருக்கலாம். மொத்தமாகப் பொங்கியிருக்கும். அவனை அசிங்கமென வெறுத்த பெண்ணின் அறிமுகம் அவனுக்கு இருந்திருக்காது. அவன் நான் வெறுக்கும்படியாக ஒரு துரும்பைக்கூட அசைக்கவில்லை. காரணம் இன்றியே நான் அவனை வெறுப்பதாக அவன் எண்ணி இருப்பான். என் பார்வையில் மட்டும் இன்னும் காரணம் இல்லாமல் அனல் தெறித்துக் கொண்டிருந்தது. அவன் ஒருவித அவதியில் மீண்டும் மீண்டும் நெளிந்தான்.

பன்னிரெண்டு மணித்தியாலங்கள் அவன் பக்கத்தில் இருக்க வேண்டி நேரலாம். எனது முதல் பார்வையே... இந்தப் பயணம் முழுவதும் அதைத் தாங்கும் வலு அவனுக்கு இருக்கிறதா? அந்தச் சந்தேகம் அவனுக்கு இருப்பதாகத் தோன்றியது. வருபவர்களில் யாராவது தனக்கு விடுதலை தருவார்களா என்கின்ற ஏக்கத்தோடு அவன் பேருந்தின் வாசலைப் பார்த்தான். வந்த பெண்கள் எல்லாரும் கணவர்களோடோ அல்லது ஒரு பெண் உறவினரோடோ வந்து கொண்டு இருந்தார்கள். எனது பார்வை நடத்துநரை வாவென்று அருகில் அழைத்தது. அவர் சமாதானமாகச் சற்றுப் பொறுக்குமாறும், தான் யாரையாவது கேட்டு ஒழுங்கு செய்வ தாகவும் எனக்குக் கூறினார். "சமாளித்துக் கொள்ளுங்கள்" என்பது போலத் தமிழன்பனைப் பார்த்திருக்கலாம். மீண்டும் பயணிகளைக் கவனிக்க... அனுமதிச் சீட்டைப் பரிசோதிக்கச் சென்று விட்டார். நான் அமர்ந்தேன். தமிழன்பனையோ அல்லது

அந்தப் பேருந்தில் இருக்கும் எவரையுமோ பார்க்கும் ஆவல் எனக்கு இல்லை என்பது போல ஒரு புத்தகத்தை எடுத்து வாசிக்கத் துவங்கினேன்.

என் மனதிற்குள் முதன் முதல் ஒரு பயம் உண்டாகியது. எந்த ஆணின் முகத்தையும் கண்டு கூசாத கண்கள் இன்று எதற்காக இவனைப் பார்த்துக் கூசியது? எனக்கு என்மீதே ஆத்திரம் வந்தது. அதைக் கோபமாக்கி எனது நடத்தையை மாற்றினேன். யாரைப் பார்த்தும் நாம் தடுமாறி விடக்கூடாது என்கின்ற வைராக்கியத்துக்கு முறுக்கேற்றினேன்.

அவன் கண்கள்... அவனது அந்தப் பார்வை... பளிச் சென்ற அவனது கள்ளம் இல்லாத சிரிப்பு... எங்கோ அவனோடு நெருங்கி வாழ்ந்ததான ஒரு அபூர்வமான... இனம் புரியாத... சிநேகபூர்வமான உணர்வை எனக்குள் திடீரென ஏற்படுத்தியது. நான் தோற்றுப் போகிறேன் என என் மனச்சாட்சி கைகொட்டிச் சிரித்தது. அதே சமயம் கோபமும் பெருகியது.

ஒரு கணம் என்ன செய்வது என்று புரியவில்லை. தமிழன்பன் என்கின்ற அந்நியனை வெறுக்க வேண்டும் என்று நினைத்தாலும் வெறுக்க முடியவில்லை. எனது வைராக்கியம் அந்நியன் ஒருவனிடத்தில் தோற்றுக் கொண்டிருப்பதைப் பாரிதாபமாக நான் உணரமுடிந்தது. என்றுமில்லாதவாறு இன்று பதை பதைத்தது.

தமிழன்பன் எழுத்துலகில் காலடியெடுத்து வைத்துத் தன்னை நிலைநாட்டிக் கொண்டிருந்த காலம் அது. சவாலான பாத்திரம் ஒன்றைக் கண்டுகொண்டதான ஓர் உணர்வு அவனிடம் குறுகுறுக்கத் துவங்கி இருக்கலாம். உள்நாட்டில் இருந்து வெளிநாட்டு வாழ்வு பற்றிப் பலர் கனவு காணுகிறார்கள். வெளிநாட்டில் இருந்து உள்நாட்டுச் சுகங்கள் பற்றிச் சிலர் ஏங்குகிறார்கள். தமிழன்பனும் ஏங்குபவர்களில் ஒருவன். சந்தர்ப்பம் கிடைத்தால் யாழ்ப்பாணத்தை எட்டிப் பார்த்து விடவேண்டும் என்கின்ற ஆதங்கம் அவனை விடுவதில்லை. இம்முறை யாரைப் பார்ப்பதற்காய் அவசரமாய் யாழ்ப்பாணம் சென்று கொண்டு இருக்கிறான்?

குணசேகர பேருந்து கடற்கரைப் பிள்ளையார் கோவிலை அண்டிய பகுதியில் நின்றது. அது அவசரத்தில் வரும் யாழ் செல்லும் பயணிகளையும் இந்து சமுத்திரம் கண்டுவரும் இளம் தென்றலையும் உள்வாங்கியது. நடத்துநர் ஆசனங்களை நிரப்புவதில் வலு அக்கறையோடு செயற்பட்டார். அந்தக் கவனத்தில் தமிழன்பனின் அவஸ்தை பற்றியோ அல்லது எனது நிலைமை பற்றியோ அவர் ஞாபகத்தில் வைத்திருப்பதாகத் தெரியவில்லை.

நடத்துநர் மறந்து இருக்காவிட்டாலும் ஆசனத்தை மாற்றிக் கொடுக்குமளவிற்குத் தாராள மனம் கொண்ட மனிதர்களைக் காணமுடியவில்லை. அது தமிழன்பனுக்கு அவஸ்தையான கணங்களாக, முடிவில்லாது நீண்டது. அவன் வாகனத்தை விட்டு கீழே இறங்கினான். இந்துசமுத்திரம் உரசிவரும் குளிர்த் தென்றலை ஆலிங்கனம் செய்து தன்னை மறந்து நின்றான். இயற்கைதான் எவ்வளவு அற்புதமானது என்பதாக அவனுக்குத் தோன்றி இருக்கலாம். என்னைப் பார்த்துவிட்டு மனிதர்கள் எவ்வளவு அற்பமானவர்கள் என்கின்ற உணர்வும் அவனுள் எழலாம். நான் அற்பத்தனமாக நடந்து கொண்டேனா? அந்தக் கேள்வி என்னைச் சுரண்டியது. எனக்கு விடை தெரியவில்லை. நான் வாசிப்பதாகப் புத்தகத்தைப் புரட்டினேன். அதிக நேரம் சமுத்திரத் தென்றலின் ஆலிங்கனமும் நீடிக்கவில்லை.

“வந்து ஏறுங்க பஸ் எடுக்கப் போறம்” என்கின்ற குரல், அவனைத் தென்றலுக்குப் பிரியாவிடை கொடுத்துப் பேருந்திற்குள் நுழையக் கட்டாயப்படுத்தியது. தமிழன்பன் பேருந்தில் ஏறித் தனது இருக்கையை நோக்கி வந்தான்.

## 2

**அ**ப்பா திருமணம் செய்வதற்கு முன்னர் அவருக்கும் காரைநகருக்கும் எந்தத் தொடர்பும் இருந்தது இல்லையாம்.

ஏதோ வழக்கு விடயமாக சட்டத்தரணி ஒருவரைத் தேடித் திரிந்த மாமாவிடம் அப்பா இசகுப்பிசகாக அகப்பட்டுக் கொண்டார். அதில் இருந்து மாமாவுக்கும் அப்பாவுக்கும் ஏற்பட்ட பழக்கம் பிசின் போல வலுவாயிற்று. அதையடுத்து அளவெட்டியில் அவர்கள் எப்படிப்பட்ட குடும்பம் என்பதை அறியும் ஆவல் மாமாவை தூண்ட, தூரத்து உறவான அக்காள் ஒருவர் அளவெட்டியில் குப்பை கொட்டிக் கொண்டு இருந்ததைப் பயன்படுத்தி எல்லா விபரமும் அறிந்து கொண்டார். மாமாவிற்கு அப்பாவை நன்கு பிடித்துக் கொண்டதால் மாமா அம்மாவுக்கு அப்பாவைத் திருமணம் செய்து வைக்க முடிவு செய்தார். அவர் தனது முயற்சியில் வெற்றியும் பெற்றார். அதன் பேறாக நாங்கள் இந்த உலகத்தைப் பார்க்க முடிந்தது. இதுவே எங்கள் பூர்வீகம்.

நாங்கள் எதுவும் அறியாது கைசூப்பிக் கொண்டிருந்த காலத்திலேயே ஈழத்தின் அமைதி, போராட்டம் என்கின்ற பெயரில் களவு போய்க் கொண்டு இருப்பதை எங்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. காரைநகருக்கு களங்கண்டி மீனைத்தவிர எல்லாமே கடைசியாகத்தான் வருவது உண்டு. இதுவும் அதற்கு விதிவிலக்காக இருக்கவில்லை.

அப்பா வித்தியாசமானவராய் இருந்தது என்னினைவில் இன்றும் பசுமையாக நிலைத்துள்ளது. கோர்ட், வழக்கு என்று செல்ல முதல் செல்லப்பிள்ளையான என்னைச் சைக்கிளில் ஏற்றிக் கொண்டு, துணிமணிகள் நிறைந்த குஞ்சங்களை எடுத்துச் சைக்கிளில் மாட்டிவிட்டு, கயூர்னா கடற்கரைக்கு விடிந்தும் விடியாத பொழுதில் போவது அலாதியான இன்பம்தான். அதை இப்போழுது நினைத்தாலும் இனிமை யாக இருக்கிறது. என் மனதும் அந்தக் கணங்களை நினைத்து ஏங்குகிறது.

நான் எப்போதும் அப்பாவின் செல்லமாக, எனது இருக்கை அவரது தோள்மூட்டாக, காலைச்சூரியன் தகதகத்து கிழக்கே உருள அப்பா என்னையும் தூக்கிக் கொண்டு நடைபயிலத் தொடருவார். அப்பாவின் கழுத்தில் இருந்து காலைச் சூரியனைப் பார்க்கின்றபொழுதெல்லாம் என்வாழ்வும் அப்படித்தான் அமையும் என்கின்ற கற்பனை, பசுமையாகிச்

செழித்தது. கதிரவனின் கதிர்ப்பாய்ச்சல் போன்ற வாழ்க்கையை அதன் அருகே நெருங்கும்போதுதான் உணர முடியும் என்கின்ற உண்மையை அப்பொழுது என்னாற் புரிந்து கொள்ள முடியவில்லை.

என் தங்கையும், நானும் இரட்டைப் பிள்ளைகள் போல இருந்தாலும், இந்தச் சலுகைகள் எல்லாம் எனக்கு மட்டுமே பிரத்தியேகமாகக் கிடைத்தன. நான் அப்பாவின் சாயலில் மட்டும் அல்ல, இயல்புகளிலும் அவரையே உரித்து வைத்தது போல இருந்தது அதற்குக் காரணியாக அமைந்தது. கயூர்னா கடற்கரையில் அப்பாவின் வியர்க்கும் முயற்சி இன்பமாகக் கழியும். எனக்கு அது எப்போதும் மனிதக் குதிரையில் இருந்து சவாரி செய்யும் புளுகைத் தந்து கொண்டு இருக்கும். தங்களைக் கூட்டிச் செல்லவில்லையே என்கின்ற வெப்பிசாரம் என் சகோதரங்களுக்கு உண்டு. அது எனக்கு மேலும் புளுகத்தை உண்டுபண்ணும். இது என் பால பருவத்தின் இனித்த கனவுகளாக நினைவில் உறைந்து கிடக்கின்றன.

அப்பாவின் உலாத்தல் முடிந்த பின்பு, சைக்கிளில் என்னை நன்னீர்க் கிணற்றுக்கு அழைத்துச் செல்வார். அங்கு தானும் குளித்து எனக்கும் குளிப்பாட்டி, பின்பு வீட்டுக்கு கூட்டி வருவார். அதன்பின்புதான் சாப்பாடு, பாடசாலை என்கின்ற எனது அன்றாடக் கடமைகள் தொடங்கும்.

அந்த அன்பான அப்பாவின் அரவணைப்பு தொடர்ந்தும் கிடைக்காமல் போனது முதன்முறை எனது வாழ்வில் ஏற்பட்ட பேரிழப்பாகும். அதைத் தொடர்ந்து எனது சூரியக்கற்பனைகள் மெல்ல வெந்து சிதைந்து போயின. அந்தச் சோகம் உள்மனதில் பூட்டிவைக்கப்பட்டு மெதுவாகச் சிதல் பிடித்தது. அன்று அதை என்னால் உணர முடிந்தாலும் வாய்விட்டு யாரிடமும் சொல்ல முடியவில்லை.

ஊர்காவற்றுறைக் கோட்டில் அப்பாவின் திறமைக்கு ஏற்ப வழக்குகள் வருவதில்லை என்ற குறை, நிறையக் காலமாகவே அவரை அரித்தது. அதை நிவர்த்தி செய்யப்

போவதாக அப்பா திடீரெனக் கொழும்புக்குப் புறப்பட்டுச் சென்றார். அப்பா கொழும்புக்குச் சென்றால் என்ன தொலைந்தா போய்விடுவார் என்று நாங்கள் அதை மறந்து போய் இருந்தோம். இப்படியும் நடக்கலாம் என்று எப்பொழுதும் நாங்கள் மருட்சி கொள்ளவில்லை.

யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த எங்கள் வயதை ஒத்தவர்கள் எல்லோரும் போராட்டகாலப் பிரசவங்களே. அறிவு தெரிந்த நாளில் இருந்து குண்டு வெடிப்புகள், பீரங்கிகள், துப்பாக்கிகள், யுத்தவிமானங்கள் ஏற்படுத்தும் சத்தத்தைத் தவிர வேறு எதுவும் எமது மூளையில் பதிந்ததில்லை. போரோசை கேட்டு ஓட எப்போதும் தயாராக இருந்த இயந்திரங்களாய் நாங்கள் இசைவாக்கம் அடைந்தோம்.

போரோசை கேட்ட போதெல்லாம் எங்கள் உயிர்களைக் காப்பாற்றிக் கொள்வதாக எண்ணி ஓடுவோம். சொந்த நாட்டில் அகதியாகப் பிறந்த கூட்டத்தில் நானும் ஒருத்தி. என்னைப் பார்த்தோ, ஈழத்தின் அவலத்தைப் பார்த்தோ எதுவும் நின்று விடவில்லை. வருடங்கள் கட்டுக்கடங்காத காளையாக, நடப்பதை நாங்கள் ஊகிக்க முன்பு, நம்மைப் பின்தள்ளி அது முன்னோக்கி ஓடியது.

இரண்டாம் திகதி யூன் மாதம் ஆயிரத்து தொள்ளாயிரத்து எண்பத்தி ஏழாமாண்டு இந்தியா ஆயுதமற்ற உணவுக்கப்பலை இலங்கைக்கு அனுப்பி வைத்தது. பின்விளைவு பற்றி சிந்தியாது அதை இலங்கைக் கடற்படை திருப்பிவிட்டது. அதற்குப் பதிலாக இந்தியா நாலாம் திகதி வானில் இருந்து உணவுப் பொட்டலங்களைப் போட இலங்கை அரசு பெட்டிப் பாம்பாக அடங்கிக்கொண்டது.

இந்திய சமாதானப்படை வந்தபோது தமிழ்மக்கள் சமாதானமே வந்துவிட்டதாய் எண்ணி மகிழ்ந்தார்கள். இந்திய இராணுவம் இலங்கையில் வந்து நின்ற காலமது. நான் அன்று பரீட்சை எழுதச் சென்றேன். அவர்கள் வழியில் பேனா தந்து என்னை பரீட்சைக்கு அனுப்பிவைத்தார்கள். அதே இந்திய இரணுவம் பல இடங்களில் கோரத்தாண்டவம்

ஆடுமளவிற்கு சூழ்நிலை விரைவாக மாறியது. அதற்காக அனைத்து தரப்பிடமும் இருந்து ஆயிரமாயிரம் காரணங்கள் தயாராகக் குதித்து நிற்கும். அதை எந்தக் கேள்வியும் அற்று அல்லது உயிருக்குப் பயந்து நம்ப ஒரு பெரிய மக்கள் கூட்டம் தயாராகவே இருந்தது. விளைவு சமாதானப்படை எதிரியாகவும், எதிரியான சிங்கள அரசு நண்பனாகவும் மாறியது.

யுத்தத்தில் எந்த இராணுவமும் புத்தரின் தத்துவத்தைப் போதிப்பதில்லை என்பதைப் புத்தரின் தாய்நாட்டில் இருந்து வந்தவர்கள் போதித்து முடித்தார்கள். சிங்களவர்கள், தமிழர்கள் என எல்லோரது இரத்தத்திலும் தமது கைகளை நன்கு நனைத்துக் கொண்டனர்.

காற்று மாறிமாறி அடித்தது. மனிதர்கள் சருகுகளாக இழுத்துச் செல்லப்பட்டார்கள். பொய்யை உண்மையாக்கி... உண்மையைப் பொய்யாக்கி... சிலகாலம் நடித்து... நிரந்தரமாய் அழிந்து... வடுக்களை மட்டும் வரலாறாக எமது தாய்பூமியில் எழுதிக் கொண்டு போனார்கள்.

இத்தனை அவலங்களுக்கு மத்தியிலும் எமது கல்வி மோகமும், அதைப் படிக்கும் பாடசாலை மீதான மோகமும் குறைந்தபாடாய் இருக்கவில்லை. காரைநகரில் படிப்பதை எப்போதும் மட்டமாகத்தான் பார்த்தார்கள். உழுகிறமாடு ஊருக்குள்ளேயே உழும் என்பது இந்த விடயத்தில் ஒருபோதும் எடுபடுவதில்லை. ஆலடி, வேம்படி, சின்னாலடி என காலையில் யாழ் செல்லும் பேருந்திற்காக அலைமோதும் குமரிகளுக்கும், குமரன்களுக்கும் குறைவிருப்பதில்லை.

என்னைவிட மூன்று வயது குறைந்தவள்தான் எனது அன்புத் தங்கை சங்கீதா. அவள் சங்கீதம் பாடுகிறாளோ இல்லையோ அவள் வாய் மூடியிருந்ததை நான் பார்த்தது அரிது.

அவளுக்கு எப்போழுதும் கதைத்துக் கொண்டே இருக்க வேண்டும். எனக்கு பெரும்பாலும் அமைதியாக இருக்க

வேண்டும். எதிரெதிரான இக்குணங்கள் இருந்தாலும் நாங்கள் சிநேகிதிகளாகப் பழகும் நெருக்கம் பலரைத் திகைப்பூட்டும். அது எங்கள் இருவரையும் இணைபிரியாது சேர்த்து ஒட்டி வைத்தது.

வேம்படி பெண்கள் கல்லூரியில் 1990ஆம் ஆண்டில் சங்கீதா சேர்ந்தாள். அடுத்த ஆண்டு காரைநகரையே விட்டு வெளியேற வேண்டி வரும் என்பதான உணர்வு அப்போது எங்களுக்கு இருந்ததில்லை. அடுத்த ஆண்டில் போராளிகள் முன்னாலே ஓட, கோஷ்டி கானம்பாடிய படி மக்கள் அவர்கள் பின்னாலே ஓட வேண்டியதாகிற்று.

சங்கீதா வேம்படியில் சேர்ந்து படித்தாள். அது பாட்டிக்குப் பேத்தி பல்கலைக்கழகத்தில் சேர்ந்து படித்த பெருமையைத் தந்தது. தெருவில் போகின்றவர்கள் வருகின்றவர்களைக் கூப்பிட்டு, காது புளிக்கப் புளிக்க பேத்தியின் பெருமை பேசியதால் உண்டான ஆக்கினையைத் தாங்க முடியாது பலர் மொட்டாக்கு போட்டுக் கொண்டு பூனைகளாக எங்கள் வீட்டு வாசலை அவதானமாக கடந்து செல்வது வழக்கமாகியது. அப்படியும் அவர்களின் கால் தடங்களில் பிசகல் ஏற்பட்டுச் சத்தம் உண்டாகிவிட்டால், கண்ணை மூடித்தூங்கும் பாட்டியிடம் இருந்து அவர்கள் தப்பிவிட முடியாது.எந்தக் குற்றமும் செய்யாத அவர்களுக்கு பலமணித்தியாலத் தண்டனை பாட்டியின் கோட்டில் எந்தத் தயவு தாட்சண்ணிய மும் இன்றிக் கொடுக்கப்பட்டுவிடும்.

சங்கீதாவும் பாட்டியின் வாயில் ஒரு பகுதியை பெற்று வந்தவளைப் போல எல்லாவற்றிற்கும் விளக்கம் கேட்டுக்கொண்டே இருப்பாள். பாட்டியின் வயதை எட்டினால் பாட்டிபோலவே இவளும் இருப்பாள் என்று நான் பலவேளை நினைப்பது உண்டு. அப்படி நினைத்து அதை அடக்க முடியாது சிரித்தால், எதற்குச் சிரித்தேன் என்பதற்கு விளக்கம் சொல்லுவது பெரும்பாடாகப் போய்விடும்.

வெளிநாட்டில் நிரந்தரமாக வாழ்ந்தவர்கள் புலிகள் யாழ்பாணத்தைச் சிங்கப்பூராக்கிய பின்புதான் அதை ஆட்சி

செய்தார்கள் எனக் கனவு கண்டது வேறு. யதார்த்தம் வேறு, நாங்கள் சோப்புத் துண்டிற்கே தவம் கிடக்க வேண்டி இருந்தது. உணவைக் குறைத்துக் கொள்ளலாம். நாங்கள் அதற்குத் தயாராகவும் இருந்தோம். சரி உடையில் சிக்கனம் பிடிக்கலாம். கூரையில்லை என்றால் மரநிழலின்கீழ் படுத்து உறங்கலாம். நாற நாறத் திரிய வேண்டும் என்றாலும் நாங்கள் தயாராக இருந்தோம். இப்படி எல்லாவற்றையும் சாமாளிப்பதற்கு தயாராக இருந்த யாழ் மக்களிடம் வந்து உங்கள் பிள்ளையையும் தாருங்கள் என்று கொடுத்த நெருக்கடி நாளுக்குநாள் அதிகரித்தது.

# ௩

1999 ஆம் ஆண்டு யாழ் பல்கலைக்கழக விடுமுறை கிடைத்த போது அம்மாவோடு கொழும்பிற்கு வரும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. எங்களுக்காக வெளிநாட்டில் வாழ்ந்த அக்கா வத்தளையில் ஒரு வீடு வாங்கி விட்டிருந்தாள். நான் வத்தளை வீட்டிற்குச் சென்று தங்கையோடு இனிமையாகக் காலத்தை கழிக்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. வத்தளை வீடு வசதியானது. எனக்கு கொழும்பின் பரபரப்பான வாழ்க்கையைப் பார்க்க அதிசயமானதாகவும், வித்தியாச மானதாகவும் அது தோன்றியது. அந்த வித்தியாசம் அலுப்புத் தரவில்லை.

கொழும்புக்குத் தங்கை எனக்கு முன்பே வந்துவிட்டாள். அதற்காக என்னைக் கையை பிடித்து குழந்தைப் பிள்ளைபோல் பாதுகாப்பாக அழைத்துச் செல்லும் போது அவளுக்கு நல்ல பேச்சுக் கொடுக்க வேண்டும் போலத் தோன்றும். ஆனாலும் நான் வாய் திறப்பது இல்லை. எனது மென்மையைப் பார்த்துவிட்டு பலர் என்னுடன் மென்மையாகப் பழகுவார்கள். அந்த மென்மையை ஒரு காரணமாக வைத்துக் கொண்டு என்னை யாரும் துர்ப்பிரயோகம் செய்வார்களா என்கின்ற எண்ணம் என் மனதில் ஒருபொழுதும் எழுந்தது இல்லை.

கொழும்பில் இருக்கும் பொழுது, நாங்கள் ஒரு நாள் மாலை புறக்கோட்டைக்குப் பொருட்கள் வாங்கச் சென்றோம். வீட்டில் இருந்த எல்லோரும் படையாக அங்கு சென்றபோது தங்கைதான் அதற்குத் தலைமை தாங்கிச் சென்றாள். அவளின் கைப்பைக்குள் அம்மாவின் அடையாள அட்டை, பணம் எல்லாம் பத்திரமாக இருக்கும் என்பது எங்கள் எண்ணம். அவளுக்கு கொழும்பு தெரியும் என்கின்ற அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. அந்த நம்பிக்கை அன்றோடு இருந்த சுவடு தெரியாது அழிந்து போகும் என்று நாங்கள் எதிர் பார்க்கவில்லை.

தங்கையின் கைப்பையில்தான் காசு இருக்கும் என்பதை எப்படி அவன் அறிந்து இருப்பான் என்பது இன்றும் எனக்கு வியப்பானதே. அவளது கைப்பையை நைசாகத் திறந்து, பெர்சை எடுத்து, பின்பு அதன் சிப்பை இருந்ததுபோல் மூடி, தனது அலுவலைக் கச்சிதமாக முடித்துவிட்டுச் சென்றதை சுற்றி நின்ற நாங்கள் யாரும் கவனிக்கத் தவறியது விந்தையாகவே இருந்தது. சிலவேளை எல்லோருடைய கைப்பையும் அவர்கள் திறந்து மூடியிருப்பார்களா என்பதும் எனக்குப் புரியவில்லை. எந்தத் தடயமோ, சந்தேகமோ எங்களுக்கு வருவதற்கு முன்பு அது நடந்து முடிந்துவிட்டது. பேருந்தால் இறங்கி கடைக்குப் போன போதுதான் பணம் தேவைப்பட்டது. அப்போது எல்லோருக்கும் திடீர் அதிர்ச்சிதான் ஏற்பட்டது.

பணம் போய் இருந்தால் பரவாயில்லை. அடை யாள அட்டை என்பது இலங்கையில் உயிர்வாழ்வதற்கான கடவுச்சீட்டு. அது இல்லை என்றால் நேராக பூசாவிற்கு போக வேண்டி வரும். அது சித்திரவதைக்கூடம். நல்ல வேளை யாக அது அம்மாவின் அடையாள அட்டையாக இருந்து விட்டது. அம்மா கொஞ்சம் வயது போன கோலத்தில் இருந்தா. அம்மாவின் இளமையும் பொலிவும் தங்கை இயக்கத்திற்குப் போனதிலிருந்து வடிந்துவிட்டது. நான் அடையாள அட்டை யைத் தொலைத்து இருந்தாலோ அல்லது தங்கையின் அடையாள அட்டை தொலைந்து இருந்தாலோ இந்த வரலாறு

வேறுவிதமாக மாறி இருக்கும். கேடுகாலத்திலும் ஒரு நல்ல காலம் ஒளிந்து இருந்ததை என்னால் பின்பு உணரமுடிந்தது.

அம்மாவின் அடையாள அட்டை தொலைந்தது எங்களது யாழ்பாணப் பயணத்தை தடை செய்தது. என் வாழ்வின் திசை ஒட்டுமொத்தமாக மாறப்போவது எனக்கு அப்பொழுது தெரியவில்லை. அம்மாவின் அடையாள அட்டை தொலைந்தது என்னைப் பெரும் அவதிக்குள்ளாக்கியது. யாழ் சென்று பல்கலைக்கழகத்தில் நான் தொடரவேண்டிய கல்வியை கேள்விக்குறியாக்கியது.

தங்கைக்கு சிலவேளை அபூர்வமான யோசனைகள் துள்ளிக் குதித்து வருவது உண்டு. கொழும்பு பல்கலைக் கழகத்தில் இடம் கேட்போம் என்று அவள் ஒரு ஆலோசனை சொன்னாள். எனக்கும் அது எல்லோரும் ஒரே இடத்தில் இருக்கும் நிம்மதியைத் தருவதோடு, தற்போது அம்மாவிற்கு அடையாள அட்டை இல்லாத பிரச்சனையில் இருந்து தப்பிக்க வழியாகவும் இருக்குமெனத் தோன்றியது.

கொழும்பு பல்கலைக்கழகத்தில் நாங்கள் இடம் கேட்ட போது கொழும்பில் இருந்து ஒருவர் யாழ்பல்கலைக் கழகத் திற்குச் சென்றால்தான் கொழும்பில் இன்னொருவருக்கு இடம் கொடுக்கமுடியும் என்கின்ற வளைக்க முடியாத வில்லைப் பதிலாக தந்தார்கள். புரிந்து போயிற்று. கொழும்பு பல்கலைக் கழகத்தில் நடக்கமுடியாத சுயம்வரத்தைப் பற்றிக் கனவு கண்டு கொண்டு இருக்காமல், எங்கள் முயற்சி அதை அடுத்து ஜெயவர்த்தனபுர பல்கலைக்கழகத்தில் இடம் தேடும் வேட்டை தொடர்ந்தது. அதில் எங்களுக்கு எதிர்பாராத வெற்றியும் கிடைத்தது.

எங்களுக்குப் படிப்பில் நிறைய அக்கறை இருந்த காலம் அது. படிப்பு என்பது அப்போழுது கற்பூரமாய் மூளையில் பற்றிக் கொண்டது. நாங்கள் சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் பட்டயக் கணக்காளர் வகுப்புகளுக்குப் போகத் தொடங்கி இருந்தோம். அதன் பலாபலனாக கைநிறையச் சம்பளத்தோடு

சுகமாக காலம் தள்ளலாம் என்கின்ற மனக்கோட்டை ஒன்று பிரமாண்டமாய் என்னுள் எழுந்து நின்றது. அந்த வகுப்பு விதிகளின்படி நடைமுறைப் பயிற்சிக்காக வேலை செய்ய வேண்டும் என்கின்ற கட்டாயம் இருந்தது. அதற்காக நான் ஒரு அலுவலகத்தில் வேலைக்குச் சென்றேன். அந்த வேலைத்தளம் என் வாழ்வை வேட்டையாடும் ஆரம்பக் களமாகும் என்பது எனக்கு அப்போது தெரியவில்லை. ஒரு வேலையிடத்தில் என் வாழ்வின் தடம்மாறி, பின்பு அது ஊர்போகாத அளவிற்குத் தடம் புரளும் என்று கற்பனை செய்ததுகூடக் கிடையாது.

முதலில் நாங்கள் ஐந்தொகையைச் சமன் படுத்தத் தொடங்கினோம். வகுப்பிலே முதலில் படித்ததும் அதைத் தான். அதுதான் கணக்காளர்களின் பிள்ளையார் சுழியாக இருக்க வேண்டும். அதில் வெற்றி பெற்றால் சந்தோஷப்பட்டு ஆரவாரிப்போம். வெற்றி பெறாதவிடத்து மீண்டும் மீண்டும் திருப்பிச் திருப்பிச் செய்து சரிப்படுத்துவோம். அதிலும் பிழைத்தால் எரிச்சல் மண்ட, பலரோடு கூட்டாக அதற்கு விடை காண்போம். ஆரம்பத்தில் ஐந்தொகையை மேலிருந்து கீழ்செய்து சரி பார்த்தோம். சரிகள் எப்போதும் சரியாக இருக்க முடியாது. எங்கும் ஊழல் மேய்கிற நாடு எங்கள் நாடு. எங்கள் பணியிலும் எங்களையும் மீறி ஊழல் மேய்ந்தது. எதிர்த்து எதுவும் செய்ய முடியாது. தலைமைக் கணக்காளரின் பணிப்பின் பெயரில் கீழிருந்து மேலாக ஐந்தொகை நகரத் தொடங்கின. அதில் பல லட்ச இலாபங்கள் அல்லது மில்லியன் இலாபங்கள் காணாமல் போனது. அரசவரியை ஏமாற்றும் இந்தப் பாவத்திற்கு எங்கள் கையெழுத்தும் கணக்காளர்கள் என்ற பெயரில் பலியாகியது. கூறியதைச் செய்ய வேண்டிய பொம்மைகள் நாங்கள் என்பது எங்களுக்குப் புரியத் தொடங்கியது. கையொப்பம் இட்டாலும் அதன் மொத்த பாவமும் தலைமைக் கணக்காளரையே சென்றடையும் என்கின்ற சமாதானம் மட்டும் எங்களைத் தொடர்ந்தும் ஆறுதற்ப்படுத்தியது. ஐந்தொகையில் புகுந்து விளையாடும் ஆர்வம் மட்டும் சோர்ந்து போகாது

மேலிட்டுக்கொண்டே இருந்த காலம் அது. வெளியே பல நிறுவனங்களுக்கும் சென்று எனது பணியைத் தொடரவேண்டி இருந்தது.

நான் வேலை செய்த பட்டயக் கணக்காளர் நிறுவனத்தில் கமலன் என்கின்ற கொழும்புத் தமிழன் ஒருவன் வேலை செய்து வந்தான். கமலன் ஒரு சாதாரண கணக்காளராகவே இருந்து வந்தான். அவன் எப்படிப்பட்டவன் என்பதைப்பற்றி நான் ஒருபோதும் அக்கறை எடுத்துக் கொண்டதில்லை. எனக்கு அப்படி ஒரு தேவையும் எற்படவில்லை. வேலைத்தளத்து நண்பன் என்கின்ற அளவில் அந்த உறவு முடிந்தது.

கமலனிடம் ஒரு கொக்கன் வந்து போய்க் கொண்டு இருந்தான். அவனது முகத்தை பார்த்தது தொடக்கமே அவனை எனக்கு ஏதோ பிடிக்காது போய்விட்டது. அந்த முகத்தில் அப்படி ஒரு அதைப்பு பயமுறுத்திக் கொண்டேயிருக்கும். வன்மமான கோபத்தை மனதிற்குள் மறைத்து வைத்து வேட்டைக்குப் புறப்பட்ட நடிகனாக அது அவனைக் காட்டியது. உள்ளுணர்வு எந்தக் காரணமும் இன்றி "அவனை அண்டாதே" என என்னை எச்சரித்தது. அவன் எதையோ இங்கு வேட்டையாட வந்திருக்கிறான் என்று மனதிற்குள் ஒரு சமுசயம் சொன்னது. அவன் ஆறடியைத் தொட்டு நின்றான். அவனது முகம் அவனின் இருண்ட சில பக்கத்தை காட்டினாலும் தோற்றத்தில் மட்டும மெல்லிய வனாக, கௌரவமான மனிதனைப்போல இருந்தான். அவன் அணியும் உடைகளும் அதற்கு ஏற்பவே இருக்கும். அங்கு வரும்போது ஜீன்சும் சேட்டும் மாட்டி ரையும் அணிந்து வருவான். அந்த முகத்திற்குப் பின்னால் என்ன ஒளிந்து இருக்கிறது என்பது முழுமையாகப் முதலில் பிடிபட மறுத்தது. அவன் சிரிப்பைக் களவு கொடுத்தவன் போல தோன்றினான். அவன் முகம் ஏதோ சில மர்மமான சங்கதி சொல்லியது. அதை என்னால் முழுமையாகக் கிரகிக்க முடியவில்லை. அந்நிய மனிதனைப் பற்றி அதற்கு மேல் ஆராயும் எந்த ஆர்வமும் என்னிடம் இருக்கவில்லை. அதைவிட முகத்தைப் பார்த்து ஒரு

மனிதனைத் தப்பாக மதிக்கிறேனோ என்கின்ற கேள்வியும். இந்த எண்ணம் என் ஏமாளித்தனமான சிந்தனையா? அல்லது நியாயமான சிந்தனையா என்கின்ற குழப்பமாகவும் மாறியது. பின்பு அது நியாயமான சிந்தனை என எண்ணிக் கொண்டேன். அவன் நல்லவனோ, கெட்டவனோ என்பது முழுமையாகப் புரியாவிட்டாலும் அவனைப் பிடிக்க வில்லை என்கின்ற எண்ணம் மாத்திரம் வலுவாகியது.

மதிய இடைவேளையின் போது நாங்கள் கூடியிருந்து கதைத்துக் கும்மாளம் போடுவோம். அப்பொழுது அவனும் அங்கே வருவான். நான் உலகைப் பற்றிய பரிபூரண ஞானம் இல்லாமல் அங்கு இருந்தது எனக்கு அப்போது புரியவில்லை. அவன் எனது அப்பாவித்தனத்தை, உடல் அமைப்பை, கதைக்கும் முறையைப் பார்த்ததோடு, எனது குடும்ப விபரங்களையும் அறிந்து கொண்டான். பின்பு அவன் அவதானமாக என்னைச் சுற்றிக் கண்ணி வைக்கத் தொடக்கினான். அதை நான் உணர்ந்து கொள்ள முடியவில்லை. அவனைப் பிடிக்கவில்லை என்கின்ற நினைப்பு என்னிடம் இருந்தது. ஆண்களின் தந்திரங்களை அறிந்து கொள்ளமுடியவில்லை.

நகலை நம்பி அசலைக் கைவிட்டது எனக்குப் பின்னாளில் தெரியவந்தது. விஜயகுமார நல்லதொரு சிங்கள நண்பன். அதை என்னால் அப்பொழுது புரிந்து கொள்ள முடியவில்லை. அவன் சிங்களவன் என்கின்ற எண்ணம் அவனிடம் இருந்த ஆயிரம் நற்பண்புகளைத் தூரத்தே பிடுங்கி எறிந்துவிட்டது. அவன் சாதாரண உயரமாக இருந்தான். அழகான மீசைவைத்த முகத்தோடு மிகவும் கனிவாக இருப்பான். அத்தோடு அவன் எங்கள் தலைமை அதிகாரி யாவான். அவன் தலைமை அதிகாரியாக இருந்ததே எனக்கு அவன் மேல் நம்பிக்கை ஏற்படுவதைத் தடுத்து நின்றது. நாட்டில் நடந்து கொண்டிருந்த யுத்தத்தின் பாதிப்பு எங்கள் வாழ்வில் மாற்று இனத்தின் மீதான நம்பிக்கையை பிடுங்கி எறிந்துவிட்டது. அன்று ஒருநாள் ஐந்தொகையில் அமளியாக நான் இருக்கும்போது, அங்கு வந்த விஜயகுமார என்னோடு கதைத்துக் கொண்டு இருந்தான். பின்பு சிறிது தயங்கிவிட்டு.

"நாங்கள் கலியானம் செய்து கொள்வோமா?" எனத் திடீரென என்னைப் பார்த்துக் கேட்டான். எனக்கு அது அதிர்ச்சியாக இருந்தது. பின்பு அவர்கள் முறை அப்படி என்பதை உணர்ந்தவளாக, சற்றே நிதானித்து, 'இல்லை வீட்டில் விடமாட்டார்கள்' எனப் பதிலளித்து அவனை வெட்டி விட்டேன். பின்பு அதை மற்றவர்களிடம் சொல்லி வயிறுகுலுங்கச் சிரித்தபோது அவனது நேர்மையைக் கணிக்க முடியாதவளாய் இருந்தது எனக்குப் புரியவில்லை. அவனது நல்ல பண்புகளை அப்பொழுது நான் உணர்ந்து கொள்ளவில்லை. எல்லாச் சிரிப்பிற்கும், இதுவரை ஆடிவந்த ஆட்டத்திற்கும் ஒரு முடிவு இருப்பதாக எனக்குச் சொல்லாமலே எனது வாழ்கை நகரத் தொடங்கியது. அவன் சிங்களத்தில் கேட்போது, சிங்களவனாய் இருந்தபோது, மறுத்த எனக்கு, வஞ்சகமான ஒருவன் தமிழில் கேட்டபோது சுத்தமாய்ப் புரியாது போய்விட்டது. அது எனது சாபமாக இருக்க வேண்டும். மனம் மறுக்க மறுக்க, அந்த மறுப்பை சொற்களாக உதிர்க்கத் தெரியாத கோழையாக நான் இருந்துவிட்டேன்.

அந்தக் கொக்கின் பெயர் தினேஸ் என்று கமலன் கூறினான். எனக்கு வரும் தூதுகள் ஓய்வதாக இருக்கவில்லை. தினேஸ் என்னை விரும்புவதாகக் கமலன் வந்து கேட்டான். முதலில் விருப்பம் இல்லை என்று நான் அவனுக்குப் பதில் அளித்தேன். அவன் என்னைக் கணக்குப் பார்த்து கணக்குப் பண்ணுவதாய் அப்பொழுதுகூட நான் நினைக்கவில்லை. சாதாரணமாக விரும்பியே, என்னைத் தொல்லை பண்ணுகிறான் என எண்ணிக் கொண்டேன். அவன் இரண்டாவது முறை கேட்டபோது "உங்களுக்கு ஒருமுறை சொன்னால் விளங் காதா?" என்று நான் கேட்டிருக்க வேண்டும். அப்படிச் சொல்லி முகத்தை முறிக்கும் அளவிற்கு என்னிடம் தைரியம் இல்லாமல் போய்விட்டது. அது எனது வாழ்வின் திசையை முற்றாகத் திருப்பியது. நான் முட்டாள்த்தனமாய் "அம்மாவை வந்து கேளுங்கள்" என்கின்ற சுய துணிவற்ற பதிலை எந்த முன்பின் யோசனையும் இல்லாது கமலனிடம்

கூறிவிட்டேன். அது என்னைப் பாழ்கிணற்றில் தள்ளும் என்பது பற்றி அப்போது நான் அறிந்திருக்கவில்லை.

மூன்றுநாள் கழித்து எமன் வீட்டிற்கு வந்திருந்தான். அப்படித்தான் சொல்ல வருகிறது. தினேஸ் தனியே வீட்டிற்கு வந்தான். அப்போது வீட்டில் அம்மா, தங்கை, நான் ஆகியோர் இருந்தோம். எனக்கு ஏதோ அவன் வரவு பிடிக்கவே இல்லை. பிடிக்கவில்லை என்று கூறியபின்பு வருபவனைச் செருப்பால் அடித்து கலைத்திருக்க வேண்டும். நான் நடு வீட்டிற்குள் வரவிட்டு வாளாது இருந்தேன். வாயை வைத்துக் கொண்டு இருக்க முடியாத தங்கை, தினேஸுடன் கதைத்து, கதைத்து சிறிது நேரத்தில் நண்பர்களாகியதை நம்ப முடியாதவளாய் பார்த்துக் கொண்டு நின்றேன். அம்மாவும் சிறிது அவனுடன் கதைத்தா. யாருக்கும் அவன் பிண்ணும் சூட்சுமமான வலையைப்பற்றி எதுவும் புரிந்திருக்க வில்லை. அவன் நல்ல பிள்ளையாக சிறிது நேரம் இருந்து கதைத்துவிட்டுச் சென்றுவிட்டான். நான்தான் தேவையில்லாது வெறுக்கிறேனோ என்கின்ற எண்ணம் ஏற்பட்டது.

சில நாள்களின் பின்பு அவனது தாயும் தந்தையும் எங்கள் வீட்டிற்கு வந்தார்கள். அவர்கள் அம்மாவோடு கதைத்துக் கொண்டு இருக்கும்போது மாமியை நான் பார்த்தேன். நான் என்றுமே மேக்கப் போட்டுக் கொண்டதில்லை. அது எனக்குப் பிடிப்பதும் இல்லை. மாமியின் முகத்தில் ஒரு சிறுதுளி தோல்கூட மேக்கப்பிடம் இருந்த தப்பித்துக் கொள்ளவில்லை. மாமி மாமாவுக்கு, மனைவியா-மகளா என்பதை நிதானிக்க இயலாத விதத்தில் அவர்கள் வந்திருந்ததாய் எனக்குப் பட்டது.

தாங்கள் யாழ்ப்பாணத்தில் நல்ல சாதிமான்கள் என்பதை நிரூபிக்க, பிறிதொருநாள் தினேஸின் மாமா — மாமியும் வந்து கதைத்துவிட்டுச் சென்றார்கள். வெளிநாட்டில் இருந்த அக்காதான் அம்மாவிற்கு அடுத்ததாக எங்கள் குடும்பத்தில் வயதில் மூத்தவராக இருந்தாள். அதனால், அவள் என் திருமணத்தை நிச்சயம் செய்யும் பொறுப்பாளிகளில்

ஒருவளானாள். அக்காளுக்கு தினேஸின் புகைப்படம் அனுப்பி வைக்கப்பட்டுச் சம்மதம் பெறப்பட்டது.

திருமணம் நடப்பதற்கு இடையில் அவன் அடிக்கடி தொலைபேசியில் தொடர்பு கொண்டான். தொலைபேசியில் என் தங்கை அவனுடன் வழமைபோல அலட்டிக் கொண்டு இருப்பாள். நான் எப்போதும் போலச் சில சொற்களில் சம்பாஷணையை முடித்துக் கொள்வேன். அவன் எங்களோடு பாசத்தில் கதைக்கவில்லை என்பதும், பலம் பலவீனத்தை கணக்குப் போட்டு வேட்டையாடத் துவங்குகிறான் என்பதும், எங்களுக்கு அப்போது புரியவில்லை. மூன்று அப்பாவிப் பெண்களை ஏமாற்றுவது ஒன்றும் அவனுக்குச் சவாலாக இருக்கவில்லை. அந்த முடிச்சுக்களைப் புரியுமளவிற்குக் கபடமாக எண்ணவும் எங்களுக்குத் தெரியவில்லை.

தங்கைக்குப் பரீட்சை நடந்த அன்று காலையே அவன் எங்கள் வீட்டிற்கு வந்துவிட்டான். மிகவும் அக்கறையோடு அவளை மோட்டார் சைக்கிளில் பரீட்சை நிலையத்திற்கு அழைத்துச் சென்றான். அழைத்துச் சென்றது மட்டுமல்லாது பரீட்சை முடியும் வரை மண்டபத்தில் காவல் இருந்து வீட்டிற்கு திரும்பவும் அழைத்து வந்தான். அந்தக் கரிசனையில் கரைந்து போன என் தங்கை உலகத்திலேயே உண்மை யான அண்ணனை அவனில் கண்டாள். அம்மா மருமகனை மகனாகப் பார்த்து தன்னை மறந்து பூரித்துப் போனா.

எனக்கு அவனைப் பிடிக்கவில்லை என்று கமலனிடம் கூறியதை கமலன் தினேஸிடம் கூறி இருக்கிறான். அவன் அதை அடிமனதில் போட்டு வைத்துக் கொண்டான். அதற்கு எல்லாம் சேர்த்து தங்கையோடும், அம்மாவோடும் தேனும் பாலும் ஒழுகப் பழகிக் கொண்டான். சொந்த சகோதரன் இருந்தாற்கூட அப்படி உதவிகள் செய்து அனுசரித்துப் போய் இருப்பானா என்பது சந்தேகமே. அவனுக்கு மாத்திரம் எந்தச் சந்தேகமும் இருக்கவில்லை. அவன் கணக்குகள் சரியாகவே இருந்தன. இது பாசமல்ல; குழிபறிப்பு என்பதான எண்ணம் என் அடிமனதில் இருந்தாலும் அதை யாரிடமும் உரத்துச் சொல்லாமல் கமுக்கமாகவே இருந்தேன்.

திருமணம் நடப்பதற்கான நாள் நெருங்கிக் கொண்டு வந்தது. அக்காள், அத்தான், பிள்ளைகள் எல்லோரும் வெளிநாட்டில் இருந்து வந்தார்கள். அவர்களோடு தினேஸ் முதலில் பழகிய விதத்தில் அவனை நல்ல மனிதன் என்று அவர்களும் தயக்கமின்றி நம்பினார்கள்.

எனக்குக் குழப்பமாக இருந்தது. எல்லோரும் நல்லவன் என்று கூறுபவனை நான் மட்டும் ஏன் கூடாதவன் என எண்ணுகிறேன்? அவர்கள் எண்ணுவது சரியா அல்லது நான் எண்ணுவது சரியா? என் தலை கலங்கிக் குழம்பியது. என்ன இருந்தாலும் அவன் ஒரு நரியென்றே என் அடிமனதில் ஏதோ ஒரு உணர்வு சொல்லியது.

அவன் பாதிரியாருக்குப் படித்து இருப்பதும், ஆண்டவர் மேல் அளவற்ற அன்பு வைத்திருப்பதும் தெரிய வந்தது. அப்படி என்றால் நல்ல மனிதனாய் இருப்பான் என்கின்ற எண்ணமே எங்கள் வீட்டில் மேலோங்கிற்று. அதுவே முதல் பிரச்சினையை கொண்டு வரும் என்று எவரும் நினைத்து இருக்கவில்லை.

திருமணத்திற்கு முன்பு ஒருநாள் அக்காள், அத்தான், தினேஸ், அம்மா எல்லோருமாக இருந்து கதைத்துக் கொண்டு இருந்தார்கள். அப்பொழுது திருமணத்தை இந்து முறை யிலா அல்லது கிறிஸ்தவ முறையிலா நடத்துவது என்கின்ற விவாதம் திடீரென எழுந்துவிட்டது. எனக்கு அதைப் பற்றி எந்த அபிப்பிராயமும் அப்பொழுது இருக்கவில்லை. அக்காள் இந்து முறைப்படிதான் திருமணம் செய்ய வேண்டும் என்று கருதினாள். அவன் அதற்கு முதலில் ஏதோ காரணமாக ஒப்புக் கொண்டுவிட்டான். அவன் இந்து முறைப்படியும் செய்வதாய் ஒத்துக் கொண்டதில் எல்லோரும் மகிழ்ந்து போனார்கள். திருமணத்தின்போது அது திடீரென மாறிற்று. கிறிஸ்தவ முறைப்படி மட்டுமே திருமணம் நடந்தது. இந்து முறைபற்றிய மூச்சுக்கூட அவன் விடவில்லை. அது பலரின் மனதை நெருடத் தொடங்கி இருந்தாலும், யாரும் எதற்கு இப்போழுது தேவையில்லாத விவாதம் என்கின்ற

எண்ணத்தில் வாயைத் திறக்கவில்லை. திருமணம் வத்தளை வீட்டின் அயலவர்களுக்கு மாத்திரம் சொல்லிக் கொட்டாஞ்சேனைத் தேவாலயத்தில் நடந்தது. அது மோதிரம் மாற்றும் ஒரு சடங்காக மட்டும் இடம்பெற்றது. என் கற்பனையில் இருந்த பெரியதொரு திருமணவிழா பரிதாபமாக எங்கோ மனதின் ஒருமூலையில் அழுதுகொண்டு இருக்கும் சத்தம் கேட்டது. என்னைக் கேட்டு அங்கு எதுவும் நடக்கவில்லை. என்னைக் கேட்டுத்தான் எதாவது நடக்க வேண்டும் என்று சொல்லும் துணிவும் என்னிடம் இருந்ததில்லை. பெண்ணையும் கேட்டுச் செய்யவேண்டும் என்கின்ற நாகரிகமும் அங்கு தலைகாட்டவில்லை. நடப்பது நடக்கட்டும் என்று அமைதி காத்தேன். அந்தத் திருமண வைபவத்திற்குப் பின்பு வரவேற்பு வத்தளையில் இருந்த விடுதி ஒன்றில் நடைபெற்றது. அங்கே கேக் வெட்டினோம். பின்பு விருந்து உபசாரம் நடைபெற்றது.

என்ன நடந்தது என்றே எனக்குப் புரியவில்லை. அவன் ஒரு கிறிஸ்தவனாய் வாழ்வதாய்க் காட்டிக் கொள்ளுகிறான். நான் ஒரு இந்துவாய்ப் பிறந்து வாழ்ந்து கொண்டு இருக்கிறேன். நாங்கள் ஏன் இதைப் பற்றி கதைக்காமல் விட்டிருந்தோம் என்கிற ஞானம் எனக்குக் காலம் தாழ்ந்து பிறந்தது. மதங்களைப் பற்றி எனக்கு எந்த அபிப்பிராயமும் முதலில் இருக்கவில்லை. அவன் ஏமாற்றிய பின்பு நாங்கள் கோட்டைவிட்டதாக மனச்சாட்சி ஏளனம் செய்தது. ஆரம்பத்தில் மதம்பற்றி அவன் எதுவும் கதைக்கவில்லை. அவர்களில் பலர் இந்துக்களாய் இருந்ததால் அவனும் இந்துவாய் இருப்பான் என்கின்ற எண்ணம் எங்களை ஏமாற்றிவிட்டது. அவனது அப்பா பெயர், அவன் பெயர் எல்லாமே இந்துப் பெயர்களாக இருந்தன. அவன் மதகுருவுக்குப் படித்து இருக்கிறான், கிறிஸ்தவ மதத்தை நம்புகிறான் என்றபோது அது ஒரு பெரிய பிரச்சினையாக இருக்காது என்று எண்ணி இருந்தோம். அவன் எங்கள் சடங்குகளை எல்லாம் உதாசீனம் செய்த செயல் எல்லோருக்கும் தற்பொழுது அதிர்ச்சியாக இருந்தது. நாங்கள் ஒருவரும் அதைப்பற்றிக் கதைக்கவில்லை. கதைத்தால் பூகம்பம் வெடிக்கும் என்பது தெரிந்திருந்தது. அதை யாரும் விரும்பவில்லை.

இந்து முறைப்படி திருமணம் நடக்காதது அக்காவுக்குப் பலத்த ஏமாற்றத்தைத் தந்தது. எங்கள் வீட்டில் நான் அமைதியாக இருப்பதற்கெல்லாம் சேர்த்து அவள் தர்க்கம் செய்பவளானாள்.

அன்று இரவு திருமணம் முடிந்த பின்பு வீட்டு ஹாலில் எல்லோரும் அமர்ந்து இருந்தார்கள். அக்காவுக்கு வாயைச் சும்மா வைத்து இருக்க முடியாது, அந்தப் பிரச்சினையைத் தொடக்கிவிட்டாள். அது திடீரெனச் சண்டையாக மாறியது. நான் இடையில் எதுவும் கதைக்கவில்லை. அது என் சுபாவமாக இருந்தது. அத்தோடு எனக்கு வரவர தினேஸைப் பற்றிய உண்மைகள் சிறிது சிறிதாகப் புலப்பட்டன. நல்லவனாகவும் கெட்டவனாகவும் அவனால் நடிக்க முடியும் என்பதை ஓரளவு ஊகித்துக் கொண்டேன். அக்காவும் தினேஸும் கடுமையாகச் சண்டை பிடித்த பின்பு தினேஸ் கோபமாக எங்கள் படுக்கை அறைக்குள் சென்றான். நான் அவனைப் பின்தொடர்ந்து செல்லவில்லை. இருவரும் சண்டை பிடித்ததில் எனக்குச் சற்றுப் பயமாக இருந்தது.

## 4

தமிழன்பன் மீண்டும் பேருந்தில் வந்து ஏறும்போது நான் ஆசனத்தில் இருந்தவண்ணம் புத்தகம் வாசித்துக் கொண்டிருந்தேன். இல்லை வாசிப்பதாக நடித்தேன். எந்த மாற்றமும் இதுவரையும் நிகழவில்லை என்பது அவனுக்குப் புரிந்தது. அவன் இருக்கைக்கு அருகே வந்த போது எச்சரிக்கையான பார்வை ஒன்றை தமிழன்பன் மேல் பாயவிட்டு மீண்டும் எனது புத்தகத்திற்குள் புகுந்து கொண்டேன். இது என்ன நடிப்பு என்பது போல் ஒரு சந்தேகம் அவனுக்கு ஏற்படலாம் என்று எனக்குத் தோன்றியது.

தமிழன்பன் முள்ளுப் பரவிவைத்த ஆசனத்தில் அமர்வதுபோல் என் பக்கத்தில் வந்து அமர்ந்தான்.

பின்பு தான் எழுதி அண்மையில் வெளிவந்த நாவலைக் கையில் எடுத்துக் கொண்டான். இருப்பவளோடு கதைக்க முடியாது என்பது அவனுக்குப் புரிந்து போயிற்று. தொலைக் காட்சியில் ஓடிக்கொண்டிருந்த பழைய தமிழ்ப்படத்தை மீண்டும் பார்க்க அவனுக்குப் பிடிக்கவில்லைபோலும். எழுத்துப்பிழை பார்ப்பது இதற்க்கெல்லாம் தகுந்த பதிலாய் அமைந்தது. அவன் தனது புதிய நாவலான "நவலோகம்" என்பதை எடுத்தான். ஒருமுறை தனது குழந்தையை வருடிக் கொடுப்பது போல அதை வருடிக் கொடுத்தான். ஒவ்வொரு எழுத்தாளனுக்கும் அவனது ஒவ்வொரு படைப்பும் ஒரு புதிய குழந்தையே என்பதை அவன் உணர்வுபூர்வமாய்ச் சில கணங்கள் அனுபவிப்பது போல அது தோன்றிற்று. புத்தகத்தின் பின்னட்டையைத் திருப்பிப் பார்த்தான். அவனது படத்தை சற்றுப் பெரிதாக பின்பக்கத்தில் அச்சிட்டு இருந்தார்கள். அவன் தனது படத்தைப் பார்த்தபோது நானும் அதைக் கடைக்கண்ணால் பார்த்தேன். நான் பார்ப்பது அவனது பார்வைப்புலத்தில் சற்றுத் தெரிந்திருக்க வேண்டும். நான் பார்ப்பதைப் பார்க்க அவன் தனது பார்வையைத் திடீரென என்னை நோக்கித் திருப்பினான். நான் உசாராகிக் கொண்டேன். அவசரமாக முகத்தைத் மறுபக்கம் திருப்பி எதுவும் அறியாதவள் போல நடித்தேன். தமிழன்பனுக்கு சற்று ஏமாற்றமாய் இருந்திருக்க வேண்டும். அவன் சோர்ந்து போனதை மறைப்பதற்குப் பெரும்பாடுபட்டான்.

நான் எதுவும் நடவாதவள் போலத் தொடர்ந்தும் என் கையிலிருந்த புத்தகத்தை வாசித்துக் கொண்டிருப்பதாக நடித்தேன். அவசரத்தில் சென்ற நடத்துநர் தமிழன்பனை இடித்துக் கொண்டு செல்ல அவனது தோள்மூட்டு என்னை இடித்தது. ஒரு கணம் அது இதமாய் இருந்ததாய் எனக்குத் தோன்றியது. மறுகணம் என் கன்னத்தில் நானே ஓங்கி அறைய வேண்டும் போல் துடிப்பு ஏற்பட்டது. நான் அவனை எரிப்பது போலப் பார்த்தேன். தமிழன்பன் செய்யாத குற்றத்திற்கு, 'சொறி சொறி... அவர் இடிச்சதில பட்டிட்டுது' என வழிந்தான். அந்த வழியல் முதலில் நகைச்சுவையையும் பின்பு சற்று

இரக்கத்தையும் என்னுள் வரவழைத்தது. "பரவாயில்லை" - எனது வார்த்தைகள் நாணத்தோடு நெகிழ்ந்து வீழ்ந்தன.

"நான் அதைப் பார்த்தன். எனக்குதான் யார் முட்டினாலும் கரப்பான் பூச்சி ஊர்ற மாதிரி இருக்கும். உங்களப் பாத்தா வேணும் எண்டு இடிக்கிற ஆளாத் தெரியேல்ல. நீங்க கவலப்படாதீங்க..." இதைக் கூறிய பொழுது என்னையே நான் இனம்காண முடியாது என் குரலே எனக்கு அந்நியமாகியது.

தமிழன்பனுக்கு ஏதோ புரிந்திருக்க வேண்டும். அவன் பார்வை அப்படி நெகிழ்ந்திருந்தது. இந்த வெறுப்பிற்கு பின்னே ஒரு பயங்கர வாழ்வு ஒளிந்து இருக்கும் என்பது அவனுக்கு சற்றுப் புலப்படத் தொடங்கி இருக்கலாம் என நினைத்துக் கொண்டேன். அதை என்னிடம் இருந்து அறிய விரும்பியும் அவசரம் என்னுடனான நட்பை முறித்துவிடலாம் என்கின்ற பயம் அதற்குத் தடை போட்டிருக்க வேண்டும். பொறுத்து இருக்க முடிவு செய்தவன் போலத் தோன்றினான். நானாகத் தயாராகுமளவிற்குப் பொறுத்து இருக்க வேண்டும் எனவும் அவள் எண்ணியது போலவும் தோன்றியது. அவன் என்னைப் பார்த்து சிநேகபூர்வமான ஒரு மென்நகை உதிர்த்தான்.

நானும் பொறுக்க முடியாதவளாய் அதற்கு பதிலாக ஒரு மென்னகையை உதிர்த்து, அவனது புத்தகத்தை ஆவலோடு பார்த்தவண்ணம், "உங்கட புத்தகமா அது? நான் அதை ஒருதரம் பாக்க முடியுமா?" என்றேன்.

தமிழன்பனுக்கு மட்டுக்கொள்ள முடியாத மகிழ்ச்சியாகி விட்டது. அவன் முகத்தில் ஆயிரம் சூரியன்கள் சந்தோஷமாய்ப் பிரகாசித்தன. தனது புத்தகத்தை எடுத்து அவசரமாக என்னிடம் நீட்டினான். மின்னல் அடித்த வதனத்தோடும், அடக்க முடியாத ஆவலோடும் நான் அந்த நாவலைப் பெற்றுப் பார்த்தது, அவனை மேலும் ஆனந்தத்தில் அலைமோத வைத்தது.

"எனக்கு நாவல் வாசிக்கிறது எண்டா நிறையப் பிடிக்கும்."

எல்லாவற்றையும் மறந்து "நான் ஒரு புத்தகப் பைத்தியமும்" என்றேன் மெதுவாக.

"தெரியுது."

"எப்பிடி?"

"உங்கட கண்களே அதைக் காட்டிக் குடுக்குதே."

"ஓ. அப்பிடியா?"

"ம்... இப்படிப்பட்ட வாசகர்கள்தான் என்னைப் போன்ற எழுத்தாளர்களின் உயிர் நாடியாக இருக்க வேண்டும்..."

"நீங்கள் நிறைய எழுதி இருக்கிறீங்களா? "

"இல்லை; ஒரு சில நாவல்கள் எழுதி இருக்கிறன்."

"அதையெல்லாம் நான் வாசிக்க வேணும்."

"நீங்கள் யாழ் பொது நூலகத்தில் எடுத்து வாசிக்கலாம்."

"தமிழன்பன் எழுதிய நாவல்கள்...? எண்டு கேட்டா தருவினமா?"

"ம்..."

"நிச்சயமா வாசிப்பன்."

"வாசிக்கிறதோட மட்டும் நிக்காமல் விமர்சனமும் எழுதுங்க. அதுதான் எங்களப் போன்றவார்களுடைய ஏக்கம். அந்த விமர்சனங்கள்தான் எங்களுக்குத் தரப்படும் ஆத்ம திருப்தி."

"நிச்சயமா எழுதுறன்."

"நவலோகம்' என் வாழ்வின் முதலும் கடைசியுமாக என் ஞாபகத்தில் வந்து போயிற்று. 'பொறுக்கி...' என்னை அறியாது அந்த வார்த்தைகள் வந்து திடீரென விழுந்தது.

தமிழன்பன் நடுங்கிப் போய்விட்டான். பின்பு துணிவை வரவழைத்துக் கொண்டு, "ம்... யாரை? என்னை இல்லத் தானே?" என்றான்.

"சீ... நிச்சயமா உங்களை இல்லை."

"அப்பாடா..."

# 5

என் வயது பதினேழைத் தொட்டது. சங்கீதா பதின்மூன்று வயதுச் சிறுமியாக இருந்தாள். இந்தச் சிறுமிகளின் கையில் எந்த ஈவிரக்கமும் இன்றி ஆயுதங்கள் திணிக்கப்பட்டன. அந்தக் கொடுமையை எவராலுமே புரிந்த கொள்ளவோ தடுக்கவோ முடியாது போயிற்று. பெற்றவர்கள் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு, பருந்திடம் இருந்து குஞ்சைக்காக்க போராடும் கோழிகளாக பிள்ளைகளைக் காப்பதற்கு ஒவ்வொரு கணமும் விழிப்போடு இருக்க வேண்டியதாகிற்று. எந்த இழப்புகளும் இன்றி வீரவசனங்கள் பேசியவர்கள் பேசிக்கொண்டே இருந்தார்கள். சிங்கள இராணுவம் போய்விடத் தமிழ் இராணுவம் எங்களை ஆட்சி செய்தது. யார் வந்தாலும் ஊர்களிலே ஊரடங்குச் சட்டம் அமலாக்கப்படும் கோலமே நிலைத்தது.

1994இல் சந்திரிகா ஆட்சிக்கு வந்தவுடன் சமாதானப் புறாக்கள் எங்கள் கூரைகளையும் தாண்டிப் பறந்தன. அந்தப் புறாக்களுக்காகக் காத்திருந்த வேடுவர்கள் கண்ணியைப் பலமாக வைத்தனர். வழமைபோல அந்த புறாக்கள் அரசியல் வலைகளிலே அவசரமாகச் சிக்கிக் கொண்டன. மீண்டும் யுத்தமேகங்கள் யாழ்நகரை வேகமாக அச்சுறுத்தின. 1995ம் ஆண்டு ஜூலை 9இல் இலங்கை இராணுவம் வழமையாகப் பயங்கரவாதிகளை அழிப்பதாகக் கூறி நவாலி தேவாலயத்தில் தஞ்சமடைந்து இருந்த மக்கள்மீதும் நவாலி சின்னக்கதிர்காமம் முருகன் கோவிலில் தாகம் தீர்ப்பதற்காய் ஒய்வெடுத்த அப்பாவி மக்கள்மீதும் குண்டுத்தாக்குதலை மேற்கொண்டது. அதில் 65 மக்கள் ஸ்தலத்திலேயே மாண்டு போக, 150க்கும் மேற்ப்பட்டோர் காயப்பட்டார்கள்.

சம்பவங்கள் நடந்து முடிந்தவிடும். அநியாயமாக அப்பாவிகளின் உயிர்கள் பறிக்கப்பட்டுவிடும். பின்பு அதை வைத்துத் தீவிரப் பிரசாரங்கள் தொடர்ந்து கொண்டே இருக்கும். அநியாயமாக அப்பாவிகளின் பலி பரப்புரையாக உலகை வலம் வரும் வெளிநாட்டில் பிரசாரம் செய்யவும், பாடசாலைகளுக்குச் சென்று உள்நாட்டில் பிரசாரம் செய்யவும் அது வசதிகளைச் சகாயித்தது.

யாழ்ப்பாணம் சிங்கள இராணுவத்தின் கட்டுப்பாட்டில் இல்லாமல் இருந்தாலும், பயத்தில் இருந்து அது விடுதலை பெறாது தவித்தது. பொதுமக்களைப் பற்றி யாரும் சற்றும் கவலைப்படுவதில்லை. மக்களை எப்படிப் பகடைக்காய் களாகப் பாவிக்கலாம் என்பதே இருசாராரின் நோக்கமாகவும், நடைமுறையாகவும் தொடரலாயிற்று.

அன்று காலை அம்மா செய்து கொடுத்த பிட்டையும் சம்பலையும் மத்தியானச் சாப்பாட்டிற்காய் எடுத்துக்கொண்டு சங்கீதா உற்சாகமாய்ப் பாடசாலை சென்றதை நான் பார்த்துக்கொண்டு நின்றிருந்தேன். அதற்குப் பின்புதான் எனது விசேஷ வகுப்பிற்கு நான் போனேன்.

கிட்டத்தட்ட ஒன்பது மணிபோல வேம்படி மகளிர் கல்லூரிக்குள் புலிகள் திடீரெனப் புகுந்து கொண்டார்கள். தலைமை ஆசிரியரால் புலிகளை எதிர்த்துப் பாடசாலையை விட்டு அவர்களை வெளியேற்ற முடியாது. சங்கீதாவின் வகுப்பைச் சார்ந்தவர்களையும் அதற்கு மேற்பட்ட வகுப்பு மாணவிகளையும் ஒன்று திரட்டிப் பிரசாரக் கூட்டத்தை புலிகள் ஆரம்பித்தார்கள். அதிபர் வியர்க்க விறுவிறுக்க குட்டி போட்ட பூனையாக அங்கும் இங்கும் அலைந்தார். அவர்கள் பிள்ளைகளைப் பிடித்துக் கொண்டு சென்றால் பெற்றோருக்கு பதில் சொல்வது அவரது பொறுப்பாகும். பெற்றோருக்குத் தன்னால் பதில் சொல்ல முடியுமா என அதிபர் சிந்தித்தார். அதிபரின் சிந்தனையைத் தின்று மயக்கமே வென்று நின்றது. என்ன அநியாயம் இது என்பது அவருக்குப் புரியவில்லை. பிள்ளைகளைப் பெற்று பலிகொடுக்க முடியுமா? என்கின்ற

கேள்வி அவரை வாட்டியது.தான் அதிபராக இருந்து அதனை ஒப்புக்கொள்ள முடியாது என்பதை அவர் உணர்ந்து கொண்டார். அப்படி என்றால் புலிகளைத் தடுக்க வேண்டும் என்பது புரிந்தது. அது எப்படி என்பது தெரியாது. அதற்கான விடை எங்கோ தொலைந்து நின்றது.

அதிபர் குழம்பிப் போய் இருந்தது. இயக்கத்தினருக்கு இன்னும் வசதியாகப் போய்விட்டது. பதினாலு வயதுடைய பெண்களையே குறிவைத்து அந்தப் பிரசாரக்கூட்டம் நடைபெற்றது.

இதற்கிடையில் அதிபருக்குத் திடீர் ஞானம் ஒன்று உதித்தது. அவர் பீயோனையும் வேறு சிலரையும் அவசர அவசரமாக வெளியே அனுப்பிவைத்தார். அவருக்கு அதில் ஒருவகைத் திருப்தி ஏற்பட்டது. நான் கேட்டால் துப்பாக்கி யைக் காட்டுவார்கள். நேரடியாக மோதிப் பார்க்கட்டும் என்று அவர் முடிவு செய்து கொண்டார்.

பிரசாரக்கூட்டம் நடந்து கொண்டு இருக்கும்போது சில மாணவிகள் முந்திரிக்கொட்டையாக எழுந்து தமது கேள்விக் கணைகளைத் தொடுத்தார்கள். நோக்கி வீசினார்கள். அதற்கு விளக்கம் தருவதாய்க் கூறி அவர்களை அழைத்துச் சென்று வான் ஒன்றில் ஏற்றினார்கள். என் தங்கையின் வாய் ஓய்வில்லாதது. அவளும் மேதாவியாக வாயைத் திறக்க அழைத்துச் செல்லப்பட்டு வானில் ஏற்றப்பட்டாள். அவர்கள் குறியெல்லாம் தமது படையைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்பதில் குவிந்து இருந்தது.

அம்மா பிள்ளைகளை வளர்க்க எவ்வளவு சோதனை களைத் தாங்க நேர்ந்தது என்பதை நான் அன்றாடம் அவாவுடன் இருந்து அனுபவித்து இருக்கிறேன். சட்டத் தரணியான அப்பா திடீரென விலாசம் இல்லாது போன போது, துடுப்பில்லாத ஓடமாய் நடுக்கடலில் எங்கள் குடும்பம் தத்தளித்த போது, அதை காவந்து பண்ணி, எங்களைப் படிப்பித்து, தனது மொத்த அன்பையும் எங்களுக்கே தந்து, எங்களுக்காக வாழ்ந்த அந்தத் தாயிடம் இருந்து ஒரு குஞ்சை

இன்று பறிக்கப் போகிறார்கள் என்றால் அது எப்படி இருக்கும் என்பதைப் புரிந்து கொள்வது இலகுவானது அல்ல.

## 6

தினேஸ் படுக்கை அறையில் இருந்து என்னைத் திடீரெனக் கூப்பிட்டான். ஒருகணம் நான் நடுங்கிப் போனேன். எதற்காக நான் அவனுக்குப் பயப்பட வேண்டும் எனப் பின்னர் எண்ணிய வண்ணம் அவசரமாக உள்ளே சென்றேன். அவன் முகம் பேயறைந்தது போல இருந்தது. அவன் நல்ல கோபத்தில் இருக்கிறான் என்பது புரிந்தது. அவனது கோபத்திற்கு நான் எதுவும் செய்யவில்லையே என்பதால் அவன் என்னை எதுவும் செய்ய மாட்டான் என்று அமைதி அடைய முயன்றேன். ஆண்கள் என்ன செய்வார்கள் எப்படி நடப்பார்கள் என்பதை நான் முன்னர் அனுபவித்ததுமில்லை.

தினேஸைக் காணும்போதெல்லாம் மோகத்திற்குப் பதிலாகப் பயமும் நடுக்கமும் பிறக்கின்றன. நான் என் உணர்வைச் சொல்லித் திருமணத்தை நிறுத்தி இருக்க வேண்டும். அந்த மனநிலைக்கு நான் மாறிக்கொண்டு வரும் போது தங்கையின் கதையை அவனுக்கு சொல்லிவிட்டார்கள். திருமணத்தை நிறுத்தினால் அவன் பொலிஸில் சென்று தங்கை புலிகளின் இயக்கத்தில் இருந்தவள் என்று சொல்லுவான். அப்படி நடந்தால் எங்கள் நிலைமை மிக மோசமாகிவிடும்.

அவன் மற்றவர்களுடன் விரைவாகப் பழக்கம் பிடித்து கதைக்க கூடியவனாய் இருந்தான். அவனை இலகுவாக நம்பிப் பலரும் நட்புக் கொண்டாடினர். அவன் சிங்களம் கதைத்தால் அவன் தமிழன் என்று யாரும் சொல்லிவிட முடியாது. அவன் உச்சரிப்பு சிங்களரையே அதிசயிக்க வைக்கும்.

அவனது திருகுதாளத்திற்கு, கொழும்புத் தமிழன் என்கின்ற அடையாளத்தோடு வாழ்ந்து வந்தது வசதியாகியது.

எனது கோழைத்தனம் எங்களை இப்பொழுது பணயக் கைதிகளாக்கி வைத்திருந்தது.

நான் அறைக்கு உள்ளே போகவும் எதிர்பார்க்காத விதமாக அவன் திடீரெனப் பாய்ந்து எங்கள் படுக்கையறையின் கதவைப் பூட்டினான். அவன் பாய்ந்த விதத்தில் நான் அதிர்ந்து போய் நின்றேன். பூட்டியவன் கோரமான முகத்துடனும், கோபத்தில் சிவந்த கண்களுடனும் என்னை நோக்கித் திரும்பினான். என்னைவிட இரண்டு அடியென்றாலும் அவன் உயரமாய் நிற்பது எனக்கு அப்போது புரிந்தது. அவனது உருவத்தோடு ஒப்பிடுகையில் நான் கோழிக்குஞ்சாக ஒடுங்கிப்போய் நின்றேன்.

அவன் திடீரென எனது தலைமயிரைக் கொத்தாகப் பிடித்து காதைப்பொத்தி ஓங்கி அறைந்தான். என் கண்களுக்குள் திடீரென நட்சத்திரங்கள் மின்னி மறைந்தன. அவன் அடியின் வேதனை காது ஊடாக மூளையில் ஏறியது. கேட்கும் சத்தம் எல்லாம் கிணற்றுக்குள் இருந்து கேட்பது போல ஒலித்தன. நான் முதலில் திகைத்துப் போனேன். பின்பு பயத்தில் நடுங்கி கொண்டு மெதுவாக அழத் தொடங்கினேன். என் கற்பனை வாழ்வு அவசரமாக என்னை எங்கோ அநாதையாக்கிச் சிரித்தது.

நான் அழுவதை அவன் ஒரு பொருட்டாக எடுத்துக்கொள்ளவில்லை. ஒரு மனிதன் அழுதால் அதைப் பார்க்கும் மற்றைய மனிதனுக்கும் கவலை தொற்றிக் கொள்ளும். அது சாதாரண மனிதனின் இயல்பு. சமூக விலங்குகளாகப் படைக்கப்பட்ட மனிதனின் அடிப்படைக் குணம் அது. அந்த இயற்கைப் பரிவு அவனிடம் இருக்கவில்லை. பிறர் படும் துன்பம் அவனுக்கு இன்பமளிப்பதாக எனக்குத் தோன்றியது. என் உடல் எல்லாம் சன்னி கண்டதாய் நடுங்கியது. இது எப்படிப்பட்ட வாழ்க்கையின் தொடக்கம் என்பது புரியவில்லை. அடுத்து என்ன நடக்கப் போகிறது என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை. அவன் என்னை ஈவிரக்கம் இன்றி நிலத்தில் தள்ளிவிட்டான்.

பயத்தில் தெப்பமாக வியர்த்தது. இது முதலிரவு அறையோ, அல்லது கொழும்பு நாலாம் மாடியில் இருக்கும் சித்திரவதை அறையோ என்பது புரியவில்லை.

அதிர்ச்சியில் நடுங்கிக் கொண்டிருந்த என்னை, உயிரே போகும் பயத்தில் உடல் நடுங்கிச் செத்துக்கொண்டு இருந்த என்னை, உண்மை புரியாது மயங்கிக் கொண்டிருந்த என்னை, எந்த ஈவு இரக்கமும் இன்றி, ஒற்றைக் கையால் தூக்கி நிறுத்தி, நான் அணிந்திருந்த பஞ்சாபி மோஸ்தர் உடையை மூர்க்கமாகக் கிழித்தான். பின்பு திடீரென என்னைக் கட்டில்மீது தள்ளிவிட்டான்.

பயம்... வலோற்காரமாக அரைகுறை நிர்வணமாக்கப் பட்ட பரிதவிப்பு... எங்கும் ஓடிவிடமுடியாது கூண்டுக்குள் அடைபட்டதான அவதி. சத்தமிட்டால் அவமானம் என்கின்ற அந்தரம். சண்டையிட வலுவற்றது என்கிற அவலம். நான் சோர்ந்து போனேன்.

நான் பயத்தில் ஒடுங்கிப்போக... அவன் வெறிகொண்ட மிருகமாக, எனது இரு கைகளைப் தனது ஒருகையால் பிடித்து தலைக்கு மேல் அழுத்தி வைத்துக் கொண்டு, மிருகமாகப் பாய்ந்து என்னுள் புகுந்து சுகம் பெற முயன்றான்.

தனது கராத்தே பயிற்சியையும், அதன் நுட்பத்தையும் மிருகத்தனமான அந்தக் கற்பழிப்பை நிறைவேற்ற அவன் பயன்படுத்தினான். என்னுடைய இரு கைகளையும் தனது ஒரு கையால் பிடித்த வண்ணம், கிழித்த பஞ்சாபியை மேலும் கிழித்து எறிந்தான். பயத்தில் நடுங்கிய என்னில் வலுவாக நுழைத்து... அனலாக மனமும் அங்கங்களும் எரிய... ஏதோ மிருக அசிங்கம் நடந்தேறியது. எரிவும் அசிங்கமும் என்னை இம்சிக்க, வீழ்த்தப்பட்ட மரம் போல செயலற்றுக் கிடந்தேன். அந்த இயலாமையிற்கூட “உன்னை நான்தான் கொலை செய்வன்” என்கின்ற வார்த்தைகள் சபதம் போல ஒலித்தன. அதை நிறைவேற்றும் உடற்பலமோ மனபலமோ என்னிடம் இல்லை என்பது எனக்குத் தெரியும். பாஞ்சாலி

போட்ட சபதம் போல எனக்காக பரந்தாமன் வருவானா? இந்தக் கலியுகத்தில் அது எதுவும் நடக்காது என்பது புரிந்த போது பித்துப் பிடித்துவிடும் போன்ற அவலம். ஆகக் குறைந்தது ஓவென்று கத்தி அழ வேண்டும். வெளியே இன்னும் அக்கா, அம்மா, மாமா, மாமி என்கிற உறவுகள் உண்மை புரியாது திருமணம் ஒன்று நடந்ததான திருப்தியில் இருந்தனர். அதையெல்லாம் சட்டென்று போட்டு உடைப்பதா என்கின்ற கேள்வியும் எழுந்தது. அப்படிச் செய்தால் தங்கை முன்னாள் புலியென்று இவன் பிடித்துக் கொடுப்பான் என்கின்ற பயமும் மீண்டும் வந்தது. என்னால் எல்லோரது வாழ்வும் பாழாவதா என்கின்ற எண்ணம் குறுகிழையில் எழுவும், நான் அடங்கிப்போனேன்.

நான் மீளமுடியாத நரகத்தில் விழுந்து கிடந்தேன். அஃது என் விதியாய் அமைந்தது. அதை மீறினால் பலரது தலைவிதிகள் மாற்றி எழுதப்படலாம் என்கிற உண்மையும் உறைத்தது. நான் திரும்பி அட்டையைப் போலச் சுருண்டு குறண்டிக் கொண்டு படுத்தேன். கட்டிலில் கிடந்த பெற்சீற்றால் என்னை மூடிக் கொண்டேன். இன்றுதான் அவன் முதலும் கடைசியுமாக என்னைப் பார்த்ததாக இருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டேன். இந்தச் சபதத்தையாவது நிறைவேற்ற வேண்டும் என்று திடசங்கற்பம் பூண்டேன்.

இரவு முழுவதும் எனக்கு நித்திரை வரவில்லை. ஆயிரம் ஆயிரம் அட்டைகள் என்மேல் ஏறி அலைவதுபோல் அருவருப்பாக இருந்தது. வேதனையில் உடலும் மனமும் இடைவிடாது அழுந்திச் சாம்பியது. அவன் கைகளைக் காணும்போதெல்லாம் பெரும் தேள்களே என்னைத் தீண்டவருவதாய் நடுங்கியது. அவன் முகமும், கண்களும் மனிதப்பிணம் உண்ணும் பிசாசுகளை ஞாபகப்படுத்தி, சாத்தானோடு வாழ விதி என்னைச் சபித்ததா? ஐயோ ஐயோ என்று உரத்துக் கத்தினால் நல்லா இருக்கும் என்று தேன்றியது. விளைவின் பயம் என் விசும்பலைக்கூடத் தடுத்தது.

காலை எழுந்தபோது என்னுடல் அனலாக எரிந்தது. வெட்கத்தோடு நான் வெளியே வருவேன் என்று யாரும் எதிர்பார்த்து இருப்பார்களோ தெரியாது. நான் காய்ச்சலில் கிடப்பதாக தினேஸ் பதை பதைத்து எல்லோரையும் கூட்டி விட்டான். இல்லை; பதைபதைப்பதாக நடித்து எல்லோரையும் கூட்டிவிட்டான். அம்மா அவன் நடிப்பை உணராது அப்பாவியாக ஆனந்தக் கண்ணீர் விட்டுக் கொண்டு இருந்தா. அவன் வன்புணர்ச்சியாளனாக இருந்ததுடன், பெரும் நடிகனாகவும் இருப்பதின் ஆபத்தை என்னால் உணர முடிந்தது. இவனோடு வாழ்வது என்பது நிச்சயமாகப் போராட்டமே. அவன் நடிப்பை பார்க்க எனக்கு மூர்க்கமான கோபம் வந்தது. பல்லும் நகமுமற்ற புலியாக நான் கிடந்து தவித்தேன். அந்த கொடுமையான நடிப்பை பார்த்து எதிர்த்து ஒரு வார்த்தை சொல்ல முடியாதவளாய் அங்கு அநியாயத்திற்குச் சாட்சியாகிக் கிடந்தேன்.

இந்த நாடகம் எல்லாம் முடிந்த பின்பு மருத்துவரிடம் சென்றோம். மருத்துவர் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார். முதல் இரவில் பயப்பட என்ன இருந்து இருக்கும் என்பது அவர் கேள்வியாக இருந்திருக்கலாம். அது முதல் இரவல்ல முதற் சித்திரவதை என்பதை நான் மட்டுமே அறிவேன். அந்த வேதனைகளை, எனது உள்ளக் குமுறல்களை எப்படி வெளியே சொல்ல முடியும்? சொல்வதால் என்னைச் சுற்றி இருப்பவர்களின் நிம்மதியே பறிபோகும். அதைத்தாண்டி எதுவும் செய்யுமளவிற்கு நாட்டு நிலைமை இருக்கவில்லை.

மருத்துவர் என்னைப் பரிசோதித்துவிட்டு பயத்தால் காய்ச்சல் வந்திருப்பதாக கூறி ஊசிபோட்டு விட்டார். அப்படி ஊசி போடும்போழுது அவனை “என்னடா செய்தாய் இவளுக்கு” என்பதுபோல மருத்துவர் பார்த்திருக்க வேண்டும். அவன் வெளியே சென்று நின்று கொண்டான்.

முதலிரவில் நடந்தது போன்ற கற்பழிப்பல்ல; இனி அவனுடைய கையே என்மேல் படக்கூடாது என்பதில் நான்

உறுதியாக இருந்தேன். என் உறுதி அவனது உடல் பலத்தை எதிர்கொள்ளுமா என்கிற சந்தேகமும் எனக்கு இருந்தது. நான் அவனை அண்டாது பார்த்துக் கொள்வதற்கு அரும்பாடுபட வேண்டிதாயிற்று. யாராவது உறவினர்கள் வந்தால் நான் அநேகமாக அவர்களோடு ஹோலில் துணை யாகப் படுப்பது போலப் படுத்துக் கொள்வேன். சிலவேளை மற்ற அறையில் பூட்டிக்கொண்டு படுத்துக் கொள்வேன். அவனோடு படுக்க வேண்டிய கட்டாயம் வந்தால் நான் குடங்கி அட்டையாகச் சுருண்டு கொள்வேன்.

ஒரு நாள் எனக்குத் திடீரென நித்திரையில் அடிவிழுந்தது. நான் என்ன நடந்தது என்கின்ற விபரம் புரியாது அலறியடித்து எழுந்தேன். பயத்தில் தன்னிச்சையாக உடம்பு நடுங்கியது. எனக்கு ஏன் நித்திரையில் அடிவிழுந்தது என்பது முதலில் புரியவில்லை. பின்புதான் அவன் என்மீது கைபோட்டு இருக்கிறான் என்பதும், நான் நித்திரையில்கூட அவனது கையைத் தூக்கி எறிந்துவிட்டுப் படுத்தேன் என்பதும், அந்தக் கோபத்திலேயே அவன் என்னை நித்திரையில் அடித்தான் என்பதும் புரிந்தது. எனக்கு அந்த அடிகள் அப்பொழுது வலிக்கவில்லை. அதற்குமாறாக நான் செய்த காரியம் தேனாக இனித்தது. கனவிலும் அவன் கை என்னில் படக்கூடாது என்கின்ற உறுதி மேலோங்கி நின்றது.

நான் மீண்டும் குடங்கிக் கொண்டு ஒரு மூலையில் படுத்தபோது அவன் மீண்டும் என்னை கட்டாயப்படுத்தாது விட்ட சந்தர்ப்பத்தில் மட்டுமே அவனுடைய மனித குணத்தைக் கண்டதாக ஞாபகம். அந்தச் செயல் எனக்கு அப்பொழுது ஒருவித நிம்மதியைத் தந்தது. அதற்கு வேறு காரணமும் இருந்தது. மீண்டும் என்னைக் கட்டயப்படுத்தி, காய்ச்சல் வந்து, மருத்துவரிடம் சென்று, தன்னிடம் நான் உறவுக்கு வரவிரும்பவில்லை என்கின்ற உண்மை வெளியே தெரிய வந்தால் தனக்குப் பெரும் அவமானமாகும் என்பதாலேயே அவன் பெரிய மனது பண்ணினான் என்பதை அதிக காலம் கழித்தே அவன் வாயாலே நான் அறிந்து கொண்டேன்.

திருமண நாளன்று உறவினர் இருக்கும்பொழுதே என்னை ஈவு இரக்கம் இல்லாது அடித்தான். அப்படிப் பட்டவன் நான் தனித்து இருக்கும் பொழுது என்ன செய்வான் என்பது என்னைத் திகில் கொள்ள வைத்தது. கடவுள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும் என்கின்ற எனது கோரிக்கையைக் கடவுள் கேட்பாரா? அவன் சித்திரவதை எனக்கு தொடர்கதை ஆகியது. அடிவிழும் என்பது எனக்குத் தெரியும். என்னால் கடைசி வரை புரிந்து கொள்ள முடியாத மர்மம் எப்போது எதற்கு அடிப்பான் என்பது மட்டுந்தான். அந்தப் பரிதவிப்பைவிட மரணதண்டனை மேலானது. ஏன் அவனது குணம் திடீர் திடீரென மாறுகிறது என்பதும் எனக்குப் புரியவில்லை. அந்த வெறியோடு என்னை கழுத்தில் பிடித்து சுவரோடு சாய்த்து ஒருகையால் தூக்கினால் நான் முச்சுத் திணற அந்தரத்தில் உயிருக்காக போராடவேண்டி இருக்கும். ஒவ்வொருமுறையும் அவன் அப்படித் தூக்கும் போழுது உயிர் போய்விடுமா என்று எதிர்பார்ப்பேன்.

அவனுக்கு ஒருவிதமான மனநோய் இருக்கிறது என்பது முதலில் எனது சந்தேகமாக இருந்தது. அதை நான் யாரிடமும் கூறமுடியாமலும் இருந்தது. யாரும் அவனிடம் கதைத்தால் அவனைவிட நல்லதொரு மனிதன் உலகத்தில் இல்லை என்றுதான் சொல்லுவார்கள். தெளிவாக உலக விடயங்களை புரிந்தவர்களே அவனை எளிதாக நம்புவார்கள். அவனும் எல்லா விடயங்களையும் அறிந்து வைத்து விளாசித் தள்ளுவான். அவனிடம் அப்படி ஒரு திறமை இருந்தது. இதனால் நான் மீளமுடியாத சேற்றிற்குள் புதைந்து கொண்ட தேர் என்பதை உணர்ந்தேன். என் தவிப்பு இடைவிடாது நீடித்தது. காலம் மாத்திரம் குண்டை எறிந்து செல்லும் விமானங்களாக... என் அழிவு, வேதனை பற்றிய அக்கறை இன்றி, தன் வேகத்தில் நகர்ந்தது.

# 7

தமிழன்பன் துணிவாக இப்போதுதான் என்னை ஒரு முறை காலில் இருந்து தலைவரை ஏறவிறங்கப் பார்த்தான். அந்தப் பார்வையை நான் தற்போது ஆட்சேபிக்கவில்லை என்பதை அவன் உறுதி செய்து கொண்டான். என்னிடத்தில் அவனுக்கு முதலில் பிடித்துக் கொண்டது எனது சிரிப்பாகத் தான் இருக்க வேண்டும். சிரிப்பிலே நான் கஞ்சத்தனம் பார்ப்பதில்லை.

சிரிக்கும் போது ஒளிர்ந்து அழகூட்டும் அந்தத் தெத்திப்பற்கள் பற்றி நிறையவே புகழாரம் கிடைத்தன. பற்களுக்குள் இவ்வளவு அழகு ஒளிந்து இருக்குமா என்கின்ற வியப்பு இவனுக்கும் ஏற்படத்தான் செய்யும் என்பது எனக்குத் தெரியும். அவன் இதுவரையும், எங்கும் தெத்திப் பற்கள் பற்றி எழுதி இருக்க மாட்டான். இன்று என் பற்களைப் பார்த்தபோது அதைத் தன்னால் எழுத்தில் வடித்துவிடமுடியுமா என்கின்ற ஐயத்தில் சிந்திப்பது போல எனக்குத் தோன்றியது.

என் வட்ட முகம் கள்ளாக வெறியேற்ற, ஒளிக்கே காந்த மேற்றும் என் இரு கருவிழிகள் அவனைச் சுண்டி இழுக்க, சுருண்டசில கேசங்கள் நெற்றியில் இருந்த வடுவை மறைத்து கீழே தொடர்ந்து விழும் கறுப்பு ஆறுகளாக நீண்டு செல்ல, அவை இடையிடையே நெற்றியில் தவழ்ந்து விளையாட, காதில் எளிமையான காதணிகள் பளிச்சிட, அதில் இருந்த சிறிய சிவப்புக் கற்கள் நட்சத்திரங்களாய் நளினமாகக் கண்சிமிட்ட, பொது நிறத்தில் மேனி தகதகக்க, மேலே சிவப்பு பிளௌஸும், கீழே கறுப்பு ஸ்கேட்டும் அணிந்து, சிறிதளவு பாதம் உயர்ந்த காலணிகளோடு, அதீதம் இல்லாத ஓர் எளிமையான அழகு நங்கையாக, சராசரி உயரத்தில், என் எளிமையான அழகு மீண்டும் ஒருமுறை தமிழன்பனை என்னைப் பார்க்கும்படி தூண்ட, அவன் பரிதாபமாக வழிந்து என்னைப் பார்த்தபோது, எனக்குள் நீண்ட காலத்திற்குப் பின்பு ஆயிரம் வண்ணத்துப்பூச்சிகள்

மெதுவாக சிறகடித்ததான உணர்வு பீறிட்டுப்பாய, நான் வாழ்வில் முதன்முதல் கிறக்கம் கண்டு இமைகள் விழிக்க மறந்து, இதழ்கள் விரித்து இயற்கையிடம் சரணடைந்தேன்.

பின்பு நான் சமாளித்துக்கொண்டு புத்தகத்தை இரசிப்பதாகப் பாவனைகாட்ட, தமிழன்பன் தன்னை மறந்து என்னை இரசிக்க, பேருந்து வெள்ளவத்தை தாண்டி காலி றோட்டில் கட்டடங்களையும் நிமிடங்களையும் வேகமாகப் பின்தள்ளி, முன்னேறியது.

“பேருந்தில் நான் உனக்கு யன்னல் ஓரம்...” முதலில் ஞாபகத்திற்கு வரமறுத்த பாட்டு இப்போது ஞாபகத்திற்கு வந்தது. பேருந்தில் நான் தமிழன்பனுக்கு யன்னலோரம்... எனது கற்பனை அந்த வசனங்களை திரித்துத் தன்வசப் படுத்தும் முயற்சியில் தன்னிச்சையாக இறங்கியது. அடுத்த கணமே இப்படியும் நான் எண்ணுகிறேனே என்கின்ற கூச்சம் தாக்கியது. வடுக்கள், வேதனைகள் நிரம்பிய என் வாழ்க்கை சுனாமியாக மீண்டும் என்னைத் தாக்க வருவதான கிலி கவ்வியது. என் உடம்பு என்னையும் கேளாது தன்னை ஒருமுறை உதறி உசுப்பியது. எனக்கு நாவறண்டு தாகம் எடுத்தது. நான் மிக முயன்று என்னைச் சமாளித்துக் கொண்டேன். ஆண் மிருகம் ஒன்றிடம் அகப்பட்டிருந்த நினைவுகள் நெஞ்சில் வலித்தன. கண்களை மூடி ஒரு கணம் அந்த வலியைத் தாங்கிக் கொண்டேன். என் கண்ணோரங்கள் சூடாகக் கசிந்து கிடந்தன. அந்த உப்பு ஆறு மாத்திரம் மனிதன் வாழும்வரையும் வற்றாது ஓடுவதற்கே படைக்கப்பட்டிருக்க வேண்டும்.

கண்களைக் கைகளால் அழுத்தி அந்த ஈரத்தை துடைத்த பின்பு அகல விழித்து தமிழன்பனை மீண்டும் பார்த்தேன். அவன் தந்த புத்தகத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டு, நிலைமையைச் சமாளிப்பதற்காக, “நீங்கள் நோர்வேயிலா இருக்கிறீங்க?” அது அசட்டுக் கேள்வியென்று தெரிந்தும் கேட்டுவிட்டேன்.

"தெரிந்து கொண்டுதானே கேட்கிறீர்கள்... அப்பக் கடைக்குச் சென்று அப்பம் இங்கு விற்பீர்களா என்று கேட்பது போல இருக்கிறது உங்கள் கேள்வி" என்றான் அவன்.

"மன்னிக்கவும்."

"நான் சும்மா உங்களை பகிடி செய்வதற்காகச் சொன்னேன்."

"நீங்கள் மிருகமா மனிதரா?" நான் என்னை அறியாது கேட்டுவிட்டேன்.

சற்று விசித்திரமாய் என்னைப் பார்த்த தமிழன்பன் பின்பு, "என்னைப் பார்த்து ஒரு பெண் இப்படிக் கேட்பது புதுமை யாக இருக்கிறது" என்றான்.

"எனக்கு ஒவ்வொரு ஆணையும் பார்க்கும்போதும் இந்தக் கேள்விதான் முதலில் வருகிறது. அதில் எந்தப் புதுமையும் தெரியவில்லை" என்றேன்.

"மன்னிக்க வேண்டும்" என்றான்.

என் உணர்வுகளைப் புரிந்துகொண்டு அவன் வருந்து வது போல இருந்தது. நம்ப முடியுமா? இவனும் ஒரு ஆண் அல்லவா? அந்தக் கடைசிக் கேள்வி இவன் மனிதனா? அல்லது மிருகமா? என்கின்ற போராட்டத்தை மீண்டும் என்னுள் தொடக்கியது. வேட்டைக்குப் புறப்படும் ஆண் மிருகங்கள்... நல்ல வண்ணங்கள்காட்டி... பெண்களை மயக்கி... தங்கள் வயப்படுத்தி... இவனும் வேட்டைக்குப் புறப்பட்ட ஆண்மிருகம் தானே? என் சிந்தனையைப் புறந்தள்ளி,

"நீங்கள் வருந்த வேண்டாம். பதில் சொன்னால் போதும்" என்றேன்.

"எந்த வியாபாரியும் தனது பொருளை நல்லது என்று கூறித்தானே விற்கிறான். அப்போழுது வாங்குபவர்கள்தான் உஷாராக இருக்க வேண்டும். அப்படித்தான் மனிதர்களும். அவர்கள் சொல்வதை வைத்து அவர்கள் நல்லவர்களா

அல்லது கெட்டவர்களா என்று முடிவு செய்துவிடக்கூடாது. நாமும் நமது அறிவைப் பயன்படுத்தி நல்லவர்களா, கெட்டவர்களா என்பதை ஆராய்ந்து முடிவு எடுக்க வேண்டும். இப்போது சொல்லுங்கள் நான் கெட்டவனாகத் தெரிகிறேனா? நல்லவனாகத் தெரிகிறேனா?"

"அதைக் கண்டுபிடிக்கத் தெரிந்திருந்தால் நான் இலட்சம் முறை நரகத்திற்குப் போகாமல் தப்பி இருக்க முடியும். சரி அதை விடுங்கள். நீங்கள் கதைப்பதற்கு இனிமை யானவர் போல இருக்கிறீர்கள்" என்றேன்.

"நாங்கள் பேருந்துப் பயணிகள்... அதற்குமேல் ஆளை யாள் புரிந்துகொள்ளும் அவகாசம் நமக்குக் கிடைக்காது."

"உண்மைதான்... நாங்கள் பேருந்துப் பயணிகள்."

"அது சரி உங்களுக்கு ஏன் ஆண் ஸ்பரிசம் கரப்பான் பூச்சியாக அருவருப்பு உணர்வை உண்டுபண்ணுகிறது?" அவன் திடீரென அதைக் கேட்டான். ஒருகணம் பதில் பேசாது முகத்தை மறுபக்கம் திருப்பிக் கொள்ள வேண்டும்போல் இருந்தது. என்றாலும் அவன்பால் ஏதோ ஓர் ஈர்ப்பு. என்னைச் சமாளித்துக் கொண்டு, "ஓ, உங்களிடம் சொன்னதற்காகக் கேட்கிறீங்களா?" என்றேன்.

"இல்லைப் பொதுவாகவே உங்களுக்கு ஏன் அந்த உணர்வு என்று அறியும் ஆவல்தான்."

"நான் அதைப்பற்றி நினைக்கவோ கதைக்கவோ இப்பொழுது விரும்பவில்லை. நான் முன்பு கூறியதுபோல அது லட்சம் நரகங்களை என்முன்பு கொண்டுவந்து நிறுத்தும்."

"மன்னிக்கவும்."

"எனக்கு அந்த வாழ்வைப் பற்றிக் கதைப்பதால் ஏற்படும் வேதனையைத் தாங்க முடியாது. அந்த வேதனையை அனுபவித்த என்னைத் தவிர வேறு எவராலும் உணர்ந்து கொள்ளவும் முடியாது. எனக்குத் தலையிடி வந்துவிடும். பின்பு உங்களோடு கதைக்காமல் நித்திரை கொள்ள

வேண்டும். நான் முதன் முறை ஒரு எழுத்தாளரோடு கதைக்கிறேன். அந்தச் சந்தர்ப்பத்தை அநியாயமாக்க விரும்பவில்லை. பொதுவாகக் கதைப்போம். என் வாழ்கையைப் பற்றித் தயவு செய்து கேட்காதீர்கள். அது ஒரு நரகம். அதை உங்கள் முன்பு பரப்பி வைத்து அழகு பார்க்க முடியாது. தயவு செய்து... புரிந்து கொள்ளுங்கள்.''

"மன்னிக்கவும்... மன்னிக்கவும்... உங்களுக்கு விருப்பம் இல்லாதது எதையும் எனக்குச் சொல்ல வேண்டியது இல்லை. நான் அதை வற்புறுத்தும் அளவிற்குப் பண்பாடு அற்றவனல்ல.''

"அது சரி நீங்கள் ஒரு எழுத்தாளர் என்கின்ற முறையில் சொல்லுங்கள்... ஆண்கள் பெண்களின் மனதை புரிந்து கொள்ள முடியாத மிருகங்கள்... அதிகாரம் கொண்ட மனநோயாளர்கள்... இல்லையா?''

"ஒட்டுமொத்த ஆண்களிலேயும் நீங்கள் பழி போடுவது சரியான அணுகுமுறை அல்ல. உங்கள் கேள்விக்கு எனது உண்மையான பதில் ஆண்கள் ஒட்டுமொத்தமாக அப்படி இல்லை என்றுதான் வரும், யாராவது ஒரு சிலர் உங்களோடு அப்படிப் பழகி இருக்கலாம். அதற்காக ஒட்டுமொத்த ஆண் களையும் அப்படி எண்ணுவது பிழையானது. ஒவ்வொரு மனிதனும் தனித்துவமானவன்... அதில் பழுதுள்ள ஆண்களையும்... பழுதுள்ள பெண்களையும் சமுதாயத்தில் காணமுடியும். அது இயற்கை. அதற்காக ஆண்களோ, பெண்களோ பொதுவாகக் கெட்டவர்கள் என்று முடிவு செய்துவிடமுடியாது. ஒரு பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம் என்கிற முதுமொழி இங்கு சரியாகாது. ஒவ்வொரு மனிதனும் மறுக்க முடியாதபடி தனித்துவமானவன் என்பது தான் உண்மை. மனிதர்களைப்பற்றிப் பொதுமைப்படுத்திக் கதைப்பது எமது அறிவீனமாக இருக்கும்.''

"நீங்கள் சொல்லுவது சரிதான். ஒவ்வரு மனிதனும் தனித்துவமானாலும், சில ஒத்த குணங்களையாவது பல மனிதர்களிலே காணக்கூடியதாக இருக்கிறது.''

"இருக்கிறது. அதனால்தான் சில மனிதர்கள் மற்றைய சில மனிதர்களோடு மட்டும் ஆழ்ந்த நட்புடன் பழக முடிகிறது என்றும் அநுமானிக்க முடிகிறது."

நீர்கொழும்பில் தரித்து நின்ற பேருந்து யாழ்நகரை நோக்கித் தனது நெடிய பயணத்தை தொடரத் துவங்கியது.

# 8

அன்று காலை பத்து மணி இருக்கும். பீயோன் தனது சைக்கிளில் களைத்து வியர்க்க அவசரமாக வீட்டுக்கு வந்தான். அம்மா சமையல் வேலையில் மும்மரமாக ஈடுபட்டுக் கொண்டு இருந்தா. பாடசாலைப் பீயோன் ஏன் இந்த நேரம் வீட்டுக்கு வருகிறான் என்கின்ற குழப்பம் அம்மாவை முதலில் தாக்கியது.

சங்கீதாவுக்கு ஏதாவது சுகயீனமோ என்கின்ற எண்ணமே அவவை முதலில் நிலை குலைய வைத்தது. பின்பும் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "என்ன தம்பி? என்ன விஷயம்?" பீயோனைப் பார்த்துக் கேட்டா.

"உங்களப் பிறிஞ்சிப்பல் அவசரமா கூட்டியரட்டாம். பள்ளிக்கூடத்துக்க பெடியள் வந்து நிக்கிறாங்கள்."

அம்மாவுக்கு அந்த வசனங்களைக் கேட்டபோதே இதயம் நின்றுவிடும்போல் இருந்தது. நெஞ்சின் ஒருபகுதி இறுகி மூச்சுவிட முடியாது வலிப்பது போல நோக்கண்டது. "என்ர பிள்ளை என்ர பிள்ளை" என அம்மாவின் நாக்கு தன்னை அறியாது அரற்றத் துவங்கியது. அம்மா "தம்பி கொஞ்சம் பொறடா" என்று கூறிவிட்டு அவசரமாக வீட்டிற்குள் ஓடினா. அங்கு கொடியில் கிடந்த ஒரு சாறியை றெஸ்ஸிங் கவுண் மேல் உடுத்திக் கொண்டு, அவசர அவசரமாகக் கதவைப் பூட்டித் திறப்பை எடுத்துக் கொண்டா. பீயோனைக்

கேட்காமலே அவனது சைக்கிளில் ஏறி அமர்ந்து கொண்டு "போ தம்பி" என்றா. அவனும் ஒரு தாயின் உண்மையான வேதனை புரிந்தவனாக அவசர அவசரமாக சைக்கிளை வேம்படி மகளிர் கல்லூரியை நோக்கி ஓட்டிச் சென்றான்.

அம்மா போகும் வழியெல்லாம் "என்ரபிள்ளை என்ர பிள்ளை" என்று அரற்ற, அவவுக்கு நெஞ்சுவலியும் தலைச் சுத்தும் தாக்குவது போல இருந்தது. அதை எல்லாம் புறந் தள்ளி சங்கீதாவை மீட்டு வரவேண்டும் என்கின்ற ஆவேசத்தில் எப்போது பாடசாலைகுப் போச்சேருவேன் என்கிற பறதியிலே போய்க் கொண்டிருந்தா.

பெற்றோர்கள் கூடிவிட்டால் பிடுங்குப்பாடு என்பது வந்தவர்களுக்குத் தெரியும். எனவே, வானில் ஏறியிருந்த எட்டுச் சிறுமிகளுடன் அந்த வாகனம் ஏற்கனவே மாயமாகி விட்டது. பெற்றோர்கள் ஒவ்வருவராக அறிந்து வந்தபோது அங்கு பிள்ளைகளையோ அல்லது அவர்களை ஏற்றி வைத்திருந்த வாகனத்தையோ பெற்றோரால் காண முடியவில்லை. பெற்றோர்கள் ஆயிரம் உணர்ச்சிகளின் சுழலில் அகப்பட்டுத் துடித்தார்கள். இயக்கத்தின் பிரதிநிதிகள் முன்னே நின்றாலும் நீதி கேட்க முடியாது.

பாடசாலையில் இருந்து வாகனம் ஒன்று மாணவர் களுடன் சென்றுவிட்டாலும், புலிகளின் உறுப்பினரான ஆஞ்ச நேயர், பாப்பா, தமிழினி ஆகியோருடன் இன்னும் வேறு சிலரும் அங்கு நின்றார்கள்.

அம்மா சுயத்தை இழந்த பத்திரகாளியாய் மாறினா. அந்த ஆவேசக் கோபத்தில் குளறிக்கத்திய வண்ணம் அவர்களை நோக்கி ஓடினா. இது அவர்களுக்கு அதிர்ச்சியைக் அளித்தது.

"தயவுசெய்து என்ர பிள்ளையத் தாங்கோ. பெடியனா இருந்தாற்கூடப் பறவாய் இல்லை. என்ர பெட்டப்பிள்ளைய கொண்டுபோய் அவளின்ர வாழ்கையக் கெடுக்காதேயுங்கோ. தம்பிமாரே தயவுசெய்து அவள என்னிட்டத் திருப்பித்

தாருங்கோ. நீங்களும் சகோதரங்களோட பிறந்து இருப்பியள். மானம் கெட்டா நாங்கள் வாழ ஏலாது தம்பிமாரே. விரும்பி வந்தாக் கூட்டிக் கொண்டு போங்கோ. அதுக்காக ஏமாத்தி அதுகளை இழுத்துக் கொண்டு போகக்கூடாது.''

ஆஞ்சநேயர் அம்மாவின் கோபத்தைச் சமாளிக்கும் முயற்சியில் ஈடுபட்டான். ஆஞ்சநேயனுக்கு ஒருகால் இல்லை. அவன் ஒற்றைக்காலில் நடமாடுவது அம்மாவுக்குத் தெரியாது. தெரிந்து இருக்கவும் நியாயம் இல்லை. பொய்காலைப் பூட்டி ஜீன்ஸ்சும் போட்டிருந்தபோது அவனும் சாதாரண ஒருவனாகவே அம்மாவுக்குத் தோன்றினான். அதைவிட எதையும் கவனிக்கும் மனநிலையில் அம்மா இருக்கவில்லை. அம்மா தன்னை முற்றுமாக இழந்து இருந்த நிலையில் அஞ்நேயர்தான் முன்னுக்கு நின்று சமாதானம் செய்தான். அது அவவுக்கு இன்னும் கோபத்தை உண்டுபண்ணியது. கோபத்தில் பித்தாகி இருந்த அம்மா திடீரெனப் பாய்ந்து ஆஞ்சநேயருக்கு கன்னத்தில் முதலில் அடித்து, சேட்டைப் பிடித்து உலுக்கி... நெஞ்சில் கைவைத்துத் தள்ளினா. அம்மா தள்ளியதில் ஆஞ்சநேயர் நிலை குலைந்து நிலத்தில் விழுந்தான். அம்மாவின் பலத்தை விட ஆஞ்சநேயரின் ஊனமான காலின் பலவீனமே அதற்குக் காரணம்.

இந்த திடீர்கலவரம் அவர்களுடைய இந்த நடவடிக்கை யைச் சீர்குலைத்து. அத்தோடு அவர்கள் மேற்கொண்டும் அங்கு நிற்க முடியாத நிலையை உண்டு பண்ணியது. பிறிஞ்சிப்பல் புத்திசாலித்தனமாக மணியடிப்பித்துப் பாட சாலையை மூடச்செய்தார்.

ஆஞ்சநேயர் அப்படி வேரற்ற மரமாய் நிலத்தில் விழுவான் என்று அம்மா எதிர்பார்க்கவில்லை. அவன் அப்படி விழுந்தது அவவிற்கு சற்று அதிர்ச்சியாகவும் பயமாகவும் இருந்தது. கோபத்தில் தனது எல்லையைத் தாண்டி விட்டேனோ என்கின்ற ஒருவித நடுக்கம் ஏற்பட்டது. திடீரென வந்து மண்டையில் போட்டுவிட்டுப் போனால் மிஞ்சியிருக்கும் பிள்ளைகளும் அனாதையாகிவிடுமே என்கின்ற கவலை பற்றிக் கொண்டது.

உதவிக் கரங்களோடு எழுந்து கொண்ட ஆஞ்சநேயர் அவ்வளவு சனத்திற்கு முன்பு யாரையும் அவமானப் படுத்தவோ நோகடிக்கவே விரும்பவில்லை. அது தமக்கு இன்னும் அதிக அவப் பெயரை உண்டு பண்ணும் என்பதில் அவன் தெளிவோடிருந்தான். அவன் அப்படிக் கோவிப்பதற்குப் பதிலாக அம்மாவையும் மற்றவர்களையும் தற்காலிகமாகச் சமாதானப் படுத்தும் முயற்சியில் ஈடுபட்டான்.

"நாங்களும் உங்கட பிள்ளையளப் போலதானே அம்மா? உங்கட பிள்ளையள நாளைக்கு கூட்டிவந்து விடுகிறம். நீங்கள் பயப்படாமல் இப்ப வீட்ட போங்க. நான் இந்தப் பிரச்சினையை நாளைக்குத் தீர்த்து வைக்கிறன். இப்ப தயவு செய்து நீங்கள் வீட்ட போங்கோ. அவர்கள் விரும்பினால், நாளைக்கு உங்கட பிள்ளையள் வீட்ட வருவினம். அதுக்கு நான் பொறுப்பு" என்றான். அவன் கெஞ்சுவது போல அது இருந்தது.

அம்மா ஒருகணம் அப்பாவியாக அப்படித்தான் செய்வார்களோ என நினைத்தக் கொண்டா. பின்பும் அதை நம்ப முடியுமா என்கின்ற சந்தேகம் மெல்லத் தலைகாட்டத் துவங்கியது.

இப்படிச் சமாதானம் கூறிய சில கணங்களில் அவர்கள் பிக்கப்பில் ஏறி அந்த இடத்தை விட்டு மறைந்துவிட்டனர். அவர் தங்களுடன் கொண்டு போன பிள்ளைகள் எங்கே என்கின்ற கேள்வி மாத்திரம் பூதமாய் எழுந்து நிற்க... சுடலைக் குருவியொன்று பாடசாலையை ஊடறுத்துக் கத்திக்கொண்டே போனது...

## 9

**என்** வாழ்வைக் கதைபோல் ஆக்கும் அந்தச் சம்பவமும் என்னை அறியாமலே நடந்தேறியது. சோதனைமேல் சோதனை போதுமடா சாமி என்றாலும் கடவுள் எனக்குச் சோதனை

தருவதில் மாத்திரம் அலுத்துக் கொள்ளவில்லை. வீட்டில் அவன் கொடுத்த சித்திரவதையில் முதல்முறை மாத விடாய் வராமல் நின்றதுகூட எனக்கு ஞாபகம் இருக்கவில்லை. இரண்டாவது மாதமும் அது வராது நாள்கள் நகர்ந்தன. எனக்கு அப்பொழுதுகூட அதைப்பற்றிச் சிந்திக்க அவகாசம் கிடைக்கவில்லை. அம்மா முதல் முறையாக அதைப்பற்றி என்னிடம் கேட்டபோதுதான் எனக்கு அது பற்றிய பயம் பீடித்துக் கொண்டது.

அடுத்த கணம் அவன் என்ன செய்வான் என்கிற திகைப்பில் எல்லா மனித உணர்வுகளும் எங்கோ ஓடி ஒளிந்து கொண்டன. ஒரே ஒருநாள் நடந்த அந்த நிகழ்வால் நான் கர்ப்பமாக இருகும் சந்தர்ப்பம் வராது என்கின்ற வறட்டு நம்பிக்கையோடு மருத்துவரிடம் சென்றேன். எனது அற்ப நம்பிகையைக்கூட கடவுள் கொடூரமாகப் பிடுங்கி ஏறிந்தார். ஒவ்வொரு பெண்ணின் வாழ்விலும் பூரிப்படைய வேண்டிய விடயந்தான் அது. எனக்கு அது அப்படி இருக்கவில்லை. ஒரு மிருகத்தால் நான் கர்ப்பமானது என்னைச் சுட்டு எரித்தது. நான் கர்ப்பத்தைக் கலைக்கலாம் என்று நினைக்கக்கூட முடியவில்லை. அதை செய்யுமளவிற்கு அவன் என்னை தனித்து மருத்துவரிடம் செல்லவும் விடுவதில்லை. நான் வேறு விதத்தில் நடக்கலாம் என்கின்ற பயம் அவனுக்கு அப்போதே வந்திருக்க வேண்டும். எங்கு நான் போவது என்றாலும் அவன் எனக்குக் காவலாக வருவான். எனது உலக அறிவுகூடச் சில விடயங்களில் சூனியம். எனக்கு பிள்ளை எப்படி உண்டாகும் என்பதுகூடப் பல்கலைக்கழகம் செல்லும் வரைக்கும் புரியாமல் இருந்தது. ஒரு நாள் சில சிநேகிதி களுடன் கதைத்த பொழுதுதான் அது உடல் உறவால் உண்டாகும் என்கிற உண்மை புரிந்தது. அநேகமான மாணவர்களுக்கு இந்த உண்மைகளை எட்டு அல்லது ஒன்பதாம் வகுப்புப் படிக்கும் பொழுது தெரிந்து கொள்வார்களாம். மேற்குலகில் இப்படித்தான் நடக்கும் என்று சொல்லிக் கொடுப்பார்களாம். ஏன் எனக்கு இது பல்கலைக்கழகம் சென்றும் தெரியாமல் போயிற்று? அந்தக் கேள்வியே நீயொரு

இளிச்சவாய் என்று என்னைப் பார்த்து நகைக்கும். ஏனோ அப்பொழுது எனக்கு அந்தக் கர்ப்பத்தைக் கலைக்க வேண்டும் என்கின்ற எண்ணம் எழவில்லை. ஒவ்வொரு மனிதனின் மூளையிலும் ஒருபகுதி மூடனாகவும் மறுபகுதி ஞானியாகவும் இருக்கிறது. எனது மூடப்பகுதிதான் என்னை அதிகமாக வழி நடத்தியது போலும்.

முதல்முறை தினேஸ் அடித்ததை அக்காள் அறிந்த பொழுது அவனை விட்டுவிட்டு வருமாறு கூறினாள். நான் பெரிய மேதையாக, வரப்போகும் ஆபத்துகள், சமூக மதிப்புகள், அதைவிட அவனும் ஒருநாள் திருந்துவான் என்கின்ற அதீத கற்பனைகள் ஆகியன என்னைக் குழப்பிக் கொண்டிருக்க நான் மௌனம் காத்தேன். பின்பு கர்ப்பம் என்பதை அறிந்தபொழுதும் அதைக் கலைத்துவிட்டு வருமாறு மீண்டும் கூறினாள். அப்பொழுதும் தினேஸ் ஒருநாள் மாறி நாங்களும் நல்லதொரு குடும்பமாய் இருக்கலாம் என்கின்ற நம்பிக்கை வலுவடையவில்லை. என் நம்பிக்கையில் மண்விழுந்து கொண்டே இருந்தாலும், ஏதோ ஒரு நம்பிக்கைத் துரும்பிலே தொங்கிக் கொண்டிருந்தேன்.

ஒவ்வொரு சனிக்கிழமையும் தன் தங்கையிடம் விருந்திற்குச் செல்வது அவன் வழக்கம். அப்படிச் செல்லும் பொழுது நான் எங்காவது ஓடிவிட்டால், தான் அலைய வேண்டும் என்கின்ற கரிசனையில் என்னை அவன் தனியே விட்டுச் செல்வதில்லை. என்னையும் அழைத்துச் செல்வான். அவனுடைய இந்த யுக்தி எனக்கு நன்றாகவே தெரியும்.

மாமியைப் பற்றி நான் சொற்ப காலத்திலேயே நன்றாக அறிந்தேன். ஆனால் இவ்வளவு மட்டமாக நடப்பா என்பதை என்னால் கற்பனைகூடச் செய்ய முடியவில்லை. என் தங்கை வெளிநாடு சென்ற பின்பு பணம் அனுப்புவாள். எனது சகோதரங்களிடம் என்னை முன்னிறுத்திக் கறப்பது அவனது வாடிக்கையானது. இந்த உண்மை புரிந்தும் என்னைக் கைவிடக் கூடாது என்பதிற்காக எனது சகோதரங்கள் உதவி செய்தார்கள். இம்முறை அவள் உறவினருக்கு பணம்

அனுப்பினாள். அவர்கள் அப்பணத்தில் பழங்கள், பழரசங்கள் போன்றவற்றை எனக்கு வாங்கி வந்து தந்திருக்கிறார்கள்.

பழம் சாப்பிடுவது கர்ப்பமாய் இருப்பவர்களுக்கு கேடு என்றும், அதற்குப் பதிலாய் என்னைப் பப்பாளிப்பழம் சாப்பிட லாம் என்று மாமியும் மச்சாளும் சேர்ந்து புத்திமதிகூறினார்கள். என்னால் ஒருகணம் அதை நம்ப முடியவில்லை. அவர்கள் அதை மீண்டும் கூறியபோழுது நான் ஒரு பிசாசுக் கூட்டத்திடம் சிக்கியிருப்பது கண்டு நடுங்கிப் போனேன். இந்தப் பிசாசுகள் என்னைக் கொன்று எனது இரத்தத்தைக் குடித்தாலும் அதிசயப்படுவதற்கு ஒன்றும் இல்லை என்பதும் எனக்குப் புரிந்தது.

இந்த அற்ப உண்மைகூடவா எனக்குத் தெரியாது. நான் எனக்கு வந்த கோபத்தில் மாமியையும் மாச்சளையும் எதிர்த்துக் கதைத்தேன். அதற்கு கோபித்துக் கொண்ட தினேஸ் நான் கர்ப்பமாய் இருப்பதைகூடப் பொருட்படுத்தாது மூக்கைப் பொத்தி அடித்ததில் என் வாயாலும் மூக்காலும் இரத்தம் வழிந்து ஓடியது.

அடுத்தநாள் காலையும் விடிந்தது. சூரியன் என்னைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தது. அவன் என்னை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றான். அங்கு ஏன் எனக்கு மூக்கால் இரத்தம் வந்தது எனக் கேட்டார்கள். அதற்கு நான் சுவரோடு மோதியதால் வந்ததாகக் கூறி அவன் வழிந்தான். இல்லை இல்லை என்று கத்த வேண்டும் போன்ற உணர்ச்சி வந்தது. வீட்டிற்கு கூட்டிச் சென்று தொண்டையில் பிடித்து தூக்குவான். திருகப்படும் கோழியாக நான் துடிக்க வேண்டும். என்னோடு சேர்ந்து எனது வயிற்றில் இருப்பதும் துடிக்க வேண்டும். இந்த உண்மை உறைக்க நான் எனது சொற்களை மென்று விழுங்கி மனதிற்குள் பூட்டிக் கொண்டேன்.

கருத்தரித்திருந்த நேரத்திலும் ஒரு கணம் சும்மா இருக்கவிடாது, கலைத்து விரட்டி வேலை வாங்கிக் கொண்டிருப்பான். மறுத்தால் என்ன நடக்குமோ என்கின்ற

பயத்தில் நான் அவற்றைச் செய்துகொண்டே இருப்பேன். ஒரு கணம் நான் சும்மா இருப்பது அவனுக்குப் பிடிப்பதில்லை. அது ஏன் என்பதும் புரியவில்லை.

கர்ப்பம் உறுதியான பின்னர், அவனுக்குத் துணி துவைப்பதில் இருந்து சமைத்துக் கொடுப்பதுவரை எல்லாம் ஓடி ஓடிச் செய்தேன். செய்யாவிட்டால் நிச்சயம் அடிப்பான். அப்படிச் சமைத்துக் கொடுத்த பின்பும் அதில் நொட்டை பிடிப்பான். அதற்கும் அடிதான். ஏதோ நல்ல மனது வைத்து அவன் அப்போழுது வயிற்றில் மட்டும் அடிப்பது இல்லை. அவன் கொடுமைக்காரன் என்பதுதான் எனக்கு முதலில் தெரியும். பின்பு அவன் ஒரு மனநோயாளி என்பதை மெதுவாக அறிந்து கொண்டேன்.

அவனை உண்மையில் அப்படி உருவாக்கியது அவன் தாய்தான். எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான் மண்ணில் பிறக்கையிலே. அவன் நல்லவன் ஆவதும் தீயவன் ஆவதும் அன்னை வளர்ப்பினிலே என்கின்ற கண்ணாதசனின் வார்த்தைக்குச் சரியான உதாரணமாய் அவன்தான் இருந்தான். தகப்பனின் அதீத கண்டிப்பும் தாயின் அநியாயத்தையும் பாராட்டி வியக்கும் பண்பும் ஒரு மன நோயாளியை உருவாக்கியுள்ளது. அந்த மன நோயாளியின் வலையில் அப்பாவியாக நான் மாட்டுப்பட்டு இருப்பது எனக்கு மெதுமெதுவாகவே புரியத் துவங்கியது.

ஒரு கற்பழிப்பிலே உற்பத்தியான என் கருவின் பிரசவம் நவலோக மருத்துவமனையில் நடைபெற்றது. அது மிகவும் வசதியான மருத்துவமனைகளுள் ஒன்று. அத்தகைய வசதியை நான் கேட்கவில்லை. அப்படியொரு எதிர்பார்ப்பும் எனக்கு இருக்கவில்லை. உயிர்போய் வரும் அந்தத் தருணம் எனக்கும் வந்தது. அந்தத் தருணங்களில் கூட உயிரை எடுப்பதான அவன் நடிப்பு தொடரும். நவலோகாவிற்குச் சென்றபோது என்னால் வலிதாங்க முடியவில்லை. எதையும் இரசிக்கும் நிலைமையிலும் நான் இருக்கவில்லை. என்றாலும் அவன் ஊராரின் பணத்தில் அதி

வசதியுடைய பிரசவ அறையை ஏற்பாடு செய்து இருந்தது அருவருப்பைத் தந்தது. அந்தச் சனங்களின் மன எரிச்சலில் நானும் எனது பிள்ளையும் என்ன ஆவோம் என்று மனது பதைபதைத்தது. அநியாயத்தில் வந்ததை அனுபவிப்பதற்கு மனம் கூசியது.

என்னைப் பிரசவத்திற்கு உள்ளே கொண்டு சென்றபோது தான் அவனது பைத்தியம் முற்றி இருக்க வேண்டும். அவன் ஒரு சைக்கோ என்பதில் எனக்கு ஐயம் இருக்கவில்லை. என்னைப் பிரசவத்திற்காக உள்ளே கொண்டு சென்றார்கள். அப்பொழுது தான் என்னை அடித்துவிட்டதாக குளறி அழுதது மட்டும் அல்லாமல், தலையைச் சுவரில் அடித்து ஆர்ப்பாட்டம் செய்திருக்கிறான். சிலவேளை நான் பிரசவத்தோடு செத்துப்போய்விடுவேன் என்று முடிவு பண்ணி இருந்தானோ தெரியவில்லை. அவன் ஆர்பாட்டத்தைக் கண்டு அம்மா உருகிப் போய் விட்டா. சாதாரண குடும்பச் சண்டையில் அடித்ததிற்காக அவன் கவலைப்பட்டான் என்று அம்மா நினைத்துவிட்டான். அது கவலை அல்ல. வெறும் நடிப்பு என்பது எனக்கும் அவனுக்கும் நன்கு தெரியும்.

அந்த ஆர்பாட்டம் முடிந்தபோது உறவினர்கள் சிலரும் வந்து சேர்ந்து கொண்டார்கள். அவன் பலகாரம், இனிப்பு, கேக் போன்ற தின்பண்டங்கள் வாங்கி வந்தான். அவர்கள் எல்லோரும் பிரசவம் என்கின்ற எனது வேதனையை சந்தோஷமாய்க் கொண்டாடிக் கொண்டாடினார்கள்.

பிரசவத்தின் பின்பும் என்னை அவன் சும்மா இருக்க விடுவதில்லை. இருக்க விட்டால் அவன் சைக்கோவாக இருக்க முடியாது என்பதும் எனக்குப் புரிந்தது. எனக்கு அப்பொழுது பிரசவத்திற்குப் பின்னான இரத்தப்போக்கு நிற்கவில்லை. வீட்டுக்குப் போய்வர என்னை அழைத்தான். நான் மறுத்த பொழுதும் வலுக்கட்டாயமாகக் கூட்டிச் சென்றான். நான் இரத்தப் பெருக்கோடு அவனுடன் மோட்டார் சைக்கிளில் ஏறிச் செல்ல வேண்டியதாயிற்று. அது ஏற்கனவே இருந்த இரத்தப் போக்கை இன்னும்

அதிகமாக்கியது. வேண்டும் என்றால் எப்படியும் நடிப்பான். உண்மைகள் மாத்திரம் அவனை அண்டுவதேயில்லை.

எனக்கு அவர்களைப் புரிந்து கொள்ளக் கொள்ள வெறுப்பாக இருந்தது. மாமாவைப் பார்த்தால் மாத்திரம் சிலவேளை பரிதாபமாய் இருக்கும். மற்றும்படி அந்த வீட்டிற்குப் போவதற்கு எனக்குப் பிடிப்பதில்லை. தினேஸ் தான் முதலில் அங்கு செல்வதற்குப் புறப்படுவான். அப்படிப் புறப்பட்டு வந்து என்னை மோட்டார்சைக்கிளில் ஏறு என்றால் என்னால் எதுவும் செய்ய முடியாது. அவனது ஒவ்வொரு அசைவிற்கும் பயத்தில் நடுங்கும் நான், எதுவுங் கூறாது புறப்பட்டுச் செல்லுவேன்.

தாய் வீட்டுக்குப் போகின்ற போது அவர்கள் நன்றாக உபசரிப்பதாகத் தென்பட்டது. பாப்பாளிப்பழம் பற்றிய சம்பவம் மனசை உறுத்தவே செய்தது. சிலவேளை இவனுடன் பிள்ளையையும் வைத்துக் கொண்டு சமாளிக்க முடியாது என்று நினைத்து அதைச் சொன்னார்களா? அவர்களுடைய உறவு எப்பொழுதும் குழப்பமயமானதுதான்.

அவர்கள் உபசரிப்பது முதலில் மகிழ்வைத் தந்தது. அவர்கள் நல்லமாதிரிக் கதைப்பார்கள். அது எனக்குப் பெரும் ஆறுதலாகியது. மனிதனுக்கு இரண்டு முகங்கள் உண்டு என்பார்கள். ஆனாலும் அவனது ஒவ்வொரு செயலுக்கும் இரண்டு முகங்கள் இருந்தன.

அவர்கள் என்னோடு நல்லமாதிரிக் கதைத்து அவனைப் பற்றி வஞ்சகமில்லாமல் உளறுவதை அறிந்து கொள்வார்கள். பின்பு நான் இல்லாத வேளை அவனிடம் இவள் இப்படிச் சொல்லுகிறாள், அப்படிச் சொல்கிறாள் என்று அள்ளி வைப்பார்கள். இது எனக்குப் புரியவந்தபோது எல்லாமே வெறுத்துப்போய் விட்டது. கோபத்தில் குணம் மாறும்பொழுது அதையெல்லாம் செல்லிச் சொல்லி என்னை அடிப்பான். அதன்பின்பு எனக்கு மாமிமீது வெறுப்பாகியது. அங்கு சென்றாலும் மௌனத்தை எனது மொழியாக்கிக் காலத்தை அதமாக்கி, வீடு திரும்புவேன்.

# 10

தமிழன்பனுக்கு நான் விசித்திரமானவளாகத் தோன்றி யிருக்கலாம். எனது சோக வாழ்வை யாரிடமும் சொல்ல ஏலாது. அதன் முட்களின் மேல் நான் படுத்து நெளிவதும், சித்திரவதை அநுபவிப்பதும் அவனுக்குப் புலப்பட்டிருக்கலாம். உன் சோகத்தை என்னிடம் சொல் என்று அவனால் கேட்க முடியாது. அது தனது எல்லைக்கு அப்பாற்பட்டது என்பது அவனுக்குப் புரிந்திருக்கும். ஈழம் எங்கும் பெண்களின் சோக வரலாறுகள் நிறைந்து கிடக்கின்றன. ஒவ்வொரு ஈழத்தமிழனின் வாழ்விலும் கற்பனைக்கு எட்டாத சோகம் ஒளிந்திருக்கிறது. அது அடிமனதின் ஆழத்தில் புதைந்து மௌனமாகிய எரிமலையாக குமுறுகின்றது. உயிர்வாழ்வை எண்ணிச்சொற்கள் விதை யடிக்கப்பட்டு விடுகின்றன. அந்தச் சோகத்தைக் கூட வெளியே சொல்வது குற்றம் என்பதான ஆளும் வர்க்கத்தின் பார்வை தொடர்கிறது. அதில் எனது வரலாறும் ஒன்று என அவன் எண்ணியிருக்கக்கூடும். தன்னிடம் நான் அதைச் சொல் வதால் சிலவேளை என் மனம் சாந்தி அடையலாம் என அவன் எண்ணியிருந்து, என் செயல் ஏமாற்றத்தைத் தந்திருக்கலாம்.

“என்ன யோசிக்கிறீர்கள்?” என்றேன் நான் அவனைப் பார்த்து.

“உங்கள் பெயர் என்ன?”

“அதையா யோசித்தீர்கள்?”

“இல்லை. பகிர்வதால் துன்பம் குறையும் என்பார்களே அது உண்மையா என்று சிந்தித்தேன்.”

‘அது இருக்கட்டும் உங்கள் பெயர் என்ன என்று சொல்ல முடியுமா? “ என்றான் அவன் மீண்டும்.

“குமுதினி” என்றேன்.

“நல்ல பெயர்தான்.”

"தமிழன்பன் என்பது இன்னும் நல்ல பெயர் அல்லவா? மனிதர்களை விட்டுவிட்டு மொழிக்கு... அதாவது தமிழுக்கு அன்பனாகவல்லவா நீங்கள் இருக்கிறீர்கள்" என்றேன்.

"ஐயோ போதும். அதற்காகப் பெயரை மாற்றி வைத்துக் கொள்ள முடியுமா என்ன?" என்றான் அவன்.

"உங்கள் பெயரை மாற்றி விடவேண்டாம். ஆனால் என் பெயரை தமிழன்பி என்று மாற்றி வைத்துக் கொள்ள வேண்டும் போல இருக்கிறது. பெயரில்கூட உங்கள் தமிழ் நேசிப்பு என்னை மெச்சவைக்கிறது" என்றேன்.

"உங்கள் புகழாரத்துக்கு மிக்க நன்றிகள்" என்றான்.

"அது சரி. உங்கள் சோகங்களை மற்றவரிடம் சொல் வதால் கரைந்துவிடாது என்று எண்ணுகிறீர்களா?" என்றான் தமிழன்பன்.

ஓர் எழுத்தாளன் குழந்தைபோல அந்த விடயத்தில் தொங்கியது முதலில் எரிச்சலையும், பின்பு இரக்கத்தையுந் தந்தது.

"தெரியவில்லை. மற்றவர்கள் என்னைப் பார்த்து இரக்கப்படுவது எனக்கு அறவே பிடிப்பதில்லை. அதனால் என் சோக வாழ்வை நான் யாரிடமும் சொல்லியதும் இல்லை. உங்களோடு கதைத்துக் கொண்டு இருந்தால் அந்த எண்ணம் மாறிவிடும் போல இருக்கிறது."

"மாறட்டும்; மாறட்டும். மனம் சாந்தி அடையட்டும். அது உங்கள் வாழ்வை சுபிட்சமாக்கும்."

"அது சரிதான். நீங்கள் சாமியாகுங்கள்... அதை விடுங்க... நீங்கள் யாழ்பாணத்தில் எந்த இடம்?" நான் கதையை மாற்றினேன்?

"வேலணை."

"வேலணை என்றால் கரம்பன்... மண்கும்பான்... கயிற்ஸ்... என்று பல குறிச்சியாச்சே, நீங்கள் எந்த இடம்?" என்றேன் நான்.

"மண்கும்பான்."

"நீங்கள் யாழ்பாணத்தில் எந்த இடம்?" என்றான் அவன்.

"நான் உங்கள் பக்கத்து நகரம்... காரைநகர். அதிலே தங்கோடை என்று ஒரு குறிச்சி" என்றேன்.

"ஓ பாலம் இருந்தால் தீவு எல்லாம் நகரமாகிவிடுமா என்ன?" என அவன் நக்கலடித்தான்.

"நீங்கள் என்னதான் குதித்தாலும் இனி காரை நகரைக் காரைதீவு என்று மாற்ற முடியாது அல்லவா?" என்றேன்.

"இலங்கையே ஒரு தீவுதானே... எதற்காக எங்களுக்குள் இந்தப்போட்டி எல்லாம்?" என அவனே சமாதானக்கொடி ஏற்றினான்.

"அதுவும் சரிதான்."

"உங்கள் நட்பு இனிமையானது."

"எழுத்தாளரான உங்கள் நட்புத்தான் இன்னும் பாக்கியமானது."

"எழுத்தாளர்... ம்... இதில் என்ன இருக்கிறது? நாலு வசனத்தைத் தொடுப்பவன் எழுத்தாளனாய், கவிஞனாய் மாறிவிட முடியும். எழுதுவதெல்லாம் வாழ்கையாகிவிட முடியாது. வாழ்கையையெல்லாம் எழுதிவிடவும் முடியாது. ஒவ்வொரு எழுத்தாளனுக்கு பின்னாலும் ஒரு சாதாரண மனிதனும் வாழ்ந்து கொண்டிருக்கிறான். அவன் தனது ஒவ்வொரு செயலுக்கும் நியாய அநியாயங்கள் கற்பித்துத்துக் கொண்டிருப்பான். நாங்கள் கோபுரத்தின் பிரமாண்டத்தைப் பார்த்துப் பிரமிக்கிறோம். அந்தக் கோபுரங்கள் வெறும் கற்களினால் நுட்பமாக உருவாக்கப்பட்டது என்பதைச் சிற்பி அறிவான். மனித பலவீனத்தின் அவலத்தை அநுபவித்து அல்லது அறிந்து வார்த்தைகளின் இசைப்பிலே நெகிழ்ச்சியை ஏற்படுத்துபவன் பிரமிக்க வைக்கும் எழுத்தாளனாக உயருகிறான். எழுத்தாளனும் சரி நீயும் சரி இந்த சமுதாயத்தில் இருக்கும் மனிதர்கள்தானே?

உனக்கு இருக்கும் பல சுதந்திரங்கூட எழுத்தாளன் என்கின்ற பட்டங்கள் கிடைக்கும்போது பறி போய் விடுகிறது. சுதந்திரத்தில் மோகம் கொண்ட பிறவிகளான எழுத்தாளர்கள்கூட தமது சுதந்திரத்தை தொலைத்து அவதிப்படுபவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்களைப் பார்த்து பிரமிப்பதற்கு என்ன இருக்கிறது. சொல்லுங்கள்?" என்றான்.

"ஐயோ என்னிடம் இப்படியெல்லாம் சிக்கலாகக் கேள்வி கேட்டு திக்கு முக்காட வைக்காதீர்கள். எங்களால் செய்ய முடியாத ஒரு படைப்பை உங்களால் உருவாக்க முடிகிறது அல்லவா? அந்தக் கலைத்துவத்திற்கு எங்களைப் போன்றவர்கள் தலைசாய்ப்பதும்... பிரமித்து நிற்பதும் ஒன்றும் புதுமை இல்லை."

"அப்படியல்ல... நீங்கள்கூட ஒரு படைப்பை உருவாக்கலாம். சிறிது அநுபவமும் முயற்சியும் ஞானத் தோடு கூடிய உழைப்பில் உருவாகும் படைப்புக்கள் இவை. மற்றவர்களிடம் இருந்து கிடைக்கும் ஒத்துழைப்பு இன்னும் அதை மினுங்கச் செய்யும். ஞானம் மாத்திரம் இருந்தால் போதாது. படைக்க வேண்டும் என்கின்ற ஓயாத தவனம் இருக்க வேண்டும். அது ஒவ்வொரு நாளும் உன் பிடரியைப் பிடித்துத் தள்ள வேண்டும். நீ சோம்பியபொழுது மனச் சாட்சியாகி உன்னை உதைக்க வேண்டும். அதனால் ஏற்படும் சலனங்களிலிருந்து ஒரு படைப்பு உருவாகுகிறது. நான் முதலில் இலக்கியம் படைப்பதாக என்னை ஏமாற்ற வில்லை. படிப்பு, பயிற்சி, உழைப்பு, என் தவறுகளைத் திருத்தும் பொறுமை; முன்னோடிகளின் படைப்புகளின் நுட்பங்களைத் தெளிதல். சிலருக்கு அது கொடையாக வாய்க்கலாம். அடுத்துத் தன் படைப்பிலிருந்து அந்நியப்பட்டு நின்று விமர்சிக்கும் வித்துவம்."

இந்தப் போதனைக்கு எனக்கு நித்திரை வந்திருக்க வேண்டும். தமிழன்பனைப் பார்த்துக் கொண்டு இருந்ததில் அது எங்கேயோ ஒளித்துக் கொண்டது. ஆண்கள் என்பவர்கள் மிருகங்கள் என்பதை ஞாபகப்படுத்த முயன்றேன். தமிழன்பனின்

முகத்தைப் பார்த்தபோது அந்த வசனம் என்னைவிட்டு வெகு தூரம் ஓடியது. நினைக்க எனக்கே வெட்கமாக இருந்தது. இத்தனை வடுக்கள் ஏற்றபின்பும் ஏன் என் மனது குழம்பிப் போயிற்று? கேள்வி மீண்டும் மீண்டும் என்னை பிறாண்டவும் விடை தெரியாது தவித்தேன். என் தவிப்பு, குழப்பங்கள் என்பனவற்றைத் தமிழன்பன் கண்டுவிடாது முகத்தைக் போருந்தின் கண்ணாடிப்பக்கம் திருப்பிக் கொண்டேன். கண்ணடிக்கு நெற் போன்ற எதையோ ஒட்டியிருந்தார்கள். வெளியே என்ன இருக்கிறது என்பது தெளிவாகத் தெரியவில்லை. உள்ளே இருப்பவர்களும் கண்ணாடியில் என்முகத்தைப் பார்த்துவிட முடியாது. அது எனக்கு வசதியாகிற்று. எனது அமைதி தமிழன்பனை ஏதோ செய்திருக்க வேண்டும். சிறிது நேரம் பேசாது மௌனம் காத்தான்.

## 11

நாங்கள் கஸ்துரியார் வீதியில் குடியிருந்த வீடு வழமையான யாழ்ப்பாண வீடுகளைப் போன்று இரண்டு அறையும் ஒரு விறாந்தையும் கொண்டது. அப்படியான சிறிய வீடுகள் யாழ்ப்பாண மக்களின் சௌகரியத்துக்குப் போதுமானதாக அமைந்தது. இலங்கையின் விமானப்படையும் பெரிய வீடுகளைக் கண்டால் பறந்துகொண்டே தமது குண்டுப் பொதிகளை இறக்கிவிட்டுச் செல்லுவதும் உண்டு.

எங்கள் வீட்டின் ஒருபக்கத்தில், சிலவீடுகள் தள்ளிப் புலிகளின் ஆண் உறுப்பினர்களின் முகாம் இருந்தது. அதையண்டி அவர்களின் பெண் உறுப்பினர்களின் முகாம் ஒன்றையும் அமைத்திருந்தனர். இந்த இரு முகங்களின் நடுவில் நாங்கள் குடியிருந்தோம். எப்போது எங்கள் தலையில் குண்டு வந்து விழும் என்கின்ற நடுக்கம் எப்பொழுதும் உள்ளூர நீடிக்கவே செய்தது.

அன்று நான் சிறப்பு வகுப்பிலிருந்து திரும்பிய பொழுது எங்கள் வீட்டில் இருந்து அழுகுரல் ஓலம் கேட்டது.

யாருக்கு என்ன நடந்து இருக்கும்? யாரோ செத்து விட்டது போன்றுதான் அவர்கள் அழுகொண்டு இருந்தார்கள். அது யாராக இருக்கும்? என் கற்பனைகளுக்கு என்னால் கடிவாளம் போட முடியவில்லை. சிறப்பு வகுப்பிற்குப் போகமுதல் உயிரோடுதானே அம்மம்மா இருந்தா? அப்பா தொலைந்து போனபோது அம்மா நொருங்கிப்போனாள். அப்படி இருந்தும் எங்களை எண்ணி வாழ்ந்தாள். இதுவரை நோய் என்று அவள் படுத்தது இல்லை. அப்படிப்பட்ட அம்மாவுக்கு திடீரென மார்படைப்பு வந்து... அல்லது கிணற்றுக்குள் விழுந்து... அட கடவுளே என்ன நடந்திருக்கும்? என் அம்மா உயிரோடு இருக்க வேண்டும். சிறப்பு வகுப்பிற்குப் போகும்போது எப்படி உயிரோடு இருந்தாவோ அப்படியே இப்போது திரும்பி வரும்போதும் உயிரோடு இருக்க வேண்டும். அப்படியென்றால் எதற்காக அழுகிறார்கள்? ஏன் இப்படி அழுகிறார்கள்? அம்மம்மாவிற்கு ஏதாவது நடந்து இருக்குமா? கடவுளே முருகா ஒன்றும் அசம்பாவிதமாக நடந்து இருக்கக்கூடாது. அப்படியென்றால் ஏன் இப்படி ஒப்பாரி வைக்கிறார்கள்?

நான் அதற்கு மேல் பொறுக்க முடியாதவளாய் வீட்டிற்குள் பைத்தியம் பிடித்தவள் போல ஓடினேன். வீட்டிற்கு உள்ளே போனபோது அம்மா உயிரோடுதான் இருந்தா. நான்கூட உயிருடன் இருக்கிறேன் என்கின்ற எண்ணம் வந்தபோதுதான் சங்கீதா எங்கே என்கின்ற கேள்வி திடுமென எழுந்து முன்னே நின்றது.

“எங்கயம்மா சங்கீதா...? எங்கயம்மா சங்கீதா...?” என்ற வண்ணம் அம்மாவிடம் ஓடினேன். திடீரென எல்லோரும் பாய்ந்து என்னைக் கட்டிப்பிடித்து கோவென்று அழுதார்கள். அதன் அவலம் என்னிதயத்தை பிசைந்தது. என்ன நடந்தது என்கின்ற உண்மை எனக்கு புலப்படத் தொடங்கியது. என் அருமைத் தங்கையைக் கடத்திச் சென்றுவிட்டார்கள் என்கின்ற உண்மை எனக்கு உயிரோடு சிதை மூட்டியதான வலியைத் தந்தது. நாங்கள் சகோதரிகள் என்பதற்குமேல் இணை பிரியாத சிநேகிதிகளாக என்றும் அந்நியோன்னியமாய்த்

திரிந்த கணங்கள் பற்றிய எண்ணம் என் இதயத்தைக் குடைந்து வலியைத் தந்தன. நான் வார்த்தைகளில் வடிக்க முடியாத வேதனையால் துடித்தேன். விம்மி விம்மி அழுது கொண்டிருந்தேன். எங்கும் அழுகை ஒலி. யாரை யார் தேற்றுவது என்பது புரியாத குழப்பம். காலையில் நடந்த அசம்பாவிதம் பற்றி எனக்கு சிறிது சிறியதாகக் கூறினார்கள். சிலர் அழுது முடிந்து தங்கள் வீட்டிற்குப் புறப்பட்டுப் போனார்கள். பலர் அழுவதற்கு எங்கள் வீடுநோக்கி வந்து கொண்டு இருந்தார்கள். சாவிழாத சாவீடாக எங்கள் வீடு மாறிற்று. உயிருள்ள சவங்களாக நாங்கள் நடமாடினோம்.

அன்று வீட்டில் சமையல் இல்லை. சில உறவினர்கள் சாப்பாடு கொண்டு வந்திருந்தாலும், யாரும் அதைத் தொடவே நினைக்கவில்லை. தொடுவதற்கு எவருக்கும் மனது இருக்க வில்லை. பிரகடனப்படுத்தப்படாத செத்தவீடு ஒன்று பிள்ளைப் பாசத்தால், சகோதர பாசத்தால் நடைபெற்றது.

அவளை அழைத்துச் சென்றவர்களுக்கு ஆயிரத்தில் இவளும் ஒருத்தியாக இருந்து இருப்பாள். எங்களுக்கு... அதுவும் எனக்கு... அவளின் இழப்பை யாராலும் நிவர்த்தி செய்ய முடியாது என்கிற உண்மை உறைத்தது. வெந்து நீறாகிய என் இயதத்தை இனி எவராலும் ஒட்டுப்போட்டு ஆற்றிவிட முடியாது எனத் தோன்றிற்று. அவள் போன கணத்தில் இருந்து நடைப்பிணமாகிவிட்ட அம்மாவைப் பழைய அம்மாவாக்க ஆண்டவனாலும் மாற்ற முடியாது என்பதும் என்னை வாட்டியது. மீட்புப் போரிலோ மண்ணை மீட்பிலோ ஈடுபட்டிருப்பவர்களாலோ எங்களது நுண்மையான மனிதபந்தங் களைப் புரிந்துகொள்ள முடியமா? அதன் வலிகளை உணர்ந்துகொள்ள முடியுமா?

உறவுகளின் மரண வேதனையும் புரியாது, ஆயிரம் ஆயிரம் உயிர்களை வலுவில் பலிகொடுத்து, இவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்? என் கையில் துப்பாக்கி இருந்தால்... அவளை எங்களிடமிருந்து பிரித்துச்

சென்றவனைச் சுட்டுக் கொன்றிருப்பேன். இது என் வழமை யான சுபாவம் இல்லை. ஒரு கரப்பான் பூச்சியை கொன்றாலே அங்கிருந்து எவ்வளவோ தூரத்துக்கு ஓடி மறைந்து விடுபவள் நான். அம்மா கதறிய கதறலில் நான் வெந்து நீறாகிய பொழுது அவர்களைக் கொல்ல வேண்டும் போல் ஆத்திரம் வந்தது. கொலைவெறி தணிய மிஞ்சியது கண்ணீரும் கவலை யும் மட்டுமே. எல்லா நம்பிக்கைகளையும் வன்முறைக்கு பலிகொடுத்துவிட்ட நிலையில், நானும் அதில் ஒருத்தியாக சுருண்டு படுத்துக் கொண்டேன்.

அழுது அழுது அன்றிரவு எப்படியோ கடந்து அடுத்த நாள் விடிந்தது. வயதான ஒன்றுவிட்ட அண்ணாவும் அம்மாவும் திருநெல்வேலி முகாமுக்குச் சென்று தங்கையைப் பற்றிக்கேட்கத் திட்டமிட்டு இருந்தார்கள். நானும் சென்று கேட்க வேண்டும் போல் ஆர்வமிருந்தது. அப்படி நான் சென்றால் இரண்டு பிள்ளைகள் இருக்கும்போது ஒரு பிள்ளை நாட்டுக்காகத் தரமுடியாதா? நீங்கள் எல்லாம் ஏன் வெட்கமில்லாது இங்கு வருகிறீர்கள்? என்று அவர்கள் கேட்கமாட்டார்களா? எல்லாமே இனவிடுதலை என்கின்ற நியாய வேள்வியிலே தர்மமாக்கப்படுகின்றன.

அடுத்து வந்த நாள்களில் நாங்கள் நீர்மட்டும் அருந்தினோம். உறவினர்கள் கொண்டுவந்து கொடுத்த உணவுகள் கெட்டுப்போன பின்னர் நாய்களுக்குப் போடப் பட்டன. அண்ணாவும் அம்மாவும் அடுத்தநாள் காலையே புறப்பட்டுத் திருநெல்வேலிக்குச் சென்றார்கள்.

அதிகாரத்தினைப் பயன்படுத்தி அந்த வீட்டைக் கைப் பற்றி, தமது கந்தோராக்கி வைத்திருந்தனர். இந்த வீடு வெளிநாட்டில் வாழும் ஒருவருக்குச் சொந்தமானது என்றும், அதனை அவர்கள் வலோற்காரமாகத் தங்கள் முகமாக மாற்றியிருந்தார்கள் என்று அயலவர்கள் பேசிக்கொண்டார்கள்.

மகளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்கின்ற வைராக்கியம் அம்மாவை ஓயாது தள்ளிக் கொண்டே

இருந்தது. முகாமில் சில முகங்கள் கணாத தமது தாயைக் கண்டதான பூரிப்பில் அம்மாவைப் பார்த்து மலர்ந்தன. சிலமுகங்கள் ஏன் இங்கே வந்தீர்கள் என வினவுவது போலவும் காணப்பட்டன. அம்மாவும் அண்ணாவும் யாசகம் கேட்டு வந்தவர்களைப் போல அங்கு நின்று நெளிந்தார்கள். அந்த நாள் நீண்டதொரு அலைச்சலுக்காக நியமிக்கப்பட்ட நாள் என்பதை அம்மா அறிந்திருக்கவில்லை.

பல மணி நேரக் காத்திருத்தலுக்குப் பின்னர், இறுதியாக முகாமில் இருந்து "தெரியாது" என்கின்ற வழமையான பதிலே வந்தது. அம்மாவும் அண்ணாவும் இத்தகைய ஒரு வறட்சியான பதிலை எதிர்பார்த்திருக்க வில்லை. பிள்ளைகளைக் காணவில்லை என்று இலங்கை இராணுவ முகாம்கள் ஏறித்திரிந்த பொற்றோர் கேட்டுக் கேட்டுச் சலித்த பதில்தான் இது.

அம்மா சளைத்துவிடவில்லை. மகளுக்காக எப்படியும் நீதி கேட்பதற்குத் தன்னை தயார் செய்து கொண்ட துறவி. வெயிலோ, தாகமே, பசியோ அம்மாவை பாதிப்பதாகத் தெரியவில்லை. எங்கும்... எப்போதும்... சங்கீதா என்கின்ற எண்ணத்திலும் தியானத்திலும் தன்னை மறந்து போயிருந்தா. அம்மாவின் இந்தப் பழிகிடப்பு அவர்களை இரக்கம் கொள்ள வைத்தது.

முகாமில் இருந்தவர்கள் அம்மாவின் பழிகிடப்பைத் தாங்க முடியாது அம்மாவிடம் வந்து பெயரை எழுதி எடுத்துக் கொண்டு போனார்கள். பின்பு அரை மணித்தியாலத்தில் விசாரணையை முடித்துக்கொண்டு மீண்டும் வந்தார்கள். அம்மாவும், அண்ணாவும் தங்கையைப் பார்த்துவிடலாம் என்கின்ற நம்பிக்கையில்தான் இருந்தார்கள். அது மேலும் இழுத்தடிப்பாக மாறியது. தங்கையை அல்லாரை முகாமிற்கு கொண்டு சென்று விட்டதாக அவர்கள் கையை விரித்தார்கள். எங்கு இருக்கிறாள் என்ற தகவலாவது மிச்சமே என்கிற நம்பிக்கையோடு அன்று மாலை வீடு திரும்பிய அம்மா சத்தியாக்கிரகத்தை தொடர்ந்தார்.

# 12

அன்று ஒரு நாள் மதியச்சாப்பாட்டின் பின்பு அம்மா நித்திரைக்குச் சென்றுவிட்டா. தனது கடைசி மகளின் வாழ்வுக்காப் போராடி அம்மாவின் உடம்பு மிகவும் பலவீனப் பட்டுப் போயிற்று. சாப்பிட்டபின்பு படுப்பது அவவின் உடல்நலத்திற்கு நல்லதே என்பது ஆறுதல்.

அம்மா படுத்திருக்கும் பொழுது, தன்னுடன் நான் உறவுக்கு வரவேண்டும் எனவும், இல்லாவிட்டால் எங்கள் உறவினை முறிக்கப்போவதாகத் தன் பெற்றோருக்குக் கூறி விடுவதாகவும் அவன் முதலில் மிரட்டினான். நீ என்ன செய்தால் எனக்கு என்ன என்பது போல நான் பேசாது இருந்தேன். அவன் தொடர்ந்து என்னை விவாகரத்து செய்யப்போவதாகவும் கூறினான். எனக்கு ஒரு கணம் விடுதலை கிடைத்துவிடுமோ என்கின்ற எண்ணம் எழுந்தது. நான் அதை வெளிப்படையாகவே "விவாகரத்து கிடைத்தால் எனக்கு விடுதலைதானே" என்று கூறினேன். பின்பும் ஏதோ எண்ணியவளாய் "ஏலும் என்றால் விவாகரத்து செய்" என்றேன்.

அவன் அதற்கு கோபித்து அடித்திருந்தால் நான் அதிர்ச்சி அடைந்திருக்க மாட்டேன். அது வழமையாக நடக்கும் ஒன்றென்று சமாதானம் அடைந்து இருப்பேன். அதற்கு மாறாக அவன் என்னைத் திடீரென இழுத்து அணைக்க முயன்ற பொழுது எனக்கு மேனியெல்லாம் பற்றி எரிந்தது. முதன்முறை என்னையே நான் இழக்கும் கோபத்திற்கு ஆளனேன். என்ன செய்வது என்று எனக்கு முதலில் தெரியவில்லை. பின்பு கை-யில் கிடைத்த ரீபோவை எடுத்து அபாரத் துணிவோடு அவனை அடித்தேன். அது மலைக்கு கொசு கடிப்பதான முயற்சி என்று எனக்குத் தெரியும். அதையென்றாலும் செய்து பார்த்து விடவேண்டும் என்கின்ற துணிவு வந்தது. ரீபோ சறுக்கிவிட்டது. அந்த அடி அவன் தோள்மூட்டில் விழுந்ததோடு ஒரு சிறிய சிராய்ப்பும் அதன் கீழ் உண்டாகியது. ரீப்போவின் ஒருகால் முறிந்தது. அவன் என்னை விட்டுவிட்டான். அப்போழுதுதான்

அவனுள் பயந்தாங்கொள்ளி ஒருவனும் உள்ளான் என்கின்ற மறுபக்கம் எனக்குப் புரிந்தது.

அம்மா நித்திரையால் எழுந்து வரும் வரையும் அவன் காத்திருந்தான். அம்மா வந்தவுடன் நல்ல பிள்ளைபோல அவன் ரீபோவைக்காட்டி "உங்கட மகள் செய்த வேலையைப் பாருங்க மாமி. அவள் என்ன அடிச்சிருக்கிறாள் மாமி" எனக் கண்ணீர் வடித்தான்.

"ஆம்பிளையளுக்கு கைநீட்டுறதே? உங்களை நான் இப்பிடியே வளர்த்தனான் பிள்ள? என்னைப் பார்த்து ஊர் சிரிக்கிற மாதிரி நடவாத பிள்ள. உதெல்லாம் நல்ல பழக்கம் இல்லை. உதுக்குமேல நான் உனக்கு புத்திமதி சொல்லத் தேவையில்லை" என்று என்ன நடந்தது என்பதை அறியாத அப்பாவியாக அம்மா எனக்குப் புத்திமதி கூறிவிட்டு போன போது எனக்கு ஒருகணம் அழுவதா சிரிப்பதா என்று புரியவில்லை. அம்மாவின் உள்ளத்தில் என்ன இருந்தது என்பதும் எனக்கு அன்று விளங்கவில்லை. அவனுக்கு முன்பு பேசுவதுபோல பேசிவிட்டுப் போகின்றாவா என்பதும் எனக்குப் புரியவில்லை. என்னை யாரும் நம்புவதில்லையோ என்கின்ற கேள்வியும் எழுந்தது. அது எனக்குக் கவலை தந்தது. எனது வாழ்க்கையும் அப்படித்தான் இருக்கிறது. ஒருமுறை உறவுகொண்டதுடன் கர்ப்பமானவள் என்று சொன்னால் எத் தனை பேர் என்னை நம்புவார்கள் என்பது இன்றும் எனக்குப் புரியவில்லை.

அன்று அவனை அடிக்க முயற்சி செய்தது போல நான் தொடர்ந்து எதிர்காலத்தில் நடந்திருந்தால் எனக்கு விரைவாக விடுதலை கிடைத்திருக்கும். அந்த துணிவு அன்றுடன் ஏனோ செத்துப் போய்விட்டது. அது நான் செய்த பாவமாக இருக்க வேண்டும். மலைக்கும் கொசுவுக்குமான எங்கள் உடல்பலத்தை எண்ணி நான் அன்றோடு சோர்ந்து போய்விட்டேனா என்பதும் புரியவில்லை.

வேறு ஒரு நாள், நான் சமைத்துக் கொண்டிருக்கும் போது அவன் வந்து ஏதோ கதை சொல்லத் துவங்கினான்.

அவன் கதைப்படி தனது குடும்பம் ஏதோ இராஜ பரம்பரை என்றும், நாங்கள் யாழ்பாணத்துப் பஸ்ராண்டில் நின்று பிச்சை எடுத்தது போன்றும் கதை சொல்லிக்கொண்டு இருந்தான். அவனது அர்த்தமற்ற கதைகளுக்கு காது கொடுக்காது நான் எனது வேலையைக் கவனித்தேன். அவன் தொடர்ந்தும் வினைப்பிடித்தவர்கள்தான் ஒல்லியாக இருப்பார்கள் என்றும், உங்கள் குடும்பம் அப்படியே என்றும், தாங்கள் மொத்தமாக இருப்பதால் அப்படியல்ல என்று கூறினான். நான் சினத்தோடு பேசாது தொடர்ந்தும் சமையலில் ஈடுபட்டேன். நான் தொடர்ந்தும் பேசாது இருந்தது அவனுக்குக் கோபத்தைக் கிளறி இருக்கலாம். அது அவனுக்கு எப்போதுவரும் எப்போது போகும் என்பதை யாராலும் சொல்லிவிட முடியாது. அவன் “என்னடி பேசாமல் நிக்கிறாய்?” என்ற வண்ணம் என் கன்னத்தில் ஓங்கி அறைந்தான்.

நான் சமையல் அறையில் கிடந்த கத்தியைக் கையில் எடுத்துக் கொண்டேன். பின்பு அவனைப் பார்த்து “உங்கட குடும்பம் இங்க மாளிகைகளிலே தானே இருக்கினம்” என்று கேட்டுக் கத்தியை அவனை நோக்கி நீட்ட, அவன் பின்னே நகர்ந்தான். தன்னில் ஒரு சிறு கீறு படுவதுகூட அவனுக்கு உயிர்போய்விடும் பயத்தை கொடுக்கிறது என்பதை நான் அன்று கண்டு கொண்டேன். அதைக்கூட என்னால் பயன் படுத்த முடியாது என யோசித்துச் சோர்ந்தேன். ஏனெனில் ‘சைக்கோ’வாக நடப்பவர்கள் திடீரென்று ஏதாவது பைத்தியக் காரத்தனமாக செய்துவிடலாம் என்று உள்ளூரப் பயந்தேன்.

அன்று வழக்கம்போல சாப்பிட வந்தான். நான் சமைத்து வைத்திருந்த சாப்பாட்டை மேஜையில் எடுத்து வைத்துப் பரிமாறினேன். அவன் சாப்பாடு சரியில்லை என்று திடீரென்று என் கன்னத்தில் அடித்தான். அவன் என்னை அடிப்பது அடிக்கடி நடைபெற்ற போதிலும், ஒவ்வொரு தடவை அடிக்கும் பொழுதும் ஒவ்வருவிதமான ஏதிர்பாராத அதிர்ச்சி என்னைத் தாக்கும். நான் அன்று அந்த எதிர்பாராத அதிர்ச்சியில் இருக்கும்பொழுது அவன் பிளேற்றில் இருந்த சாப்பாட்டை கவிழ்த்து என் தலையில் கொட்டிவிட்டான். இந்தச் சாப்பாட்டு

அபிஷேகம் அடிக்கடி எனக்கு நடந்ததை நான் விதியென்றே ஏற்றுக்கொள்ளும் விதமாகக் காலம் மாறியது. அன்று அவன் சாப்பாட்டை என்தலையில் கொட்டிவிட்டுக் கோபமாக வெளியே சென்றுவிட்டான். அதன்பின்பு நானும் மகளும் கொட்டிய சாப்பாட்டைத் துப்பரவு செய்தோம். தலையில் அரப்பு பிரட்டிய கணக்கில் சாப்பாடு பிசுபிசுத்துக் கொண்டு இருந்தது. நான் சென்று தலை முழுகினேன். இவனைத் தலைமுழுகும் காலம் ஒன்று வராதா என்கின்ற ஏக்கம் என் நெஞ்செல்லாம் நிறைந்து கிடந்தது. அவன் சாப்பாட்டைத் தலையில் கொட்டியபின்பு சாப்பிட வேண்டும் என்கின்ற எண்ணமே எனக்கு வரவில்லை. நான் முழுகிவிட்டு வந்து பார்த்தபோது பயத்தில் பிள்ளை தூங்கிவிட்டாள்.

அன்று திடீரென அவனின் தங்கையின் குடும்பத்தில் பிரச்சினை என்று தொலைபேசியில் செய்தி வந்தது. நாங்கள் புறப்பட்டு அவனுடைய தங்கை வீட்டிற்குச் சென்றோம். தங்கை வீட்டிற்குச் சென்றபோது தங்கை மிகவும் கோபமாக இருந்தாள். என்ன நடந்தது என்று கேட்டபோது அங்கு நடந்த சம்பவம் தெரிய வந்தது. தங்கைக்கு அவளுடைய கணவன் முதலில் அடித்திருக்கிறான். மகள் திருமணம் செய்தாலும் பிள்ளைப் பாசம் தந்தைக்கு இல்லாமல் போய்விடுவதில்லை. விலக்குப் பிடிக்க வந்த தகப்பனுக்கும் பிரச்சினையின் மூர்க்கத்தினால் மருமகன் அடித்திருக்கிறான். இதைத் தகப்பன் எதிர்பார்க்கவில்லை. தகப்பன் தள்ளாடி நிலத்தில் விழுந்து விட்டார். அப்படி விழும்போது கண்ணாடி உடைந்து அலங்கோலமாக நிலத்திலே கிடந்தார்.

நான் பெரியதொரு யுத்தம் மச்சானுக்கும் மச்சானுக்கு மிடையில் நடக்கப் போகின்றது என்கின்ற எதிர்பார்ப்பில் இருந்தேன். வீட்டிற்குள்ளே சென்றது தொடக்கம் அவன் பலத்துக் கத்தினான். அவன் கத்திக் கொண்டு இருக்கும் பொழுதே அவனது மச்சான் வீட்டிற்குள் வந்தான். ஒரு கணம் என்ன நடக்கப் போகின்றதோ என நான் தவித்தேன். மச்சான் வரவும் திடீரெனத் தினேஸ் அமைதியாகி யது எனக்கு அதிர்ச்சி தந்தது. மச்சான் மிகவும் துணிவாக

வந்து பொருள்களை எடுத்துக் கொண்டு செல்லவும் தினேஸ் எதுவும் செய்யாது இருந்தான். பெரியதொரு சண்டை வரும் என்கின்ற என் எதிர்பார்ப்பு ஊசிபட்ட பலூன் ஆகியது.

## 13

பேருந்தில் சிறிது நேரம் அமைதியாக இருந்த தமிழன்பன், "நான் ஏதும் தப்பாச் செல்லிப் போட்டனா?" என்று கேட்டான்.

"இல்லையே... ஏன் அப்பிடிக் கேட்கிறீங்க?" என்றேன்.

"உங்கள் அமைதிதான் அப்படி என்னை எண்ண வைத்தது" என்றான்.

"சில ஞாபகங்கள்... அதனால் அலைமோதும் மனம்..." என்றேன்.

"இந்த வசனங்கள்கூட நல்லாத்தான் இருக்கிறது. நீங்கள் நினைத்தால் நிச்சயம் எழுதலாம்."

"நாங்கள் வேறு ஏதாவது கதைப்போமா?"

"சரி நான் இதற்கு மேல் உங்களோடு அந்த விஷயம் பற்றிக் கதைக்கவில்லை. போதுமா?"

"அது சரி நீங்கள் எப்போது நாட்டைவிட்டு போனீர்கள்?"

"நல்ல காலம் ஓடினீர்கள் என்று கேட்காது விட்டீர்கள்."

"சீ... அப்படி என்வாயால் சொல்ல முடியுமா என்ன?"

"என்னை நானே காட்டிக் கொடுத்த கதையாகி விட்டது."

"நீங்கள் அப்படியெல்லாம் ஓடி இருக்கமாட்டீர்கள் என்பது எனது நம்பிக்கை. உங்கள் கதையைச் சொல்லுங்கள்."

"ஈழத்தில் பிறந்தவர்களின் வாழ்வு பெரிய கதையாகத் தான் நீளுகிறது. சோகங்களும், சாக்களும் நிறைந்த துக்கந் தோய்ந்த தொடர்கதை. அவற்றோடு ஒப்பிடும்போது எனது ஓட்டம் ஒரு கதைக்கான சுவாரஸ்யம் இல்லாதது. 1983 ஆம் ஆண்டு நிகழ்த்தப்பட்ட இனக்கலவரந்தான் என்னையும் இந்த நாட்டின் இரண்டாந்தரக் குடிமகன் எனபதை உணரப் பண்ணியது. உழைக்கத் தொடங்காத அந்த வயதில் என்னுடைய இனம், நாடு என்கின்ற சில எண்ணங்களே வலுவாக கொழுந்துவிட்டு எரிந்தது. ஒருவகையில் உங்கள் நம்பிக்கை தவிடு பொடியாவதுபோல அமைப்புக் களை நோக்கி அப்போது நாங்கள் ஓடினோம். அந்த இயக்க ஆற்றின் சுழியில் அகப்பட்டு எங்கெங்கோ எல்லாம் சென்று, எத்தனையோ விசித்திரமான அநுபவங்களைப் பெற்றபின்பு, வன்முறையால் எதையும் சாதிக்க முடியாது என்கின்ற ஒரு நிலை வந்தபோது... அந்த வன்முறைக்கே பலியாகக்கூடாது என மீண்டும் ஐரோப்பாவை நோக்கி ஓடினோம். எங்களின் இந்தக் கதைகளில் என்ன சுவாரசியம் இருக்கும் என்று நினைக்கிறீர்கள்? ஆனால் இந்த ஓட்டங்கள் சில அநுபவங்களை என்னைப் போன்றவர்களுக்கு தந்தன. அதை ஏலுமாயின் இனிவரும் சமுதாயத்திற்குப் அனுகூலமான வகையில் பயன்படுத்த முடிந்தால் அதுவே பெரும் வெற்றியாக அமையும்."

"நீங்கள் எதைச் சொல்ல வாறீங்க? "

"வன்முறை. அது எமக்கு எதையும் பெற்றுத்தந்ததாய் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது இருக்கிறது."

"இது உங்கள் தனிப்பட்ட கருத்து. இதற்கு நேர்மாறான கருத்துக்களும் இந்த நாட்டில் நிறையவே உண்டு. அதுவும் நாட்டில் வாழும் பலருக்கே உங்கள் கருத்துடன் ஒத்துப் போக முடியாது இருக்கலாம். என்னைப் பொறுத்தவரை வன் முறை கற்பனை செய்ய முடியாத இழப்புகளைத் தந்திருக் கிறது. அதேநேரம் தமிழருடைய பிரச்சனையை ஒருவகையில் வலுவாக வெளியே சொல்ல முயன்றது."

"நீங்கள் கூறுவது உண்மை. எனது கருத்துடன் யாரையும் ஒத்துப்போகுமாறு நான் கேட்கவில்லை. ஆனாலும் வன்முறையை கையில் எடுத்துக்கொண்டதால் தூக்கியதால் என்ன பயனை அடைந்தோம் என்பதை விரிவாக அலச வேண்டும் என்பதுதான் என் விருப்பம்."

## 14

மகளின் நினைவில் அம்மா இரவு நித்திரை கொண்டாவா என்பதே சந்தேகமாயிற்று. அடுத்தநாள் அதிகாலை நாலரை மணிக்கே எழும்பிவிட்டா. ஐந்து மணிக்கு வீட்டில் இருந்து அல்லாரை நோக்கிப் புறப்பட்டுச் சென்றா. சாவகச்சேரிக்குப் போவது என்பது அப்போது இரண்டு மணித்தியாலப் பயணம்.

அல்லாரை முகாமைச் சென்றடைய ஏழுமணி ஆகிவிட்டது. அம்மாவுக்குக் களைப்பும் சோர்வுமாக இருந் தாலும் மகளைக் கண்டுவிடவேண்டும் என்கின்ற ஆவேசத்தில் எல்லாவற்றையும் புறந்தள்ளி முகாமை அடைந்தா.

இதுவரை அம்மா பெரிய வீடுகளைத்தான் புலிகளின் முகாங்களாகப் பார்த்து இருக்கிறா. யாழ்பாணத்திற்குள் அப்படித்தான் இயக்கங்கள் முகாம்கள் அமைத்து வைத்திருந்தனர். அல்லாரை முகாம் அப்படி இருக்கவில்லை. அது பயிற்றப்பட்ட நாட்டின் இராணுவம் தங்கும் முகாமின் பெருப்பத்தில் விரிந்து கிடந்தது. தமிழ் இராணுவ முகாம் பல ஏக்கரில் வெட்டைவெளியாக நீண்டு சென்றது. சின்னச் சின்னக் கொட்டில்களைப் பிளட்டுன்களாக அமைத்திருந்தனர். முற்றம் வெட்டை வெளியாக... பயிற்சித் தளமாக பரந்து கிடந்தது. அதிலே பயிற்சிக்கான உபகரணங்கள் ஆங்காங்கே ஊன்றப் பட்டிருந்தன. சில பகுதிகளில் இரணுவப்பயிற்சிக்கான தடைகளை உருவாக்கி இருந்தார்கள். அதில் எல்லாம்

கடுமையான பயிற்சிகள் நடைபெறும் என்பதை அம்மா கிரகிக்கும் மனநிலையில் அப்பொழுது இருக்கவில்லை. இப்படிப்பட்ட முகாமிற்கு உள்ளே வந்தவர்களை அவர்கள் வெளியேற விட்டுவிட மாட்டார்கள் என்கின்ற உண்மை அம்மாவுக்குப் பிள்ளைப் பாசத்தினால் புரியாது போயிற்று.

அம்மாவை முகாமிற்கு உள்ளே செல்ல அவர்கள் அனுமதிக்கவில்லை. யாருமே உள்ளே அனுமதிக்கப் படுவதில்லை. அவர்களால் கிட்டவும் நெருங்க முடியவில்லை. சொந்தப் பிள்ளையைப் பறிகொடுத்தவர்களே... வேறு யாருடைய பிள்ளைகளையோ பார்க்கப் போவது போலப் பயத்தில் நடுங்கினார்கள். "எங்கள் இரணுவம்; எம்மொழி பேசும் இராணுவம்; மண்ணை மீட்கும் இராணுவம்; ஒருவகைப் பெருமிதம்! இழப்புகள் - வலிகள் ஆகியவற்றை மறக்கச் செய்தன.

அம்மா இதையெல்லாம் பார்த்து அலுத்து விடவில்லை. சங்கீதாவின் பெயரைச் சொல்லி, அவள் உள்ளே இருக்கிறாளா என்று முகாமில் நின்றவர்களிடம் விசாரித்தா. அதற்கு முகாமில் நின்றவர்கள் அந்தப் பெயரில் யாரும் இல்லையெனவும், அங்கு அம்மா நிற்ககூடாது எனவும் வெருட்டி இருக்கிறார்கள். அங்கு நிற்கும் தாய் தந்தையரைப் பார்த்து போராளிகள் திட்டிக் கொண்டு இருந்தார்கள். சில போராளிகள் அங்கு வந்த தாய் தந்தையரை ஏகவசனத்தில் விரட்டினார்கள். அந்த அவமானத்தைப் பொறுத்துக் கொண்டு, பிள்ளைகளை ஒரு தரமாவது பார்த்துவிட்டுப் போய்விடலாம் என்கின்ற நம்பிக்கையோடு பெற்றவர்கள் முகாமைச் சுற்றிச் சுற்றி வலம் வந்தார்கள். அதைப் பார்த்த போராளிகள் அவர்களை கலைத்தார்கள். வெயிலின் கொடூரத்தையும் பொருட்படுத்தாது, பிள்ளைகளைப் பார்த்து விடலாம் என்கின்ற நப்பாசையுடன், அவர்கள் முகாமைச் சுற்றி அலைந்தார்கள்.

வெயிலின் கொடூரத்தில், அது விசிறியடிக்கும் எரியும் அனலில், தூரத்தில் நிற்கும் மனிதர்கள் வளைந்தவர்களாகத்

தெரியும் அளவிற்கு, அந்த முகாம் பாரியதாய் அமைந்திருந்தது. உள்ளே நின்ற பிள்ளைகள் எல்லாம் ஒரே அச்சில் வார்த்து எடுத்த பொம்மைகள் போன்று தோன்றினார்கள். அனைவரது முடியும் ஒரு சென்ரிமீற்றர் உயரத்தில் கட்டையாக வெட்டப்பட்டுக் குட்டையாகக் காட்சி தந்தன. இதுவரை பழக்கமாக இருந்து முடியைக் கொண்டு இப்போது அவர்களை அடையாளம் காண ஏலாது. அவர்களுடைய சீருடை மேலும் அதைச் சிக்கலாக்கியது. எங்குபார்த்தாலும் ஒரே உருவங்களாக, இயந்திர மனிதர்களுக்கு ஆடையணிவித்த தாக தோன்றினார்கள். அம்மாவால் மகளைக் கண்டுபிடிப்பது பெரும்பாடாகியது.

வேலிக்கு மேலால் எட்டிப் பார்க்குமளவுக்கு ஒட்டகமாக உயர்ந்தவர்கள் குறைவாக இருப்பதே யாழ்ப்பாணத்து இயற்கை. அதுவும் பெண்களில் அப்படி இருப்பதைக் காண்பது மிகவும் அரிது. அவர்கள் தங்களின் உயரத்திற்கு ஏற்ப ஒன்றைக் கண்டுபிடித்திருந்தார்கள். அது யாழ் மண்ணின் கலாசாரத்தில் உதித்த தொழில்நுட்பமாக அமைந்தது. அவர்கள் அந்தத் தொழில்நுட்பத்தைப் போராளிகளின் முகாம் வேலிகளிலும் பயன்படுத்தினார்கள் நாலுபக்க வேலிகளிலும் அங்கங்கே உருவான அந்தப் பொட்டுக்கள் உள்ளே தலைநீட்ட வசதியாயிற்று. ஒரு பொட்டில் நின்றவண்ணம் கையில் ஐந்தாறு சடாமுடியோடு இருக்கும் நிழற்படங்களை வைத்துப் பார்ப்பார்கள் பிள்ளைகளைப் பார்த்துவிட வேண்டும் என்கின்ற ஆவலில் அவர்கள் தங்களை மறந்திருக்கும்பொழுது போராளிகள் தடியுடன் கலைத்துக்கொண்டு வருவார்கள். பெற்றோர்கள் அந்த இடத்தை விட்டுத் முதலில் ஓடிவிடுவார்கள். பின்பு மறுகரைக்குச் சென்று அங்கு இருக்கும் பொட்டுக்களால் தலையை நீட்டி ஆள்களைத் தேடத் துவங்குவார்கள். அப்படித் தேடுவதற்கும் முறைவைத்து பார்க்க வேண்டியதாயிற்று. அநேகருக்கு சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும் என்பதான புரிந்துணர்வு அவர்களிடம் ஏற்பட்டிருந்தது. எல்லோரும் ஒரே நேரத்தில் தலையை நீட்டப் போதுமான பொட்டுக்கள்

அங்கு இருக்கவில்லை. அப்படிப் பொட்டுப் போட வேலியில் இடமும் இல்லை. இந்த நெருக்கடியின் காரணமாக ஐந்தாறு நிழற்படங்களை வைத்துக் கொண்டு ஒருவர் தனது தலையை நீட்டி ஆள்களைத் தேடுவதே அங்கு வழமை யாகியது.

அம்மா யாழ்ப்பாணத்திற்கும் சாவகச்சேரிக்கும் அலைந்து கொண்டு இருக்க முடியாது என முடிவெடுத்து, சாவகச்சேரியில் உள்ள உறவினர் வீடொன்றின் தனக்கு இடம்பிடித்துக் கொண்டா. அப்பொழுதுதான் காலையில் எழுந்து முகாமிற்கு ஓட வசதியாக இருக்கும் என்பது அவ வின் எண்ணம். அம்மாவின் இந்த நித்தியப்பயனம் சலிப்பின்றித் தொடர்ந்தது.

யாழ்ப்பாண வீட்டில் இழவுக் களை கலையாது இருந்தது. யார் வந்தாலும் அழுகை சத்தம் ஊரையே உலுப்பியது. எனக்கும் சாப்பிட மனமில்லாது இருந்ததோடு வீட்டிற்குப் போவதே வெறுப்பாகியது. எங்களுக்கு இனி எப்போது விடிவு வரும் என்ற கேள்வி நீண்டது. க.பொ.த. உயர் தரப்பரீட்சையில் நல்ல முறையில் நான் சித்தியெய்திருக்க முடியும். நடந்த பிரச்சினைகள் படிக்கும் நிலையைக் குழப்பியது. செத்தவீட்டுக் களை மாறாத வீட்டிற்கு செல்வதைத் தாமதப் படுத்துவதற்காக நான் நூல் நிலையத்தில் நேரத்தைச் செலவு செய்தேன். அம்மாவின் வாழ்வு முகாமைச் சுற்றி அலைவதாகியது. தங்கையின் வாழ்வு?

காலம் உருளத் தொடங்கியது. அமைதி மெதுவாக வீட்டுக்குள் நுழைந்தது. நான் ஒருத்தி மட்டுமே அந்த வீட்டுப் பிள்ளை என்பதான நிலை உருவாகிற்று. தங்கையைப் பற்றிக் கதைக்கும்போது எங்கும் சோக மேகங்கள் வந்து மூடிக்கொள்ளும். அம்மா மிகவும் மெலிந்து போயிருந்தா. அவவுக்கு வேறு என்னென்ன நோய்கள் இருக்கின்றன என்பது தெரியவில்லை. மருத்துவமனைக்கு அழைத்துச் செல்ல முடியவில்லை. இன்னும் மகளின் நினைவு அம்மாவின் மனதில் நிறைந்து கிடந்தது. அந்த அவலத்தின் ஏக்கம் ஓய்வதாகவில்லை.

ஒன்றுவிட்ட அண்ணா அன்று மிகவும் கவலையாக வீட்டிற்கு வந்தார். நான் யோசனையோடு தேநீர் தயாரித்துக் கொடுத்து "என்னண்ணா ஏதோ கவலையில இருக்கிறமாதிரி இருக்கிறியள்?" என்றேன்.

"சரியாச் சொன்னாயடி... எனக்கு ஒரு பெரிய கவலை. ஆனா யாரை கேட்க முடியும்? அதுக்கு என்ன விடை எண்டுதான் புரியேல்ல."

அண்ணா மிகவும் கவலை தோய்ந்த முகத்துடன்தான் இருந்தான். எனக்கு அவன் என்ன கதைக்க வருகிறான் என்பது சரியாகப் புரியவில்லை. திருப்பிக் கேட்டால் நீ ஒரு ரியூப்லைற்றடி என்பான். நான் ஆர்வக் கோளாறைக் கட்டுப்படுத்த முடியாதவளாய்... "என்ன பிரச்சனையண்ண?" என்றேன்.

"எனக்கு ஒரு ஆள் வேணுமடி" என்றான், தேநீர் அருந்தியாவாறே.

"நீதானே கடைக்காரன்? உனக்கு எத்தனைபேர் வருவினம்?" என்றேன்.

"அது வேலைக்கு வருவினம். இல்லாட்டிச் சொத்தில பங்கு போட வருவினம். எனக்காக உதவிசெய்ய யார் வருகினம்?"

"அப்பிடி என்னண்ண உதவி உனக்கு வேணும்? "

"புலியில சேர்த்துவிட்டால் புலிகளுக்கு வரி கட்டத் தேவையில்லையாம். எவ்வளவுகாலம் வரிகட்டுறது? அது தான் ஆராவது உதவி செய்வினமோ எண்டு பாக்கிறன்."

"அதுதானே சோழியன் குடுமி சும்மா ஆடாதே."

"ச்..."

"எனக்கு ஓர் ஆளத் தெரியும்... சேர்த்து தந்தா நீ எனக்கு என்ன தருவாய்?"

"உனக்கு ஒரு பவுன்ல தோடு தாறன்ரி" என்றான் அண்ணா.

"அப்ப அந்த ஆளச் சொல்லுறன்"

"சொல்லடி கெதியா"

"அது சிவகாமிப் பெரியம்மாதான். பெரியம்மாவைப் புலியில சேர்த்துவிட்டா நாட்டுக்கும் சேவையா இருக்கும்... வீட்டுக்கும் பாரமில்லாமல் போகும். போராட சீனியர் படையொண்டு தெருத்தெருவா திரியும். பாக்கவும் வடிவா இருக்கும்"

"பெட்டைக் கழுதைக்கு வாய் கூடிட்டுது" எனக் கோபத்தோடு எழுந்தான் அண்ணா.

பின்பு தேநீர் மண்டியை எனக்கு எத்தப் பார்த்தான். நான் வீட்டிற்குள் போய்க்கொண்டே, "அம்மா தேத்தண்ணிப் பேணிய வேண்டண. அண்ணா அதையும் விக்கிறதுக்கு கடைக்கு கொண்டு போவார்" என்றேன்.

"நீ கடைப்பக்கம் வாடி உன்ன கவனிக்கிறன்" என்று கூறியவண்ணம் அண்ணன் சைக்கிளுடன் புறப்பட்டு வெளியே சென்றான். யாழ்பாணத்தில் எந்தப் பெரிய கொம்பனும் சைக்கிளில்தான் போகவேண்டிய கட்டாயம். பொற்றோல் தங்கத்தின் விலையில் விற்கப்பட்டது. அந்த வியாபாரத்தில் பல புதிய பணக்காரர்கள் முளைத்திருந்தார்கள்.

## 15

ஏமாற்றிப் பறிக்கும் பணத்தில் அவனுடன் சீவியம் நடத்துவது நரகத்தில் இருப்பதற்குச் சமானம். என்னிடம் இருந்து பறித்தது மட்டும் அவனுக்குப் போதவில்லை. ஊரில் யார் ஏமாந்தாலும் அவன் கருணை எதுவும் இன்றி கறந்து தள்ளிவிடுவான். அந்தப் பாவப்பட்ட பணத்தில் நான் எதையும் தொட விரும்புவது இல்லை. சாப்பாடு மற்றும் எனது செலவுகளை நான் வைத்திருக்கும் பணத்திலேயே

பார்த்துக் கொள்வேன். அவன் ஆடம்பரப் பொருள்களை வாங்கி வந்து வீட்டில் குவித்தாலும், நான் அவற்றை பொதுவாகத் தொடுவதில்லை. அவற்றைத் தொட்டாலே பாவம். எத்தனை அப்பாவிகளைத் தட்டிச்சுத்தி அவை வாங்கப் பட்டவை என்பது எனக்குத் தெரியும். அந்தப் பாவப்பட்ட பொருளைத் தொடுதல் ஏழு பிறவிக்கும் பாவமென்று நான் நினைத்துக் கொள்ளுவேன்.

எந்த வேலையும் நிரந்தரமாய் அவன் செய்ததாக எனக்கு ஞாபகம் இல்லை. ஏதாவது ஒரு வேலையில் சேருவான். நேர்முகப் பரீட்சையில் அவன் அழகாகக் கதைப்பதைப் பார்த்து முதலில் "ஆவெ"ண்டாத நிறுவன அதிகாரிகளை நான் கண்டதில்லை. அநேகமாக அவன் நேர்முகப் பரீட்சைக்குப் போனால் வேலையோடு திரும்பி வந்துவிடுவான். அந்த வேலைகள் மாத்திரம் நீடிக்காது. வேலையை எடுத்துவிட்டு வீட்டில் நின்றால் யார்தான் பொறுத்துக் கொள்வார்கள்?. அவன் கதைப்பதற்கும் அவனது குணத்திற்கும் சம்பந்தம் கிடையாது. இந்த உண்மையை வேலைக்கு அமர்த்தும் நிறுவனங்கள் வேலையிலே சேர்த்த சிறிது காலத்தில் கண்டுபிடித்துவிடுவார்கள். பின்பு வழமை போல சீட்டைக் கிழித்து வீட்டிற்கு அனுப்பி வைப்பார்கள்.

வேலையில்லாமல் வீட்டில் இருந்தால், அல்லது வேறு எதற்காவது பணம் தேவைப்பட்டால், என்னிடம் பணம் கறப்பான். அடிக்குப் பயந்து அக்கா, தங்கையிடம் இரந்து வாங்கி அநியாயத்துக்குக் கொடுப்பேன். நான் அப்படிச் செய்திருக்கக்கூடாது என்பது பின்புதான் எனக்கு விளங்கியது. அவன் என்னை திருமணம் செய்ய அலைந்தது என்னை உடல் உறவுக்குப் பயன்படுத்த மட்டுமே என்பதைப் புரிந்து கொண்டேன். வெளிநாடுகளில் பணமரங்கள் இருக் கின்றன என்பது எல்லோருக்கும் தெரியும். உள்நாட்டில் இருந்து கறப்பதற்கேற்ற பசையுள்ள மரமாக நான் அவனிடம் மாட்டிக் கொண்டேன். என்னுடனான வாழ்கை என்பது ஒரு நாடகம். எல்லா அலைச்சல்களுக்கும் என் பயமும் கௌரவமும் முற்றுப்புள்ளி வைத்துக் கொண்டு வந்தன.

அதைமீறி ஓர் அடியெடுத்து வைக்க இயலாது நான் தவித்தேன்.

வீட்டில் இருந்தால் யாராவது கொள்ளை அடித்து விடுவார்கள் என்று என்னிடம் இருந்த நகைகள் எல்லாவற்றை யும் எடுத்துக் கொண்டான். அதை வங்கியில் பத்திரமாக வைக்கப்போவதாகக் கூறினான். நான் முதலில் அப்பாவியாக அதை நம்பி இருந்தேன். பின்பு அவை திரும்பி வரவே இல்லை என்ற போது சந்தேகம் எழுந்தது. திருப்பித்தா என்று கேட்டுச் சண்டை பிடிக்கும் துணிவு என்னிடமில்லை. யாராவது உறவினர்கள் மகளுக்கு நகை கொண்டு வந்து போட்டால் அவர்கள் போகும் வரை காத்திருந்துவிட்டு அதைக் கழற்ற முயலுவான். அப்படி கழற்றும்போது சிலவேளை மகள் அழுதுகொண்டு ஓடிவிடுவாள். அப்படி ஓடினால் அவள் அன்றிரவு நித்திரை கொள்ளும்போது அதைக் கழற்றிக்கொண்டு சென்றுவிடுவான். அப்படிப் போன நகைகளுக்கு என்ன நடந்தது என்பது எனக்குத் தெரியாது. நிச்சயமாக அவன் அவற்றை விற்றுச் செலவு செய்திருப்பான் என்றே எனக்குத் தோன்றியது.

ஏமாறுவதற்குத்தான் எத்தனை பேர்கள் அவனிடம் பணத் தோடு வரிசையில் நின்றார்கள் என்பது என்னை பிரமிக்க வைத்தது. அதற்கு யாழ்பாணத்தாரின் வெளிநாட்டு மோகமும் ஒரு காரணமாகும். அவன் ஊரைத் தட்டிச் சுத்துவதற்காகவே ஏஜன்சி வேலை செய்வதாகப் பொய்கூறித் திரிந்தான். பணம் பறிக்க முதல் தேனும் பாலும் ஒழுகக் கதைப்பான். வாடிக்கையாளரை வீட்டிற்கெல்லாம் கூட்டிவந்து சொந்தம் கொண்டாடுவான். இனிக்க இனிக்க கதைத்துச் சாப்பாடு கொடுப்பான். அவர்களும் என்னோடு அண்ணிமுறை வேறு கொண்டாடுவார்கள். நான் சிலருக்கு சாடைமாடையாக பணத்துக்கு என்ன அவசரம் என்று கூறி இருக்கிறேன். அவனுக்கு அவசரமோ இல்லையோ அவர்கள் அவசரமாகப் பணத்தைக் கொண்டு வந்து கொடுத்தார்கள். நேரடியாக என்னால் அதைத் தடுக்க முடியவில்லை. அப்படிச் செய்தால்

எனது உயிருக்கு மட்டுமல்ல எனது மகளது உயிருக்கும் ஆபத்து ஏற்படலாம்.

பணம் கொடுத்த பின்பு அவனை நச்சரித்தால் தினேஸின் குணம் முற்றாக மாறத் தொடங்கும். அவனை நச்சரிப்பது அவனுக்குப் பிடிக்காது. அப்படி யாராவது செய்தால் யாழ்ப்பாணத்து நாய்களுக்குப் பேசாமல் இருக்க முடியாதோ என்றெல்லாம் பேசுவான். நீங்கள் புலிகள் என்று சொல்லி ஆமியில் பிடித்துக் கொடுத்துவிடுவேன் என்று வெருட்டுவான். அதன்பின்பு பயத்தில் அவனை யாரும் எதுவும் கேட்பதில்லை. பெரிய பெரிய மலைகள் எல்லாம் அவன் பேசுவதை கேட்டுக் கொண்டு அமைதியாகச் செல்வார்கள். எதிர்த்து எந்தக் கதையும் கதைப்பதை நான் கண்டதில்லை. அந்த செயல் எனது மனத் துணிவை இன்னும் துடைத்து எறிந்தது. அந்த மலைகளே அவனை எதிர்க்க முடியாதபொழுது நான் எந்த அளவுக்கு என்கின்ற கேள்வியே மிஞ்சி நின்றது. மனிதருக்கு உயிர்மீது நிறைய ஆசை உண்டு. அதற்குப் பாதிப்பு வருமென்றால் எதையும் இழப்பதற்கு அவன் தயாராகிறான். அது அந்த மலைகளைக்கூட மௌனமாக்கியது.

அன்று வெளியே சென்று வந்தவன் என்னைக் கூப்பிட்டான். நான் என்ன நடக்க போகிறதோ என்கின்ற திகிலில் அவனிடம் சென்றேன். அவன் வீட்டில் இல்லாத பொழுது அந்தத் திகில் இருப்பதில்லை. அவன் வெளியே சென்றுவிட்டால் எனக்கும் மகளுக்கும் பரம சந்தோஷமாய் இருக்கும். கண்கள் ஆனந்தத்தில் கூத்தாடும். சுதந்திரத்தின் உச்சியில் குதித்தாடும் உணர்வு. எல்லாம் அவன் வீட்டிற்கு வந்ததும் பறிபோய்விடும். மனங்கள் ஒடுங்கிக் கொள்ளும். அன்றும் வழமைபோல அந்தச் சுதந்திரம் பறிபோய் நான் நடுங்கினேன். அப்பொழுது அவன் என்னை அதிகாரமாய்க் கூப்பிட்டான். நான் அவன் பக்கத்தில் போய் நிற்க முதலில் கன்னத்தில் ஓங்கி அடித்தான். பின்பு தரைமயிரைக் கொத்தாகப் பிடித்துக் கொண்டு அடித்தான். கைவிரல்களை மடக்கிப் இறுக்கிப் பிடித்துக் கொண்டு யோனிக்கு மேல் அடிவயிற்றில், கர்ப்பம் தங்குமிடத்

தில் பலமாகக் குத்தினான். அவன் என் வயிற்றில் குத்தும் போது அடிவயிற்றை வெட்டி, காச்சிய லோகத்தை அதற் குள் ஊற்றி, குடலை இழுத்து எறிவது போல இருக்கும். அந்த வேதனையில் அவன் அதில் குத்தும் ஒவ்வொரு முறையும் எனக்கு மயக்கம் வந்துவிடும். நான் அந்த வலியில் துடித்து மயங்கிக் கொண்டு போகும்போது என்னை நிலத்தில் தள்ளி விட்டு அவன் கைகொட்டிச் சிரிப்பான். மகள் பிறந்த பின்பு எனக்கு இனிப் பிள்ளை பிறக்க கூடாது என்று நினைத்து அவன் அப்படி அடித்தானோ எனக்குப் புரியவில்லை. அது கராட்டி மர்ம அடிகளில் ஒன்றாய் இருக்க வேண்டும். அந்த அடி எப்பொழுது விழும் என்பதே எனக்கு மர்மமாய் இருக்கும். அதன் வேதனையும் மயக்கமும் என்னைப் பலமுறை நரகத்தினிற் தள்ளி எடுக்கும். அந்த வேதனையிலும் சாவென்பது எவ்வளவோ மேலானது என்பதை அறிந்தும் என்னால் என் உயிரைப் போக்கிக் கொள்ளவும் முடியவில்லை.

அன்று மகள் பயத்தில் கட்டிலுக்கு அடியில் படுத்து நடுங்கியவண்ணம் தேம்பித்தேம்பி அழுதாள். மற்றவர்கள் அழும்பொழுது சிலருக்குக் கோபம் வரும். சிலருக்கு இரக்கம் வரும். மென்மையான மனது உள்ளவர்களுக்கு அழுகையே வந்துவிடும். மற்றவர் துன்பத்தைப் பார்த்து கைகொட்டிச் சிரிப்பவன் யாராக இருக்க முடியும் என்று எண்ணிய பொழுதுதான் நான் ஏற்கனவே நினைத்தது சரியெனத் தோன்றியது.

வாழ்க்கையே சித்திரவதையானாலும் மகளின் முதலாவது பிறந்தநாளைக் கொண்டாட வேண்டும் என்பது எனது ஆசையாக இருந்தது. எல்லாம் அவன் அனுமதியோடு நடந்தாக வேண்டும். அவனை எதிர்த்துக் கொண்டு ஒரு துரும்புகூட அசைக்க முடியாத ஒரு பயம் என் கழுத்தைப் பிடித்து நெருடியது. எனது விருப்பத்தை நான் அவனிடம் கூறினேன். அப்போழுது அவன் தன் பெற்றோருடன் கதைப்பது இல்லை. அதற்காகப் பிறந்தநாள் செய்யத் தேவையில்லை என்றான். எனக்கு அதை மாத்திரம் பொறுக்க

முடியவில்லை. மகளுக்கு வாழ்வில் ஒரே ஒருமுறைதானே முதலாவது பிறந்தநாள் வரும். அதைக் கொண்டாடும் வசதியில்லாவிட்டாலும் பரவாயில்லை. அந்த வசதிகள் அனைத்தும் எங்களிடம் இருக்கிறது. அவனது பாவப்பட்ட பணத்தில்கூட ஒரு சதம் எனக்கு தேவையில்லை. நான் எனது பணத்திலேயே பிறந்தநாள் செய்ய முடியும், என்றாலும் அவன் அதற்கும் மறுத்தான்.

அவனைச் சம்மதிக்க வைத்துவிடலாம் என்கின்ற நப்பாசையில் "அதுக்காக பிறந்தநாள் செய்யாமல் இருப்பதைவிட மாமா மாமியையும் கூப்பிட்டுப் பிறந்தநாளைக் கொண்டாடுவோம்" என்று கூறிவிட்டேன். எதற்கு எப்போது அடிப்பான் என்பது தெரியாதவனோடு அப்படிக் கதைத்திருக்கக் கூடாது. கதைத்தாக வேண்டும் என்ற கட்டாயத்தில் கதைத்துவிட்டேன். அவன் வெறி கொண்டவனாய்ப் பாய்ந்து எனது தலைமயிரைக் கொத்தாகப் பிடித்து தலையை சுவரோடு மோதினான். பின்பு காலால் எட்டி உதைத்துத் தள்ளினான். அவன் தள்ளிய வேகத்தில் சாப்பாட்டு மேசையில் அடிபட்டுக் நிலத்திலே விழுந்தேன். சாப்பாட்டு மேசையின் மூலை நெற்றியில் பலமாக அடித்து இருந்தது. அடித்த இடத்தில் மண்டை வெடித்து காயத்தால் இரத்தம் ஓடியது. இரத்தம் ஓடியது எனக்குத் தெரியாது. அதற்குள் நான் அடியின் தாக்கத்தில் மயங்கினேன்.

மயக்கம் தெளிந்து எழுந்த போது நெற்றில் இருந்து இரத்தம் வழிந்து முகம் உடம்பு எல்லாம் இரத்தத்திலே தோய்ந்து இருப்பதை உணர்ந்தேன். அதுவரையிலும் அவன் என்னைத் தூக்கவோ அல்லது காயத்திற்கு ஏதாவது செய்யவோ விரும்பாது அப்படியே விட்டிருந்தான். அது எனக்குப் பழகிப்போன ஒன்று என்பதால் இரத்தத்தை கட்டுப்படுத்த துவாயை எடுத்து அழுத்தத் துவங்கினேன். அதைப் பார்த்த அவன் தனக்கு நெஞ்சுக்குள் நோவதாயும், மாரடைப்பு வருவதாயும், நெஞ்சைப் பொத்திக்கொண்டு நிலத்தில் இருந்தான். இந்த நடிப்பு எதற்கு என்பதை

என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. இப்படிக் காயப்பட்டது வைத்தியர் மூலமாகப் பொலிசுக்குத் தெரிந்தால் அவர்கள் நோண்டி எடுப்பார்கள். பின்பு அவனுக்கு எதிரான கேஸாக அதை மாற்றிவிடுவார்கள். லேசாக இளகிப்போகும் என்னை இம்முறையும் ஏமாற்ற அவன் அந்த நடிப்பை அரங்கேற்றினான். அவனை மாட்டிவிட ஒருநாள் வரவேண்டும் என்பது எனது எதிர்பார்ப்பாக இருந்தது. அப்படிப்பட்ட ஒரு நாள் வந்தபொழுது அதைப் பயன்படுத்துவதற்குத் தயக்கமும் பயமும் மோலோங்கின. ஏகப்பட்ட தயக்கங்களுடன் நான் எனக்குள் குழம்பிக் கொண்டு இருந்தேன். இளகிய மனம் எனக்கு நிரந்தர எதிரியாகியது.

வழமையாக அவன் அடித்து நான் காயப்பட்டால் தனக்கு கவலையால் மரடைப்பு வந்துவிட்டதாகத் தாய் தகப்பனுக்கு தொலைபேசியில் அழுவான். அவன் நடிப்பு பற்றி மாமாவுக்கு ஓரளவு தெரியும். மாமி அவனைவிட மேலே ஒருமடங்கு மேலாகச் சென்று நடிப்பா. இது எனக்கு பழக்கப்பட்ட ஒன்றுதான்.

தான் அரக்ககுணம் உள்ளவன் என்பதை மற்றவர் அறிந்துவிடக்கூடாது என்கின்ற எண்ணம் அவனிடம் உண்டு. அதற்காக மனிதர்களிடம் நடிப்பதோடு கடவுளிடமும் நடிப்பான். எனக்கு அடித்துவிட்டு சிலவேளைகளில் முட்டுக்காலில் நின்று கர்த்தரை விழுந்து விழுந்து கும்பிடுவான்.கொலை செய்துவிட்டு பாவமன்னிப்பு கேட்டால் பாவம் தீர்ந்து விடும் என்கின்ற நம்பிக்கையில் வாழ்பவர்களுள் இவனும் ஒருத்தன். ஈவிரக்கம் இன்றிச் செய்வதை எல்லாம் செய்துவிட்டு முட்டுக்காலில் நின்று பாவமன்னிப்புக் கேட்டால் கடவுள் எப்போழுதும் கருணை வழங்குவார் என்கின்ற நம்பிக்கை. அதுவும் தனக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடக்கூடாது என்பதே அவன் வேண்டுதலாக இருக்கும். முதலில் யேசு படத்திற்கு முன்பு முட்டுக்காலில் நின்று மன்றாடுவான். பின்பு நடுஹோலில் நின்று மன்றாடுவான். பின்பு வீட்டின் வாசலில் வந்து நின்று மன்றாடுவான். அவன்

கடவுளிடம் மன்றாடுவதற்கு இடம் எல்லாம் பார்ப்பது கிடையாது. எனக்கு அவன் தத்துவம் புரியவில்லை. மூர்க்கமாகக் கொலை செய்துவிட்டு பாவமன்னிப்பு கேட்பதால் பாவத்தைக் கழுவிக் கொள்ளலாம் என்கின்ற மதநம்பிக்கை பற்றியும் புரியவில்லை. அசுரனாய் மனிதர்களைக் கொடுமைப்படுத்துபவன் காணாத கடவுளை எண்ணி நடுங்குவது விநோதமாய் இருந்தது. அதைவிட விநோதமானது அவனோடு தேவாலயத்திற்குச் சென்று சென்று நானும் அந்த கடவுளை நம்பத் தொடங்கியது. எந்த நம்பிக்கைகூட எனக்கு அவன் சித்திரவதையில் இருந்து விடுதலை பெற்றுத் தரவே இல்லை.

என்னை வரவர கண்காணிப்பதில் குறியாக இருந்தான். நான் அவனைப் பிரிந்து சென்றுவிட்டால் பணம் கறக்க முடியாது. ஊரிலும் அவமானத்தைச் சந்திக்க வேண்டிவரும். நான் எங்கு சென்றாலும் கடும் காவலாக என்னை அவன் தொடரத் துவங்கினான் அவன் பின்னுக்கும் முன்னுக்கும் திரிவதால் யாரிடமும் அதை முறைப்படவும் என்னால் முடியாது. அவன் வேலைக்குச் சென்ற பின்பு யாருக்காவது எனது நிலைமையைச் செல்ல வேண்டும் என்றாலும், அவன் திடீர் திடீரென இடையில் வேலையையும் விட்டுவிட்டு வந்து வீட்டில் நிற்பான். நான் நிரந்தரமாகக் கூண்டிற்குள் அடைக்கப்பட்ட கிளியானேன். எனது இறக்கையை நகத்தால் பிறாண்டும் பூனையுடன் நித்தமும் வாழ்க்கை நடத்தினேன். அவன் வாழ்நாள் பூராகவும் என்னை அடைத்துவைத்து, அழகுபார்த்து, சித்திரவதை செய்து அவன் ஏதோ ஒருவித இன்பத்தை அநுபவிப்பவனாய்த் தோன்றினான்.

அன்று நெற்றி உடைந்து இரத்தம் கட்டுப்படாது ஓடிக் கொண்டே இருந்தது. அந்த இரத்தப் போக்கைப் பார்த்துப் பயந்து போனவன் என்னை மருத்துவரிடம் அழைத்துச் சென்றான். மருத்துவர் எப்படி நடந்தது என்று கேட்டார். தவறி விழுந்து மேசையுடன் அடிபட்டது என்று அவனே அதற்குப் பதில் கூறினான். மருத்துவர் நம்பாதவராக என்னை

ஒருமுறை பார்த்தார். நான் எதுவும் பேசவில்லை. அவர் அத்தோடு கதைப்பதை நிறுத்திவிட்டு எனக்கு பனிரெண்டு இழைகள் போட்டார். எனது மனதும் அப்படியே இறுகத் தைக்கப்பட்டு இருந்தது. கண்கள் மாத்திரம் இடைவிடாது பனித்துக் கொண்டே இருந்தன. அவன் அங்கு வந்தும் தனக்கு மார்புக்குள் நோவதாக நடிப்பதை நிறுத்திக் கொள்ளவில்லை. இறுதியாக அவனைப் பரிசோதித்த மருத்துவர் அவனுக்கு எந்தவித பிரச்சினையும் இல்லை என்று எனக்குத் தெரிந்த உண்மையை உறுதிப்படுத்தினார். அவன் நாடகங்களையாவது என்னால் அடையாளம் கண்டு கொள்ளமுடிந்ததில் ஒருவித திருப்தி. இந்தக் கொடூரமான நடிகனிடம் இருந்து எப்பொழுது எனக்கு விடுதலை என்பது மாத்திரம் புரியாமலே காலம் நீண்டது.

அம்மா யாழ்ப்பாணத்தில் இருந்து திரும்பி வந்த நேரம் அது. சாப்பிட்ட பின்பு குட்டித் தூக்கம் போட அவ சென்று விட்டா. அந்தச் சந்தர்ப்பத்தில் என்னை அவன் ரீவிகேம் விளையாட வருமாறு வற்புறுத்தினான். நான் வேண்டாம் என்று சொல்லவில்லை. அப்படிச் சொன்னால் அதுக்கும் அடிப்பான். நான் அவனுடன் விளையாடச் சென்றேன். நான் விளையாட்டை இலகுவாகக் கற்றுக் கொண்டு அதில் வெற்றி பெற்றுக் கொண்டு இருந்தேன். அவ்வளவுதான். அவனை நான் வெல்வதா என்கின்ற கோபம் தலைகால் புரியாது வந்துவிட்டது. அவன் பொறுக்க முடியாமல் என்னை அடித்தான். எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. கத்தி அழுவதும் எனக்குப் பழக்கமில்லை. கத்தி அழுவதாய் இருந்தாற்க்கூட இன்று அதைச் செய்ய முடியாத வகையில் வீட்டில் அம்மா இருந்தா. எனது கண்கள் கவலையை கண்ணீராக்கின. எனக்கு அந்த வேதனை தாங்க முடியாது இருக்கும்போது அவன் அம்மாவிடம் சென்று நான் அவனை அடித்தாக சொல்லிக கவலையாக நடித்தான். அதை அம்மா அப்பாவியாக நம்பியபொழுது எனக்கு சிலகணங்கள் உலகே வெறுத்தது.

## 16

புத்தளத்தில் பேருந்து தேநீர் இடைவேளைக்காக தரித்து நின்றது. பொதுக்கழிப்பிடத்திற்குச் செல்வது என்பது அடக்க முடியாத அவஸ்தை ஏற்படும்பொழுது மட்டுமே நடைபெறும். அந்தத் துர்நாற்றத்தால் ஏற்படும் அருவருப்பு எனக்கு எப்போதும் குமட்டலை உண்டுபண்ணும். இன்று சிறுநீர் கழிக்க வேண்டும் போன்று ஒரு அவஸ்தை நீர்கொழும்பைத் தாண்டும் பொழுதே துவங்கிவிட்டது. தமிழன்பன் பேருந்து நிறுத்தப்பட்டவுடனேயே எழுந்து சென்றுவிட்டான். நான் சிறிது தயங்கித்தான் எழுந்து சென்றேன். அவஸ்தையை தணித்துவிட்டு வெளியே வரும்போது வயிற்றைப் பிசைந்து சத்தி வருவதுபோலத் தோன்றியது. ஒருவாறு சமாளித்த வண்ணம் வந்து கச்சான் விற்பவரிடம் ஐம்பது ரூபாவிற்கு கச்சான் வாங்கிக் கொண்டேன். குடிப்பதற்கு ஒரு சிறிய தண்ணீர் போத்தலையும் அதனுடன் வாங்கிக் கொண்டு பேருந்தை நோக்கித் திரும்பி வந்துகொண்டு இருந்தேன். ஒரு கணம் எனக்கு இதயமே நின்று விட்டது. பயத்தில் உறைந்து போனேன். அவன்தானா? ஒளியும் இருளும் பிணைந்து ஒளி தோற்றுக்கிடந்த தெருவேரத்தில்... அவன் உருவம் சரியாகத் தெரியவில்லை. அவனைப் போன்றுதான் இருந்தது. அவன் என்னைக் கண்டதாகத் தெரியவில்லை. அவசரமாகக் கொழும்பு நோக்கிச் செல்லும் வான் ஒன்றில் ஏறிக் கொள்வதைப் பார்க்க முடிந்தது. தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போனது உண்மையாக இருந்தாலும் என் கை கால்கள் அசைய மறுத்து விறைத்துப் போய்க் கிடந்தன. நான் அவனின் வாகனம் சென்ற திசையைப் பார்த்தவண்ணம் அசையாது நின்றேன். என்னால் அந்த அதிர்ச்சியிலிருந்து விடுபடமுடியவில்லை.

“பஸ் வெளிக்கிடப்போகுது... இந்த பஸ்ஸை விட்டிட்டு வேற பஸ்ஸிலயா வரப்போறீங்கள்?” தமிழன்பன் குரல் காதிற்குள் கேட்டது. இன்னமும் அதிர்ச்சி தன்பிடியில்

வைத்திருந்தது. பேயறைந்தது போன்று இருந்த என்முகத்தைப் பார்த்த பின்பு அவன் சற்று திகைத்துப் போனதை என்னால் அவதானிக்க முடிந்தது.

நான் எதுவும் போசாது எனது இருக்கையில் அமர்ந்து கொண்டேன். அவன் என்ன நடக்கிறது என்பது புரியாது தனது இருக்கையில் அமர்ந்தவாறு கனிவோடு என்னைப் பார்த்தான். 'பேருந்தில் நீ எனக்கு யன்னலோரம்' என்கின்ற குதூகலம் அவனிடம் இருக்கவில்லை. தலைகீழான குறுக்கெழுத்துப் படிவமாக அவன்முகத்தில் விடையில்லாத ஆயிரம் கேள்விகள் பரவிக் கிடந்தன. மர்மம் நிறைந்த பெண்ணோடு பயணிப்பதாய் அவன் எண்ணி இருக்கலாம்.

எனக்கு அவனைத் தொடர்ந்தும் பார்த்துக் கொண்டு இருக்க முடியவில்லை. பார்க்கமுடியாது யன்னல் வழியாக வெளியே பார்ப்பதாக நடிக்கத் துவங்கினேன். அவனைக் கண்டபோது ஏற்பட்ட நடுக்கம் இன்னும் குறையவில்லை. அது உடம்பின் ஒவ்வரு நரம்பையும் அதிரப்பண்ணியது. பயத்திடம் தோற்றுக் கொண்டிருக்கும் வாழ்கைக்கு முற்றுப்புள்ளி வைக்க முடியாத அவஸ்தையை நான் அவனிடம் காட்டிக்கொள்ள விரும்பவில்லை. அந்நியனிடம் சோரம் போகாது சில உள்ளுணர்வுகள் என்னைத் தடுத்து நிறுத்தின. அவன் சிறிது நேரம் என்னைப் பார்த்துவிட்டு... பேருந்து புறப்படவும் ரி.வியில் ஓடிய சினிமாப்படத்தைப் பார்க்கத் தொடங்கினான். எனக்குப் பேசாது தூங்கிப் போய்விடவேண்டும் போல இருந்தது. பேசினால் என் வாயாலேயே யாரிடமும் இதுவரை கொட்டாத என் அவலங்களைக் இவனிடம் கொட்டி விடுவேனோ என்கின்ற அச்சமும் பயமுறுத்தியது.

இவனிடம் உண்மையைச் சொல்லி விடுவோமா? சொன்னால்... வெளியே அழகாகக் கதைத்து உள்ளே அசிங்கமான ஒரு மிருகமாய் இவனும் இருந்துவிட்டால்? எழுத்தாளன் அப்படி இருப்பானா? அவன்தானே சொன்னான் எழுத்தாளன்கூட ஒரு சாதரண மனிதன் என்று... உண்மை... இவனும் இரத்தமும் சதையும் கொண்ட ஒரு சாதாரண

மனிதன்தானே? சந்தர்ப்பம் கிடைத்தால் பயன்படுத்தக்கூடாது என்கின்ற துல்லிய தர்மத்தைப் பேணச் சட்டமா வைத்து இருக்கப் போகின்றான்?

“வெளியால போனபோது உங்களைப் பேய் அறையும் எண்டால் நானும் கூடவே வந்து இருப்பனே?”

அவன் காதிற்குள் திடீரெனச் சொன்னான். மீண்டும் மீண்டும் அந்த அண்மை எனக்கு விலகிச் செல்ல இயலாத அந்தரத்தை உண்டாக்கியது. என்னைத் தொடுவதோ உரசுவதோ எனக்குப் பிடிப்பதில்லை. பெண்கள் தொட்டுக் கதைத்தாலே ஏதோபோல இருந்ததுண்டு. அதற்காகவே பாடசாலையில் ஒருத்தியை அறைந்தது இன்னும் பசுமையாக என் ஞாபகத்தில் இருக்கிறது. அந்த மிருகத்திடம் அகப்பட்ட பின்பு எந்த ஆணைக் கண்டாலும் அந்தரமாகிவிடும். இவன் என் காதுக்குள் வந்து கதை சொல்லுகிறான். நான் இன்னும் கை தூக்கவில்லை. தூக்கவேண்டும் என்கிற உணர்வும் எழவில்லை. அந்தத் துணிவு இருக்கிறதா என்றும் புரிய வில்லை. என்ன மாயம் இது? எனக்குச் சம்பந்தம் இல்லாத அந்நியனிடம் ஏன் இந்த இரக்கம்? கோபமாக ஒரு வசனம் அவனைப் பார்த்துப் பேசமுடியவில்லை. என் சுபாவம்... யாரையும் நான் நோகப் பேசியது கிடையாது. இதனால் என்னை எல்லோரும் வாயில்லாப் பூச்சியாக நினைத்து விட்டார்கள். அதற்கு மேல் என்னுடைய சிரிப்பு... நான் பற்களைக் காட்டினாலே இளிச்சவாய் என்று எழுதி ஒட்டி இருக்கிறதோ எனக்குத் தெரியவில்லை. தமிழன்பன் எழுத்தாளன். சிலவேளை எனது பலவீனத்தை அவன் இப்போது அடையாளம் கண்டிருப்பானா? அதுதான் என்னோடு கதைக்கிறானா? இவனிடம் கதைக்காமல் இருப்பதுதான் பாதுகாப்பா?

“என்ன இப்பிடி யோசிக்கிறீங்க? நான் நரமாமிசம் சாப்பிடுவது கிடையாது. என்னை ஒரு சாதரண மனிதன் என்கின்ற அளவிற்கு நம்பலாம்.”

“ஒண்டும் இல்லை... பார்க்ககூடாத ஆள் ஒருவரைப் பார்த்து விட்டதால் உண்டான பதட்டம்.”

“என்னையா சொல்லுகிறீர்கள்?” தெரிந்துகொண்டே வேண்டும் என்று கேட்டான் தமிழன்பன்.

“ஐயோ உங்களைச் சொல்லுவனா?” ஏன் நான் அந்த வசனத்தைச் கூறினேன் என்பது எனக்கே புரியவில்லை. அதன் அர்த்தம் நானே வழிவதாக அவனால் எடுத்தக் கொள்ளப்பட்டால்...? சீ என்ன நான் கதைகிறேன். என்னவாகிற்று எனக்கு...?

“என்னைப் பார்த்து நம்பும் ஜீவன்கள் இருப்பது எனக்குச் சந்தோஷம் தருகிறது.”

“உங்களைப் பார்த்தும் நம்பாத ஜீவன்களும் இருக்கின்றனவா?” நான் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

“ஏன் இல்லை? நீங்கள் என்னை முழுமையாக நம்புகிறீர்களா?”

பொல்லுக் கொடுத்து அடி வாங்கிய தவிப்பு என்னிடம். கள்ளனைப் பிடித்துவிட்ட பெருமிதம் அவன் வதனத்தில். எனக்கு அது பிடிக்கவில்லை. நான் எனது முகத்தை வெளியே பார்க்க முடியாத பேருந்தின் கண்ணாடிப் பக்கம் திருப்பிக் கொண்டேன். என் மனநிலையை உணர்ந்தவன்போல் அவன் சினிமாப் படம் பார்க்கத் தொடங்கினான். பேருந்தில் நான் உனக்கு யன்னலோரம். இப்பொழுது என்ன செய்யலாம்?

## 17

மார்கழிமாதம் என்றால் மழையும் தவளையும் இல்லாத யாழ்பாணத்தை காண்பது அரிது. தோட்டத்திற்கு நீரிறைத்து மாரடிப்பவர்களுக்கு இடைவெளி விடுகின்ற மாதமும்

மார்கழியாகவே இருக்கும். காரைநகரில் இருந்தபோது சிவன்கோவிலும்... அதன் திருவிழாக்களும்... பச்சை பசேல் என்ற வயல்களும்... எப்பொழுதும் நெஞ்சை வருடிச் செல்லும் பால்பிடிக்கும் நெல்லின் வாசமும் பாரவசத்தை உண்டுபண்ணும்.

போர் தொடங்கியபின் மாதங்கள் பார்க்க முடிவதில்லை. எல்லா மாதமும் தலையில் இடிவிழும் மாதங்களாகின. 1994 ஆம் ஆண்டு மார்கழி மாதம். போர் நிலைமைகள் சற்று மோசமானது தெரியும். அதற்காக இப்படிப்பட்ட தலை கீழான விஷயங்கள் நடைபெறும் என்று கடுகளவும் நாங்கள் கனவு காணவில்லை. அன்று நாங்கள் மாலைச் சாப்பாடு என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டு இருந்தோம். அம்மா எப்பொழுதாவது ஒருவாய் சாப்பிடுவது புதிய முன்னேற்றமாக இருந்தது. நான் கொஞ்சம் என்றாலும் சாப்பிட வேண்டும். அம்மம்மாவுக்கு வஞ்சகம் இல்லாமல் சாப்பிட்டால்தான் நிம்மதியாகத் தூக்கம் வரும். அப்பொழுது ஆறுமணி இருக்கும். திடீரெனப் புலிகளின் ஒலிபெருக்கி நாலுதிசை களிலும் அலறியது. வலிகாமத்தை விட்டு உடனடியாக மக்கள் இடம்பெயர வேண்டும் என்று அவர்கள் அறிவித்தார்கள். இதைக் கேட்டது தொடக்கம் எங்கும் அல்லோலகல்லோலமாக, மக்கள் பதற்றத்தோடு அகப்பட்டதை கையில் எடுத்துக் கொண்டு புறப்பட்டனர். எல்லோருக்கும் அடுத்தநாள் எங்கு வாழ்க்கை என்பதே திகிலாகியது. இருக்கும் சொத்து இனி என்னவாகும் என்பது வேதனை தரும் கேள்வியாகியது. மக்கள் காரைநகரைவிட்டுத் திடீரெனப் புலிகளோடு இடம்பெயர்ந்து வந்தார்கள்.

எல்லோரும் பதறினார்கள். என்ன செய்வது என்று தடு மாறினார்கள். புலிகள் பத்துமணிக்குள் வெளியேறுமாறு கட்டளையிட்டிருந்தனர். மந்தை ஒன்று ஓடினால் அதன்பின்னே கேட்டுக் கேள்வியில்லாது ஓடும் கூட்டமாக மக்கள் பயத்தில் பாதைகளை அடைத்தவண்ணம் பயணம் செய்யப் புறப்பட்டனர். மக்கள் வெள்ளம் பெருகப் பெருக நெரிசல் அதிகமாகியது.

அந்த வெள்ளத்திற்குள் போராளிகளும் அடைக்கலம் புகுந்து கொண்டனர்.

எதிர்பார்க்காத பதற்றத்தில் நாங்கள் கதிகலங்கிப் போனோம். இந்தா காலுக்குள் வந்துவிட்டார்கள்... உடனே புறப்பட்டு ஓடுங்கள் என்பது போல அவர்கள் அறிவிப்பு அலறிற்று. உயிர் பிழைத்தால் போதுமென்பதாய் ஒரு துணிப்பையோடு நாங்கள் புறப்பட்டிருந்தோம். நடக்க முடியாத அம்மம்மாவை நல்லூர் கோவில் வரையும் வாகனத்தில் கொண்டு வந்தோம். அங்கிருந்து நகர முடியாமல் வாகனங்கள் இறுகிப்போய்க் கிடந்தன. எங்கும் மனிதத் தலைகள் அடுக்கி வைத்ததான தோற்றம். எள்ளுப் போட்டாலும் நிலத்தில் விழாத அடுக்கில் மனிதத் தலைகளை நான் அன்றுதான் பார்த்தேன். நல்லூர்த் திருவிழாவிற்கும் கூட்டம் வருவது உண்டு. அது திருவிழாப் பார்க்கும் ஆசையில் வரும் கூட்டம், இது உயிர்தப்பிக் கொள்ளும் அவசரத்தில் குஞ்சு குறுமான் தொடக்கம் எல்லோரும் அள்ளுப்பட்டுவந்த ஜன வெள்ளம். அது நகரமுடியாத நெரிசலில் அழுந்தியது. பாலகர்கள் வருந்தும் அவலம் எங்கும் எதிரொலித்தது. இது ஆரம்பம் மட்டுமே என்பது எனக்குப் புரிந்தது.

இரண்டு ஆறுகள் ஓர் இடத்தில் வந்து சங்கமிப்பது போல நல்லூராலும் அரியாலையாலும் வந்த சனவெள்ளம் கைதடிப்பாலத்தை அடையும் அவதியில் அலைமோதியது. மனிதர்கள், எங்கு பார்த்தாலும் மனிதர்கள், கணக்கில்லாத மனிதர்கள். இதில் எத்தனை வாழும்? எத்தனை மாளும்? யாரும் கணக்குப் பார்க்க கணங்கள் இல்லை. உயிருக்கு எந்தப் பெறுமதியும் இல்லாத நிஜங்கள் மட்டும் எங்களை வாட்டின.

நெருங்கி நெருங்கி மனிதர்கள் அருகருகாக இறுக, மனிதர்கள் நிற்கவே முடியாத அவலம். போராட்டத்தின் மத்தியில் ஓர் அடி எடுத்து வைத்தவர்கள் மறு அடி எடுத்து வைக்கமுடியாது நின்றார்கள். பின்பு பல மணித்துளிகள் சென்றபின்பு மறு அடி எடுத்து வைத்தார்கள். ஒரு சிறு சலசலப்பால் இந்தக் கூட்டத்தில் வெருட்சி ஏற்பட்டால்

எத்தனை உயிர்கள் பலியாகும் எனபதற்கு கணக்கு வைத்துக் கொள்ள முடியாது. எங்கள் அச்சங்கள் முடிவு இல்லாத ஏதோ ஒன்றாக இழுபட்டுக் கொண்டே இருந்தது.

எவ்வளவு நேரம் இவ்வாறு நெருக்குண்டு நின்றோம் என்பது தெரியவில்லை. நாங்கள் குடிப்பதற்கு எதுவும் கையில் கொண்டு வரவில்லை. மாரியாக இருந்தாலும் முதலில் சூரிய அனல் வாட்டியது. மனித நெருக்கத்தில் ஏற்பட்ட வெக்கை எங்களை அவிய வைத்தது. எங்கள் உடல்கள் வியர்த்ததினால் உடலின் நீர் ஆவியாகியது. மாரியிலும் உப்புப்படரும் மேனிகளை நான் பார்க்க முடிந்தது. தாகத்திற்கு மறுதாகம் உண்டுபோலும். அதை அறிவிக்கும் வகையில் தாகம் எங்களைத் தாக்கியது. மாரி மாதம் என்றாலும் தெருவில் கிடக்கும் நீரை அள்ளிப் பருகிவிடமுடியுமா? சிறிது குடிநீர் வைத்திருப்பவர்களும் தங்களுக்கே போதாது என்கின்ற போது மற்றவர்களுக்கு கொடுப்பார்களா என்ன? யாரும் கொடுக்க முன்வரவில்லை. யாருக்கும் அது கிடைக்க வும் இல்லை. குழந்தைகளின் சத்தம் தண்ணீர் தண்ணீர் என அவலமாக ஒலிக்கத் தொடங்கியது. அறிவின் அரைவேற் காட்டுத்தனத்தில் சிலர் சீனியை அள்ளி வாயில் போட்டுக் கொண்டு தாகம் தீரும் என்று கனவு கண்டார்கள். அது மேலும் தாகத்தை பெருக்க நாக்கு வறண்டது. அவர்களிடம் இருந்து வரும் ஒலியும் குழந்தைகளோடு சேர்ந்து தண்ணீர் தண்ணீர் என மண்டையைக் குடைந்தது. காதைக் கைகளால் பொத்திக்கொள்ள வேண்டும் போல் எனக்கு அந்தரம் வந்தது. நான் அதை அடக்கிக் கொண்டு மறு அடி எடுத்து வைக்க முடியுமா என்று பார்த்தேன்.

அங்கே இரண்டு பகுதியாக மேற்கொண்டு நகர்வு போய்க் கொண்டு இருந்தது. சைக்கிளோடு அதை உருட்டுபவர்கள் ஒரு பக்கமாகவும்... நடப்பவர்கள் இன்னொரு பக்கமாகவும்...

எவ்வளவு நேரம் எடுத்ததோ தெரியவில்லை. நாங்கள் அரக்கி அரக்கிச் செம்மணியை வந்து அடைந்தோம்.

யாரோ சிலராவது புண்ணியம் செய்து இருக்க வேண்டும். திடீரென மழை பெய்யத் துவங்கியது. முதல் இருந்த மனித நெரிசலால் உண்டாகிய வெட்கைக்கு அது இதமாகியது. அதிக நேரம் செல்லச் செல்ல மாரிக்கே உரித்தான இம்சையாக அது மாறிற்று.

தண்ணீர் விடாயில் இருந்தவர்களுக்கு இறைவனே நேரே வந்ததான புளுகமாயிற்று. அவர்கள் தாங்கள் கொண்டு வந்த குடையைப் பிடித்து... அதில் விழுந்து ஓடிய தணணீரைச் சேமித்து... தமது தாகத்தை தீர்த்துக் கொள்ளத் தொடங்கி னார்கள். எனக்கு அப்படி சேகரித்த நீரைப் பருக தயக்க மாகியது. என்னால் தாகத்தை இன்னும் பொறுத்துக் கொள்ள முடியுமென்று தோன்றியது.

இந்த அமளிக்குள் திடீரென வானில் கெலிகள் தோன்றின. அவர்கள் அதில் இருந்தவண்ணம் ஒளியைப் பாய்ச்சி நோட்ட மிட்டனர். இப்படியான நோட்டமிடல் நான் விருத்தெரிந்த காலங்களில் இருந்தே நடக்கிறது. சிலவேளைகளில் இப்படி வரும் கெலிகள் சுட்டுக் கொண்டு செல்வதும் உண்டு. இப்பொழுது இருக்கும் சனநெருக்கத்திற்குள் ஒரு குண்டைப் போட்டால்... யாழ்ப்பாணத்தின் சனத்தொகையில் கணிசமான தமிழர்களை அது பலி எடுக்கும். அப்படி எதுவும் அப்போது நடக்கவில்லை. கடவுளிடம் உயிருக்கு மண்டாடியவர்களுக்கு அவர் வரம் கொடுத்த திருப்தி ஏற்பட்டது.

மழையில் தொடர்ந்து நனைவது இம்சையாக இருந்தாலும் குடையில் நீர் சேகரிப்பதும், அதை அருந்துவதும் பிரபலமாயிற்று. இந்த வரப்பிரசாதம் கிடைத்திருக்காவிட்டால் தாகத்தால் பல ஆயிரம் மக்கள் மயங்கி விழுந்திருக்கலாம்.

இரவு நான் வீட்டிற்குத் திரும்பிப் போக எண்ணினேன். சைக்கிளையோ மனிதர்களையோ திருப்ப முடியாது. நெருக்கம் தனது அழுங்குப்பிடியை விடவில்லை. கிழங்குகள் அடுக்கியது போன்ற அந்த நெருக்கத்தில் நசிந்து தொடர்ந்து நடக்க மூச்சு முட்டியது. திரும்பிப் போதல் என்பது சாத்தியமற்றது

என்பதை உணர்ந்து நான் மெதுவாக அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். ஊரோடு ஒத்தோடு என்பது மட்டுமே எனக்கு கொடுக்கப்பட்ட தெரிவாக... நான் அம்மாவோடு அந்த நெரிசலுக்குள் தொடர்ந்தும் முன்னேறினேன்.

இராணுவம் முன்னேறிவிடக்கூடாது என்பதற்காகக் கைதடிப்பாலத்தைப் புலிகள் உடைத்து இருந்தார்கள். பின்பு மக்கள் கடந்து போவதற்காய் மரத்துண்டைப்போட்டுத் தற்காலிக வழிசமைத்தார்கள். மக்கள் வெள்ளம் வெற்றிகரமாக சிறுகச் சிறுக மறுகரையை அடையத் துவங்கியது.

சில புலிவீரர்கள் மக்களுக்கு உதவியாகச் சைக்கிளை தூக்கி பாலத்தை கடக்கக் கைகொடுத்தனர். பலர் சுய மாகவோ அல்லது அடுத்தவர் துணையோடோ அதைக் கடந்தார்கள்.

அடுத்தநாள் கைதடி வயோதிபர் மடத்திற்குச் சற்று முன்பாக இருந்த மரங்களின் கீழ் பெரும் தொகையான மக்கள் குழுமி இருந்தார்கள். அவர்கள் உடல் வலுவை யெல்லாம் இழந்து... நடப்பதற்கு வலுவில்லாமல்... நித்திரை மயக்கத்தில் தள்ளாடினார்கள். சிலர் புசத்தினார்கள். சிலர் ஒப்பாரி வைத்தார்கள். சிலர் பித்துப் பிடித்தவர்களைப்போல ஓடித்திரிந்தார்கள்.

அங்கு குடிப்பதற்கு நீர் வழங்கப்பட்டது. எனக்குக் கனவில் நடப்பதாகத் தோன்றியது. கண்ணிற்குள் நட்சத்திரங்கள் ஆயிரம் ஆயிரமாய் மின்னிக் கொண்டிருந்தன. நித்திரை வெறி நிலைகொள்ள முடியாது தள்ளி விழுத்தியது. சைக்கிள் வரிசையில் நின்று மற்றவர்களின் பின் சைக்கிள்களால் காலில் அடிபட்டிருந்தேன். அவ்விடம் இப்பொழுது வீங்கிவிட்டது. அந்த வேதனை வேறு என்னைத் துன்புறுத்தியது.

உயிர் தாங்கும் ஆசை என்னையும் விட்டுவைக்க வில்லை. அவசர அவசரமாக நீர் அருந்தினேன். பின்பு அம்மாவோடு ஆறுதலாக இளைப்பாறினேன். அந்தச் சமயத்தில் எங்கள் உறவினர் பலரும் அங்கு வந்து சேர்ந்து

கொண்டார்கள். அது எனக்கும் அம்மாவிற்கும் நிம்மதியைத் தந்தது. கடைக்கார அண்ணன் ஏற்கனவே பொருள்களோடு சவச்சேரிக்குப் போயிருந்தார். பின்பு ஏற்பட்ட அமளியில் அவர் அங்கு மாட்டுப்பட்டுவிட்டார். அது ஒருவகையில் இப்பொழுது எங்களுக்கு அதிர்ஷ்டமாக அமைந்துவிட்டது. அவர்கள் பொருள்களை ஏற்ற வைத்திருந்த வானைப் பயன்படுத்தி எங்களையும், பல உறவினர்களையும் சாவகச்சேரியில் உள்ள உறவினர் வீடொன்றுக்கு அழைத்துச் சென்றார்கள்.

அன்று உடனே புறப்படுமாறு புலிகளின் அலறல் அவதிப்படுத்தியதில் நாங்களும் அலமலக்கப்பட்டு மாற்றுடுப்புக் கூட இல்லாது வந்திருந்தோம். அப்படி ஓடிவந்தது எவ்வளவு பெரிய தவறு என்பதை மாற்று உடுப்புக்கு அவஸ்தைப் படும்போதுதான் உணர முடிந்தது. அதுவும் மாதவிடாய் காலத்தில் வந்த பெண்கள் நிலைமை பெரும் சங்கடமாகியது. அவமானப்படுவதா அல்லது அரியண்டப்படுவதா என்பதே அவர்கள் பாரிதாப நிலையாகும். அப்படி எத்தனை ஜீவன்கள் வதைபட்டதோ எனக்குத் தெரியாது. நாங்களும் உறவினரிடம் துணிக்கு கையேந்த வேண்டியதாகிற்று.

கால் இயலாமல் இருந்த அம்மம்மாவை முதல்நாள் நல்லூர்வரையும்தான் கொண்டுவர முடிந்தது. அதற்கு மேல் தான் வரவில்லை என்று எங்களை தப்பிச் சென்றுவிடுமாறும் கடுமையாக அவர் பிடிவாதம் பிடித்தார். கடைசியாக அவரை அங்கேயே விட்டுவிட்டு வரவேண்டியதாகிற்று. அம்மம்மாவுக்கு இராணுவத்தைக் காண்பதில் பயம் இல்லை. இராணுவத்தையும் கூப்பிட்டு வைத்து அவ கதை சொல்லுவா என்பது எனக்குத் தெரியும். பின்பு இராணுவந்தான் அமமம்மாவுக்குப் பயந்து ஓட வேண்டி வரும். முதலில் ஓர் இடத்தைப் பிடிக்கும் போது இராணுவம் பயத்தில் கண்டபடி சுட்டுக்கொண்டு வரும். அப்போழுது அகப்பட்டால் அம்மம்மாவின் வாய் நிரந்தரமாக மூடுப்பட்டுவிடும் என்று சில வேளைகளிலே நான் பயந்ததும் உண்டு.

அடுத்த நாள் காலை பலர் பொருள்கள் எடுத்துவர யாழ்ப்பாணம் புறப்பட்டார்கள். நானும் அங்கு சென்றுவரத் தயாரானேன். அதற்கு "நீ குமர்ப்பிள்ளை... இப்ப அங்க போறது ஆபத்து. ஆமிட்ட ஆப்பிட்டால் கிலுசகேடுபடுத்திப் போடுவான்கள்" என்று சொல்லி என்னைத் தடுத்து விட்டார்கள். அந்தச் சொற்களில் உயிரான நடைமுறை உண்மை இருந்தாலும் எனக்கு முதலில் கோபம் வந்தது. பின்பு எனது பாதுகாப்பை எண்ணித்தானே அப்படிச் சொல்கிறார்கள் எனச் சமாதானப்பட்டுக் கொண்டேன்.

அம்மா, அண்ணா, மற்றும் சில ஆண்கள் அடங்கிய குழு ஒன்று அதற்காகப் புறப்பட்டு யாழ்ப்பாணம் சென்றது. அவர்கள் போய்ப் பொருள்களுடன் அம்மம்மாவையும் அழைத்து வந்தார்கள். பயப்பட்டது போல இராணுவம் யாழ்நகரை மறுநாளே வந்து கைப்பற்றிவிடவில்லை.

இராணுவம் பதினைந்து நாள்களுக்குப் பின்புதான் யாழ்நகரை வந்து அடைந்தது.

## 18

ஐரோப்பாவில் கோடைகாலமாக இருக்கும்போது இலங்கையிலும் கோடைகாலமாக இருக்கிறது. அதற்கு இலங்கை மத்தியகோட்டைத் தாண்டி வடக்கே அமைந்துள்ளதே காரணம். கோடைகால விடுமுறை ஐரோப்பியர்களின் கொண்டாட்டமான காலமாகும். வசதி கைகொடுத்ததில் உலகை உல்லாசமாக வலம் வருவார்கள். அந்த உல்லாசத்தை புலம் பெயர்ந்த தமிழர்களும் பற்றிக் கொண்டார்கள். உறவுகளைப் பார்த்துக் கொண்டாடும் வாய்ப்பு இதனால் கிடைக்கிறது.

வெளிநாட்டில் இருந்து அக்கா, குடும்பத்தோடு விடுமுறைக்காக இலங்கைக்கு வந்திருந்தாள். நாங்கள் விமான நிலையத்திற்குச் சென்று அவர்களை அழைத்து

வந்தோம். முதலில் அவன் பழகும் போது மிகவும் நல்லவனாகவே பழகுவான். அவனின் அந்த வேஷத்தில் மீண்டும் ஏமாந்த அக்காள் குடும்பமும் அவனை முழுமையாக நம்பினார்கள். அவனை நம்பாதீர்கள் என்று அவன் இருக்கும் பொழுது என்னால் கூறமுடியாது. பட்டறிவு இருந்தாலும் அதை ஞாபகம் வைத்திருப்பதாக அக்கா காட்டிக் கொள்ள வில்லை. அது எனக்கு வேதனையைத் தந்தது. எனது கவலைகள் மனதிற்குள் அழுந்திப்போக நானும் அவர்களோடு சேர்ந்து திரிந்தேன். சிரித்தேன். மகிழ்வதாய் நடித்தேன்.

எல்லோருமாகச் சேர்ந்து கதிர்காமம் போவதற்குத் திட்டம் தீட்டினார்கள். என் மனது வரக்கூடிய சூறாவளியை எண்ணிப் பேதலித்தது. கதிர்காமப் பயணம் முடிவாயிற்று. வான் ஒன்று பிடித்து பயணம் கொழும்பில் இருந்து ஆரம்பமாகியது. இந்த அபசகுனமான பயணத்தில் மாமாவும் வந்து சேர்ந்துகொண்டது சற்று ஆறுதலாகியது. சிலவேளை மாமா பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதற்குச் சமயோசிதமாய்க் கதைப்பார் என்கின்ற நம்பிக்கை எனக்கு உண்டு. கதிர்காமம் போகும் போதே பல சிறு உரசல்கள் ஏற்பட்டுக்கொண்டு இருந்தாலும் அவற்றையுப் புறம் தள்ளி எங்கள் பயணம் கதிர்காமத்தை நோக்கித் தொடர்ந்தது.

ஒருவாறு நாங்கள் கதிர்காமத்தை அடைந்தோம். கதிர்காமத்தில் தங்குவதற்கு ஒரு வீடு வாடகைக்கு எடுக்கப் பட்டது. ஒரு வான் நிறையச் சென்ற எல்லோருக்கும் பொதுவாக இரண்டு அறைகள் மாத்திரம் இருந்தன. அவன் வீட்டிற்குள் சென்றவுடனேயே ஒரு அறையைத் தனக்கும் எனக்குமாக எடுத்துக் கொண்டான். அவன் அப்படிச் செய்தது எனக்கு அருவருப்பைத் தந்தது. நான் அம்மாவையும் மாமாவையும் அறைக்குள் வந்து படுக்குமாறு அழைக்க, அவர்களைத் தடுப்பதுபோல அவன் கதவைச் சாத்தினான். எனக்குப் பிள்ளை துணையாகியது. நானும் மகளும் நிலத்தில் படுத்துக் கொண்டோம். அவன் சிறிது நேரம் கட்டிலில் கிடந்தான். மகள் நித்திரையாகிப் போனதைக் கண்டவுடன்

ஏதோ எண்ணியவன் போலத் திடீரென கட்டிலில் நின்று துள்ளினான். கட்டில் சட்டங்கள் சத்தமிடத் தொடங்கின. அந்த கிறீச் கிறீச் சத்தம் கேட்டுக் கொண்டு இருக்குமாறு அவன் மேலும் மேலும் துள்ளினான்.

அதன் அசைவு எதைப் பிரதிபலிக்கும் என்பது எனக்குச் முதலில் சற்றும் புரியவில்லை. அவன் என்னைப் பார்த்து நளினமாகச் சிரித்துக் கொண்டு இன்னும் அதிகமாகத் துள்ளினான். சிறிது நேரத்தின் பின்புதான் அது மற்றவர்களை நம்பவைக்கும் மற்றையதொரு நாடகம் என்பதை என்னால் உணரமுடிந்தது. எனக்குச் சற்று வெறுப்பும் ஆத்திரமுமாக இருந்தாலும் எதுவும் செய்ய முடியாதவளாக முடங்கிக் கொண்டு படுத்தேன்.

இருண்டவன் கண்ணுக்கு மருண்டதெல்லாம் பேயாகத் தோன்றுமாம். காலையே திருவிழா ஆரம்பமாகிவிட்டது. “கோயிலுக்கு வந்த இடத்தில் பொறுமையாக இருக்க முடியாதே” என அக்காள் ஆரம்பிக்க அதற்கு அம்மா ஒத்துப் பாடினா. மாமாவுக்கு என்ன புரிந்ததோ தெரியவில்லை. அவர் “அது புருஷனுக்கும் பெண்டாட்டிக்கும் இடையில் நடந்தது. அதையேன் விமர்சிக்கோணும்” என எனக்காக வாதாடினார்.

நான் செய்யாத ஒரு செயலை செய்ததாக எழுந்த விமர்சனத்தை கேட்டபோது எனக்கு அழுவதா சிரிப்பதா என்பது புரியவில்லை. என்னை நம்ப எவரும் இல்லையே என்கின்ற ஏக்கம் என்னைத் தள்ளி விழுத்தி மூர்க்கமாய் மிதித்தது. நான் விரக்தியிலிருந்து ஓடமுயன்று தோற்றுக் கொண்டே இருந்தேன். அது தன் பிடியை அரக்கத்தனமாய் இறுக்கிக்கொண்டே வந்தது. என்னை ஒருநாள் அது தயவு தாட்சணியம் இல்லாமல் தனது பசிக்கு இரையாக்கும் என்பது புரிந்தது.

கதிர்காமப் பயணம் முடிந்து திரும்பி வந்து கொண்டு இருக்கும்பொழுது, ஓர் இடத்தில் வானை நிறுத்தி இளநீர் வாங்குவதற்கு அவன் அவசரமாகச் சென்றான். அங்கு

இரண்டு இளநீர் மாத்திரமே இருந்தன. அக்காவும் பிள்ளை களும் போவதற்கு முன்பு அவன் அவை இரண்டையும் வாங்கித்தான் மட்டும் அவதியாகப் பருகி முடித்தான். தாகத்தோடு இருந்த அக்காவின் பிள்ளைகள் இளநீர் கேட்டு அடம்பிடிக்கத் தொடங்கினார்கள். அதை அக்காவால் பொறுக்க முடியவில்லை. பண்பாடற்ற செயல் என்பது அவள் அபிப்பிராயமாக இருந்தது. அக்காள் அவனைப் பார்த்து குழந்தைப் பிள்ளையளத் தவிக்க விட்டிட்டு இரண்டு இளநீயையும் மனச்சாட்சி இல்லாமல் குடிக்கிறார் என முதலில் தமிழில் பேசினாள். பின்பு இடையில் டொச்சுக்குத் தாவி அத்தானோடு அதைப்பற்றிக் கதைத்தாள். யார் பேசுவதையும் பொறுத்துக் கொண்டு இருக்கும் பொறுமை சாலியல்ல அவன். இந்த இளநீர் பருகலே ஒரு சண்டையை உண்டு பண்ணும் நோக்கத்தோடு நடத்தப்பட்டது என்பது எனக்கு மட்டும் புரிந்தது.

“வெளிநாட்டில் இருந்து வந்தால் நீங்கள் எல்லாம் பெரிய ஆட்கள் எண்ட நினைப்போ? நாமள் நினைச்சா மீன் வெட்டுறமாதிரி வெட்டித் துண்டுதுண்டா வீசிப்போட்டுப் போய்க் கொண்டு இருப்பம். நான் எப்பிடிப்பட்ட ஆளு எண்டு உங்களுக்குத் தெரியாது. நம்ம பிரண்டுகள கூப்பிட்டா உங்களப் பீஸ் பீஸ் ஆக்கிடுவாங்கள். நீங்கள் யாழ்ப்பாண நாய்களா இருந்து கொண்டு இங்க வந்து நடப்புக் காட்டக்கூடாது. யாழ்பாணத்தில இருக்க முடியாமல் வெளி நாட்டில பிச்சை எடுத்துக் கொண்டு திரியிற உங்களுக்கே இந்த நடப்பெண்டா சொந்த நாட்டில இருக்கிற எங்களுக்கு எவ்வளவு நடப்பு இருக்கும் தெரியுமா?” எனத் தொடங்கி நிறையத் திட்டினான்.

பயத்தில் எவரும் வாய் திறவாது மௌனமாக இருந்தார்கள். தனக்குக் கொழும்பையே சிங்கள அரசு எழுத்திக் கொடுத்தது போல் அவன் ஆர்ப்பாட்டம் செய்தான்.

பின்பு திடீரெனத் தனது கைத்தொலைபேசியை எடுத்து எண்களை அழுத்தினான். அடுத்த முனை உயிர்பெற்றவுடன் “ஆமர் ஸ்றிற்க்கு (குறிப்பிட்ட எண்ணைச் சொல்லி) எண்ணட

நம்பரோட நம்மட வான் வரும். அதில் வாற ராமன் என்பவனை வெளியே இழுத்துக் கண்ட துண்டமா வெட்டுங்க. மிச்சம் நேரில கதைப்பம்'' எனத் தொலைபேசியில் சத்தமாகக் கூறினான். உண்மையில் கதைத்தானா போனை வைத்து வெருட்டினான் என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை. அது ஒரு வெருட்டு ஜாலம் என்றே எனது உள்மனசு கூறியது.

இதையெல்லாம் பார்த்துப் பயத்தில் பேசாது இருந்த அம்மா திடீரென மயக்கம் போட்டு விழுந்தா. அது எல்லோரது கவனத்தையும் அம்மாவின்மீது திருப்ப அங்கு சற்று அமைதி வரலாயிற்று. கொழும்பிற்குள் வந்தபோது ஏதிர்பார்த்ததுபோல வானை யாரும் ஆமர் ஸ்ட்ரீற்றில் மறிக்கவில்லை. அங்கு எந்தவித அசம்பாவிதமும் நடக்கவுமில்லை.

இத்தனை கூத்திற்குப் பின்பும் கடைசியாக எல்லோரும் ஒரே வீட்டிற்குதான் வந்து சேர்ந்தோம். வீட்டிற்கு வந்த பின்பு அவன் தாய் வீட்டிற்குப் புறப்பட்டுச் சென்று விட்டான். என்னை அழைத்தபோது நான் போவதற்கு மறுத்து விட்டேன். இன்னொருநாள் வைத்துக் கொள்கிறேன் என்கின்ற கோபத்தோடு மோட்டார் சைக்கிளை உதைத்தான். கோபமாகவே புறப்பட்டுச் சென்றான். இயமன் வீடு திரும்பி வரும் வரைக்காவது நிம்மதியாக இருக்கலாம் என்பது எனக்கு ஆறுதலாக இருந்தது.

கதிர்காமச் சண்டையின் கோபத்தை அவன் எத்தனை அடிகளாகத் தந்திருப்பான் என்பதற்கு என்னிடம் கணக்கு எதுவும் இல்லை. அவன் கோபம் மாத்திரம் நீறுபூத்த நெருப்பாய் நீண்டகாலமாய் என்னைப் பதம் பார்த்தது. வெளிநாட்டில் இருந்த அக்காவிற்கு அநாமோதயத் தெலைபேசி அடிக்கடி வரத் தொடங்கி இருந்ததாம். அநாமோதயத் தொலைபேசி எடுத்து அத்தானைக் கொலை செய்வதாக நீண்டகாலமாக யாரோ மிரட்டிக்கொண்டு இருந்தார்களாம். எனக்கு இது அவன் வேலை என்பதும் அந்த வேலை சந்திரனைப் பார்த்து நாய் குலைப்பது போன்றது என்பது புரிந்தது. வெளிநாட்டில் இருக்கும் அக்காவையோ அவளது குடும்பத்தையோ இவனால் எதுவும்

செய்துவிடமுடியாது. என்னை வேண்டும் என்றால் புலியென்று சொல்லி மாட்டிவிட்டலாம் என்கின்ற பயம் இடைவிடாது துரத்தியது. அக்காள் வெளிநாட்டில் இருந்ததால் கதிர்காமப் பிரச்சினை சிறிது காலத்தில் மறக்கப்படலாயிற்று.

ஏஜென்சி நடத்துவதாகக் கூறி ஏமற்றிய பணத்தில் வீட்டில் தேவைக்கு அதிகமான பொருள்கள் பல்கிப் பெருகிப் போய்க் கிடந்தன. எல்லாப் பொருள்களும் மிகவும் ஆடம்பரமானவையாக இருந்தமை வீட்டிற்கு வருபவர்களுக்கு பிரமிப்பை உண்டு பண்ணும். அப்படி இருக்க வேண்டும் என்பதே அவன் நோக்கமாகும். வீடு வசதியாக இருப்பதாக காட்டிக் கொள்வதினால் அவனை நம்பி வரும் ஏமாளி களிடம் அவன் அதிகமாகக் கறந்தான். தான் பலரை வெளிநாட்டிற்கு அனுப்பிச் சம்பாதித்த பணத்தில்தான் இப்படி இருப்பாதாகத் தம்பட்டம் அடித்துக் கொள்ளுவான்.

அவனது சுத்துமாத்துக்கு அவனுடைய தங்கையும் ஒத்துழைப்பது எனக்குப் பின்பு தெரிந்தது. அதற்கு ஏதுவாக அவனை ஏஜென்சி என நம்பிவந்த ஆள்கள் வீட்டில் நிற்கும் பொழுது தங்கை துதரகத்தில் இருந்து கதைப்பது போல அவனுக்குப் போன்பண்ணிக் கதைப்பாள். அவனும் தன்னை யாரோ துதரகத்தில் இருந்தே அழைத்துக் கதைப்பதாகப் பெரும் பந்தாக்காட்டி கதைப்பான். இந்த நாடகம் புரியாத ஏமாளிகள் அதை முழுமையாக நம்பி தாங்கள் ஏமாறுவது தெரியாது வெளிநாட்டுக் கனவில் மிதந்தனர்.

இப்படி ஏமற்றிய பணத்தில்தான் ஒன்றரை இலட்சத்திற்கு ஒரு சோபா செற் வாங்கி இருந்தான். ஏஜென்சி என நம்பி வருபவர் களின் பாஸ்போட்டை அவன் தன்னுடன் வைத்துக் கொள்வான். காசை கொடுத்து ஏமாறுவது ஒரு கட்டத்தில் தெரிந்துவிடும். அப்பொழுது சிலர் கொடுத்த பணத்தைத் திருப்பிக் கேட்பார்கள். அதுவும் பெண்கள் அவனிடம் கொடுத்த பணத்தைத் திருப்பிக் கேட்டால் அவர்களைத் தன்னுடன் உடலுறவு கொண்டதாகச் செல்லி கொச்சைப் படுத்தப் போவதாக பயமுறுத்துவான். அப்போழுது அவர்கள் படும் அவஸ்தையும் அவமானம்

என்னைச் சுட்டெரிக்கும். அவனை விட்டுப் பிரிய முடியாத ஏலாமை என்னை எப்பொழுதும் துன்புறுத்திக் கொண்டே இருந்தது.

## 19

**நா**ன் எந்தப் பாதையால் எப்படி வந்தேன் என்பது தெரியவில்லை. கல்லூரிக்கு அருகே வந்திருந்தேன். ஒரு வான் வேம்படி மகளிர் கல்லூரியில் இருந்து சற்றுத் தொலை வில் நின்றது. யாரும் அதை பாதுகாத்து நிற்கவில்லை. நான் சாரதி உள்ளானா என்று எட்டிப் பார்க்கிறேன். அவன் சற்றுத் தூங்குவது போலத் தோன்றியது. நான் அவசர அவசரமாகக் கள்ளி போல அந்த வானின் பின் கதவைத் திறந்து உள்ளே புகுந்து கொள்ளுகிறேன். தங்கச்சி அந்த வானுக்குள் ஒருபக்கத்தில் குறண்டிக் கொண்டு கிடந்தாள். மயக்கத்தில் கிடப்பவளைப் போலத் தோன்றினாள். இரண்டு மூன்று பெண்கள் மறுபுறத்தில் இரத்தக் காயங்களோடு படுத்துக் கிடந்தார்கள். எனக்கு அவர்கள் பயிற்சிக்குப் போகிறார்களா அல்லது களத்தில் இருந்து வருகிறார்களா என்பது புரியவில்லை.

எனக்கு நிலை கொள்ள முடியாத அவசரம். நான் பாய்ந்து சென்று தங்கையின் அருகில் சென்றேன். மயக்கந் தெளிந்தவளைப் போல கண்விழித்தாள். இந்த வாய் அமைதியாக இருந்திருந்தால் எங்கள் சரித்திரம் வேறு விதமாக அமைந்திருக்கலாம் என்ற எண்ணம் தோன்றியது. இளமையின் கோளாறு அது. அவளின் மனதைப் புண்படுத்துவது எனக்குப் பிடிக்காது. அவள் என்னைப் பார்த்து கோணலாகச் சிரித்தாள். “இந்த அனுபவம் போதுமக்கா” என்றாள்.

நாங்கள் இருவரும் வானில் இருந்து அவசரமாக இறங்கினோம். அருகில் இருந்த பற்றைச் செடிகளுக்கள் பாய்ந்து மறைந்தோம். எங்கிருந்தோ ஆயுதங்களோடு ஓடி வந்த புலிகள் எங்களைத் தேடத் துவங்குகிறார்கள். என் இதயத்தின் சத்தம் இடியோசையாக எனது காதில் கேட்கத்

துவங்கியது. முள்ளந்தண்டு சில்லிடும் ஒருவகையாக குளிர் அதில் மின்னலாகப் பாய்ந்து உடல் எங்கும் பரவியது. எங்கள் வாழ்வில் சிக்கல்கள் தொடர் கதை தானோ என்கின்ற எண்ணம் எழுந்து நின்று கூத்தாடியது.

'சரியக்கா நாங்கள் பிடிபடப் போகிறோம். எங்களை அவங்கள் சுட்டுத் தள்ளப் போறாங்கள்'' என்கிறாள் என் தங்கை. நான் எரிச்சலுடன் அவளது வாயைப் பொத்துகிறேன். இனி இங்கு இருப்பது பாதுகாப்பில்லை என்பதை நான் உணருகி றேன். மெதுவாக எங்காவது ஓடவேண்டும் என முடிவு செய்து கொள்ளுகிறேன். தங்கையையும் தள்ளிக்கொண்டு ஒரு காலடி எடுத்து வைத்திருப்பேன். திடீரென ஒரு கை எனது வாயைப் பொத்துகிறது. நான் "என்னை விடு... என்னை விடு'' எனத் திமிறினேன்.

"என்ன கனவா?'' தமிழன்பன் என்னைப் பாத்துச் சிரித்தான். அவன் சிரிப்பில் பரிகாசமா அல்லது பரிதாபமா? பரிதாபம் என்பதாகவே எனக்குத் தோன்றியது. முதன் முறை என்னை யாராவது கட்டி அணைத்து ஆறுதல் சொன்னால் தேறுதலாக இருக்கும் என எனது மனசு ஏங்கிற்று.

"ம்... அப்பிடித்தான்.'' நான் வழித்தேன்.

"கனவில்கூட போராட்டம் போல இருக்கிறது. உங்களை யார் பிடித்து வைத்து இருந்தார்கள்?''

நான் மௌனித்தேன். எனக்கே அது வியப்பாகியது. கனவில் என்னைப் பிடித்துக் காப்பற்ற முயன்று கொண்டு இருந்தது தமிழன்பன்தான். அதை அவனிடம் எப்படிச் சொல்வது? எனக்கு ஏன் இப்படி ஒரு கனவு வரவேண்டும்? நன்றாக குளித்த முழுகித் திருநீறு பூசிக் கொள்ள வேண்டும் என்பதாக எனக்குத் தோன்றியது. கெட்டது எதுவும் அணுகாது சுத்தமாக இருக்க வேண்டும் என முடிவு செய்து கொண்டேன். எது கெட்டது, எது அண்டக்கூடாதது. மீண்டும் குழப்பமாகியது.

"என்ன குமுதினி, முகம் தெரியாத மனிதர்களா உங்கட கனவில வருகினம்?''

"அப்படித்தான் இருக்க வேணும். எனக்கு முகம் ஞாபகம் இல்லை" நான் வேண்டும் என்றே பொய் சொன்னேன்.

"கனவுதானே விடுங்க." விஷயத்தை அறியாதே அவன் என்னைச் சமாதானம் செய்தான்.

"கனவுதானே... விட்டுவிடவேண்டும் என்றுதான் எனக்கும் தோன்றியது."

மனிதவாழ்வில் மனிதனை மனிதன் எல்லோரும் ஏமாற்று கிறோம். ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் ஏமாற்றுவதுகூட இயற்கையாக நடந்து விடுகிறது. மற்றவரை ஏமாற்று வதைப்போல் எல்லோரும் மற்றவரிடம் ஏமாந்தும் விடுகிறோம். அது சின்ன விடயங்களாக இருக்கலாம் அல்லது பெரிய விடயங்களாக இருக்கலாம். முகங்கள் மாத்திரம், சொல்லும் சொற்களுக்கு எதிராக சிலவேளை உண்மைகளை உயர்த்திப் பிடிக்கும். அதைப் படித்துக் கொள்வது அவரவர் திறமையைப் பொறுத்தது. எனக்கும் சிரிப்பு வந்தது. பெரிய எழுத்தாளன் என்பவனே எனது பொய்யை நம்புகிறானே என்பது போல எக்காளமாகியது. நான் எனது பார்வையைச் திருப்பித் தெரியாத வெளியுலகை மீண்டும் தெரிந்துகொள்ள முயன்றேன். என் முகத்தை அவன் படித்துவிடாது மறைத்துக் கொண்டதை அவன புரிந்துகொள்ளவில்லை என நினைத்தேன்.

பேருந்து பளையை அண்மித்தது. இருட்டு சூரியனைக் கண்டு தோற்ற எதிரியாகப் ஓடி ஓடி வழிவிட்டது. இந்தக் காடுகளில் நடந்த யுத்தங்களில் எத்தனை முறை யார் யார் ஓடியிருப்பார்கள்?. இன்று அது ஓய்ந்து பயம்தரும் அமைதியோடு கிடக்கிறது. யுத்தத்தில் கேட்ட குண்டுகளின் ஓசைக்கும் இந்தப் பாதுகாப்பற்ற அமைதிக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது என்பது எனக்குப் புரியவில்லை. கடைசியாக அமைதியென்னும் சூரியவொளி எங்களிற் பட்டாலும் எங்கள் அடிமை விலங்குகள் அப்படியேதான் இருக்கின்றன. எங்களைச் சுற்றிய வேலிகள் இன்றும் இறுக்கப்படுகின்றன. பல விடயங்களை மனதிற்குள்ளேயே

பூட்டி வைக்க வேண்டிய நாட்டில் வாழ்வது எவ்வளவு அசௌகரியமானது என்பதை என்னால் இப்போது உணர முடிந்தது. வாய் திறப்பது என்பது என் வாழ்வைத் தொலைப்பதற்குச் சமனான நாடாக இலங்கையின் அரசியல் தொடருகிறது.

"என்னோடு கதைக்க கூடாது எண்டு மௌன விரதமா?" திடீரென தமிழன்பன் காதிற்குள் கேட்டான்.

"அப்படி ஒன்றும் இல்லை. சில நினைவுகள்" என்றேன்.

"எனக்கு சொல்ல முடியாதா?"

"இந்தப் பஸ்சிற்குள் வைத்து சொல்ல முடியாது. அதற்கு இன்னும் சில வருடங்கள் செல்ல வேண்டும்."

"நாங்கள் பொல்லுப்பிடிக்கும் வயதிலா? உங்கள் ஆதங்கம் புரிகிறது. நல்ல மாற்றங்கள் எப்போதும் தமதாமாகத் தான் வருகிறேன். கெட்ட மாற்றங்கள் என்றால் புயல்போல் வந்து தாக்கி விடுகிறேன்"

"அதேதான்."

"அப்படி என்றால் ஒன்று செய்யலாம்."

"என்ன அது? "

"உங்கள் வீட்டிற்கு வருகிறேன் அங்கு சொல்லுங்கள்."

"ஐயோ" என்றேன் நான்.

"ஏன் நான் வரக்கூடாதா? "

"அப்படியல்ல. ஒரு எழுத்தாளர் எங்கள் வீட்டுக்கு வாறாரே என்கின்ற வியப்பில் வந்த ஐயோ அது" என்று சமாளித்தேன்.

"அப்படி என்றால் நான் உங்கள் வீட்டிற்கு வரலாம்?"

"நிச்சயமாக வாருங்கள். ஒரு நண்பராக நீங்கள் வருவதற்கு என்ன தடையிருக்க முடியும்? உங்கள் செல் நம்பரைத் தாருங்கள்" என்றேன்.

தமிழன்பன் எண்ணைத்தர நான் அதை எனது செல்லில் பதிந்துவிட்டு அவனுக்குப் போன் செய்தேன். அவன் தனது தொலைபேசித் தொடர்புப் புத்தகத்தில் அதைப் பதிவு செய்து கொண்டான். நான் ஏன் அவனது எண்ணைக் கேட்டேன்? நான் ஏன் அவனுக்குப் போன் செய்தேன்? என்னையே என்னால் நம்பமுடியவில்லை. அவனது முகத்தைப் பார்த்தது தொடக்கம் நான் நானாக இல்லை என்பது மட்டும் புரியத் தொடங்கியது. அவன் ஒரு எழுத்தாளன் என்பதற்காய் மட்டும் வந்த தடுமாற்றம் அல்ல அது... அதைவிட ஏதோ ஒருகாலத்தில் அவனோடு பழகியது போல... கதைத்தது போல... மனதைப் பறிகொடுத்து நெருக்கமாய் இருந்ததுபோல... குளிரூட்டிய பேருந்தில் எனக்குமட்டும் திடீரென வியர்த்தது. பனையின் தலையற்ற தென்னைகள் பின்நோக்கி ஓடின.

நான் மீண்டும் மீண்டும் அலங்காரமான ஆபத்திற்குள் வீழ்கிறேனா என மனச்சாட்சி என்னை உலுக்கியது. மோகம் அதைப் புறம் தள்ளி இல்லை என்று திமிறிக் கொண்டது. இன்றிருப்பார் நாளை இல்லையென்பது உண்மையான இந்த உலகில் இக்கணமே உண்மை என்று அது கூக்குரல் எழுப்பியது. பெண்ணுக்குத்தானே இந்தப்போராட்டம். அவள் வாழ்ந்தாலும் ஏசும், தாழ்ந்தாலும் ஏசும் அல்லவா இந்த உலகம்? எனக்கு ஒரே குழப்பமாயிற்று.

பேருந்து கொடிகாமத்தை வந்தடைந்தபோது என்னை மீண்டும் பழைய நினைவுகள் இழுத்துக் கொண்டன.

## 20

**சா**வகச்சேரியில் சில நாள்கள் மட்டும் தங்கப் போவதாய் நாங்கள் நினைத்தோம். நினைப்பதெல்லாம் நடந்துவிடுவதில்லை. எங்கள் வாழ்விலும் அதுவே உண்மையாயிற்று. கிட்டத்தட்ட ஒரு வருட வாழ்க்கையை நாங்கள் அங்கு ஓட்ட வேண்டியதாயிற்று. போராட்டம் தொடங்கியதின் பயனாக சொந்த வீட்டில் மாடுகள், ஆடுகள், கட்டாக்காலி நாய்கள்

படுத்து விடுகின்றன. நாங்கள் இரவல்வீட்டுக் கோடிகளில் அந்நிய மனிதர்களோடு குடித்தனம் நடத்த வேண்டியதாயிற்று. கஷ்டங்கள் படாது உரிமைகளை வென்றெடுக்க முடியாது என்று தத்துவம் பேசலாம். தத்துவம் பேசுபவர்களுக்கு வாழ்க்கையின் வலி புரிவதில்லை. வாழ்வின் வலி புரிந்தவனால் தத்துவம் பேச முடிவதில்லை. நாங்கள் வலியோடே வாழ்ந்து பழக்கப்பட்டவர்கள். தத்துவம் பேசுவதற்கு எல்லாம் எங்களுக்கு நேரம் கிடைப்பதில்லை.

அம்மாவை நாயில் தொற்றிவிட்ட உண்ணியாகக் மகளின் கவலை இடைவிடாது எப்போதும் உறிஞ்சியெடுத்தது. பிள்ளையைப் பலிகொடுக்கும் வலியை வீரப் பேச்சுப் பேசுபவர்களால் உணர்ந்து கொள்ள முடியாது. அம்மாவின் வலி தத்துவ விளக்கங்களுக்கு அப்பாற்பட்டது என்பது எனக்குப் புரிந்திருந்தது. தெருத் தேங்காயை எடுத்து வழியில் பிள்ளையாருக்கு உடைப்பவர்கள் நோகாமல் தத்துவம் பேசலாம். சொந்த மகளைப் பறிகொடுத்த அம்மாவுக்கு தத்துவத்தைவிட வலிதான் அதிகம் புரிந்தது.

அம்மா மகளைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்றால், நாட்டில் என்ன நடக்கிறது என்பதை அறிய வேண்டும் என்கின்ற உண்மைய உணர்ந்து கொண்டா. பற்றி கிடைக்காத காலத்திற்கு எங்கள் வாழ்க்கை பின்னோக்கி நகர்ந்து போயிற்று. பற்றிகள் இல்லாது வானொலி இயங்காது. யாழ்ப்பாணத்தில் மின்சாரத்தைக் கண்டு யுகங்கள் ஆகியிருந்தன. பற்றி இல்லாமல் வானொலி கேட்பதற்கும் யாழ் விஞ்ஞானிகள் விடைகண்டு பிடித்திருந்தார்கள். சைக்கிள் சில்லைச்சுற்றி அதில் பூட்டியிருக்கும் டயனமோவால் உற்பத்தியாகும் கரண்டில் வானொலி கேட்கும் பழக்கத்தை அறிமுகம் செய்து வைத்தார்கள். அம்மாவின் மருமகன் சைக்கிள் சுத்த அம்மா செய்திக்காய் ஒவ்வொரு நாளும் பழிகிடப்பது வழமையான ஒன்று. மருமகன் வீட்டில் இல்லா போது அம்மா தானே சுத்திச் செய்தி கேட்டுக் கொள்ளுவதும் உண்டு. உலக அரசியல் பேசுவதற்காய் அம்மா செய்தி கேட்டதில்லை. கடத்தப்பட்ட மகள் எங்கு இருக்கிறாள்

என்பதற்கான துப்பு எதும் கிடைக்குமா என்கின்ற ஏக்கம் அவவிடம் உயிர்ப்புடன் தொடர்ந்தது.

மாவீரர்தினம் வருவதையொட்டி எனக்கும் அம்மாவுக்கும் தாங்க முடியாத பரபரப்பு. மாவீரர் தினத்தன்று கொடி காமத்திற்குப் போக வேண்டும் என்பது எங்கள் திட்டம். இம்முறை எப்பாடுபட்டென்றாலும் தங்கையைப் பார்த்து விட வேண்டும் என்பது என் மனதில் தணியாத ஆசையாகக் கனன்றது. அது நடக்குமா என்பது கேள்விக்குறி என்றாலும் நம்பிக்கையை நாங்கள் இழந்து விடவில்லை. அந்த நம்பிக்கையில், அவளைப் பார்க்காமல் திரும்பி வரக்கூடாது என்பதுபோல ஒரு வைராக்கியம் கோடைகாலத்து உப்பாக விளையத் தொடங்கியது.

நாங்கள் மாவீரர் தினத்திற்குச் சென்றோம். சோகமே உருவாக மக்கள் நிறைந்திருந்தனர். சிலர் கவலை தாங்க முடியாது விம்மி வெடித்தவண்ணம் இருந்தனர். முதலில் தேசிய கீதம் இசைக்கப்பட புலிகளின் கொடியேற்றப்பட்டது. எல்லோரும் அதற்கு மரியாதை செலுத்தி நின்றனர். இறந்த வீரர்களுக்கு எனது மாரியாதை உரித்தானாலும் அந்த இயக்கத்தின்மீது எனக்கு வெறுப்பு மேலோங்கியது. பிள்ளைகளை வலுக்கட்டாயமாக இயக்கத்திலே சேர்த்துக் கொள்ளும் அவர்களுடைய செயலிலே வெறுப்படைந்தேன்.

கொடியேற்றிய பின்பு, மாவீரர்களுக்கு முதல் விளக்கு இயக்கத்தின் முக்கிய உறுப்பினர்களால் ஏற்றிவைக்கப்பட்டது. பின்புதான் மக்கள் தங்கள் பிள்ளைகளுக்கு விளக்குவைக்க அனுமதிக்கப் பட்டார்கள். அதைப் பார்த்துக் கொண்டிருந்த எவராலும் கண்ணின் நீரை கட்டுப்படுத்த முடியவில்லை. உறவினர்கள் கண்ணீர்மல்க விளக்குவைத்து... மாரடித்து... அழுதனர். மாவீரன் ஒரு நாளில் மரிக்கிறான். அவர்கள் உறவுகள் ஒவ்வருநாளும் அவன் நினைவில் மரிக்கின்றனர். அந்த நெஞ்சறுக்கும் சோகம் என்னையும் கரைத்தது. கட்டுப்பாடற்று என் கண்ணில் நீர் புரண்டு ஓடியது. அம்மா ஒருமுறை என்னைப் பார்த்துவிட்டுப் பின்பு மகள் வருகிறாளா என அந்தக் கூட்டத்தை உற்றுப் பார்த்தா.

தலைவரின் உரை ஒலிபெருக்கியில் சத்தமாகக் கேட்டது. அது யாழை விட்டு தாங்கள் வந்தது ஒரு தற்காலிகப் பின்னடைவு என்றது. வெற்றியைத் தருமா என்று காரைநகர் அநுபவத்தின் பின்னர்கூட என்னால் நினைத்துப் பார்க்கமுடியவில்லை.

மாவீரர்களின் உறவினர்கள் பலர் கதறியழுது... ஆழ்ந்த துயரோடு கல்லறைகளைப் பிரிய முடியாது பிரிந்து செல்வது என் நெஞ்சை வருத்தியது. தமது பிள்ளைகளின் வாழ்வு சடுதியாகப் பறிக்கப்பட்ட துயரத்தை அனுபவிக்கும்போது அது மனிதனை எப்படி வதைக்கும் என்பதை வார்த்தையில் சொல்லிவிட முடியாது. அதை உணர்தல் நரக அனுபவத்துக்குச் சமம். அந்த வேதனையை அவர்களின் முகங்களைப் பார்க்கும் போது தெரிந்து கொண்டேன். மாவீரர்கள் ஒருமுறை மரணித்தால் அவர்களுக் காக ஒவ்வொரு நாளும் மரணிக்கும் உறவுகளைப் பார்த்த போது என்னிதயம் இடிந்து போயிற்று. நானும் அம்மாவும் அப்படிப்பட்ட கவலையைப் பல மாதங்களாக அனுபவிக்கிறோம். அதற்கு இன்று ஒரு முடிவு வராதா என்கின்ற நப்பாசையில் நாங்கள் தொடர்ந்தும் அங்கு நின்றோம்.

எல்லாம் முடிந்துவிட்டது. ஒலிபெருக்கியில் புலிகளின் பாட்டு ஒலித்தது. சனங்கள் மெதுவாக கலையத் தொடங்கினர். எனக்கு தொடர்ந்து நிற்பதா அல்லது வீட்டிற்குத் திரும்பி போவதா என்பது குழப்பமாகியது. என்றாலும் அம்மாவுக்கு அந்த இடத்தைவிட்டு அசையும் நோக்கம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. நானும் அம்மாவுக்குத் துணையாக நிற்க நேர்ந்தது.

சிறிது நேரத்தில் சாரைசாரையாக சிறுவர்கள் அணி வகுப்பாக வந்தார்கள். அவர்கள் தற்போது பயிற்சி பெறும் போராளிகள் என்பது சுலபமாகத் தெரிந்தது. அவர்கள் முகங் களில் வீராவேசத்தை விட அம்மா அப்பாவைத் தேடும் ஏக்கமே மேலோங்கி இருப்பதாய் எனக்குத் தோன்றியது. எனது தங்கை யும் அப்படித்தான் தவிப்பாள் என்று நினைத்துக் கொண்டேன். போராளிகள் என்றால் விடுதலை உணர்வில் தாங்களாக

இணைந்து போராட வேண்டும். அதில்தான் வீரம் செறிந்த போராட்டம் மலரும். கட்டாயப்படுத்தி இழுத்துக்கொண்டு போவதால் மோசமான ஒரு கூலிப்படையைத்தான் உருவாக்க முடியும்.

நாங்கள் பார்த்துக் கொண்டு நிற்கும்போது பல சிறுமிகள் வரிசையாக அணிவகுத்து வந்தனர். அதிலும் தங்கையைக் காணமுடியவில்லை. அது எங்களுக்குத் தொடர்ந்தும் ஏமாற்றத்தைத் தந்தது. இவ்வளவு காத்திருப்பிற்குப் பின்பும் அவளைக் காணாமல் நாங்கள் எப்படித் திரும்பிப் போவது? அங்கு வந்த ஊர்பிள்ளை ஒருவருடன் கதைத்தபோது மேலும் சிறுவர்கள் வருவார்கள் என்கின்ற தகவல் சொல்லப் பட்டது. அது எங்களுக்கு மயங்கிக்கொண்டு போகும்போது குளுக்கோஸ் ஏற்றிய தைரியத்தை மீண்டும் தந்தது. நாங்கள் அதிகநேரமாக கால்கடுக்க அங்கே நின்றோம்.

அதிக நேரம் சென்றிருக்கும். அதன் பின்பு பொறுப் பானவர்களின் அணி கம்பீரமாக வந்தது. என் கண்ணையே என்னால் நம்ப முடியாது திகைத்துப்போனேன். அந்தப் பெறுப்பாளார்களுக்கு இடையே என் தங்கையும் வந்து கொண்டிருந்தாள். அம்மாவால் அவளைச் சட்டென்று அடையாளம கண்டுகொள்ள முடியவில்லை. உண்ணாமல் உறங்காமல் இருந்து அம்மாவின் கண்கள் பூஞ்சணம் பிடித்துப் போயிருக்க வேண்டும். அம்மாவுக்குத் தங்கையைக் காட்டிய போது அந்த முகத்தில் வந்த சந்தோஷத்தினை ஆயிரம் மின்விளக்குகளை இணைத்துத்தான் கோடி காட்ட முடியும்.

எனது தங்கை தனது பொறுப்பாளர்களோடு வந்தமைக்குப் பின்னணியில் ஒரு கதையிருந்தது. எங்களை அம்மா மிகவும் அக்கறையுடன் வளர்த்தார். வளர்ந்த பின்பு கூடப் பாடசாலைக்குச் செல்லும் கடைசிநேரத்தில் சாப்பிடுமாறு ஊட்டிவிடும் வழக்கமுண்டு. அப்படி நோகாமல் வளர்ந்ததால் துன்பங்கள் வந்தபோது எங்களால் அதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. தங்கை தனது பயிற்சியைத் தொடங்கியவுடன் உடல் பலவீனப்பட்டுப் போய்விட்டாள். அதைத் தொடர்ந்து

அவளுக்கு மூட்டு வருத்தமும் ஏற்பட்டது. அதனால் அவளால் தொடர்ந்தும் பயிற்சியில் ஈடுபடுதல் கஷ்டம் எனப் பயிற்சி அளித்தவர்கள் முடிவெடுத்தார்கள். அது அவளுக்கு அநுகூலமாய் அமைந்தது. அவள் அரசியல் பிரிவுக்கு மாற்றப்பட்டாள். அதனால் அவள் இப்பொழுது பொறுப்பானவர்களுடன் வந்து கொணடிருந்தாள்.

ஐந்தாறு பேர்களுக்கு நடுவில் தங்கை வருவதைக் கண்டவுடன் அம்மாவுக்கு அவள் வருவதைக் காட்டிவிட்டுத் திடீரென அவர்களது அணிக்குள் பாய்ந்து அவள் கையை நான் பிடித்துக் கொண்டேன். அவர்கள் இதை எதிர்பார்த்திருக்கவில்லை. சிறிது குழம்பிப் போனபின்பு நாங்கள் யார் என்பதை அவர்கள் அறிந்து கொண்டார்கள். அவர்களுக்குப் பொறுப்பாய் இருந்தவளின் பெயர் கௌரி. அவளின் தயவில் நானும் அம்மாவும் தங்கையுடன் கதைப்பதற்குச் சிறிதுநேர அனுமதி கிடைத்தது.

கௌரி ஒரு இடைநிலைப் பொறுப்பாளர். அவளுக்கு மேலும் வேறு ஒரு பொறுப்பாளர் இருந்தாள். நாங்கள் கதைத்துக் கொண்டு நிற்க அவள் யாழ்பாண ஆஸ்பத்திரியில் வேலை செய்யும் தாதிகளைப் போன்று "வள்" எனப் பாய்ந்தாள். இப்படிக் கதைத்துக் கொண்டிருக்க முடியாது என்று எங்களைப் போகச் சொல்லிவிட்டாள். அந்த சந்தர்ப்பத்தில் ஆபத்தாண்டவரைப்போல கௌரி, தானே தங்கையை வீட்டிற்கு கூட்டி வருவதாய் வாக்களித்தாள். அதன் பின்பு எங்களை நிம்மதியாகப் போகுமாறு கூறினாள். அது உண்மையோ பொய்யோ என்பது தெரியாவிட்டாலும் அந்த ஆறுதலுக்காகவே அவளது கைக்கு தங்கக்காப்பு போடவேண்டும் என்பதாகத் தோன்றியது. நாங்கள் ஒருவித திருப்தியோடு அன்று வீடு திரும்பினோம்.

மூன்றாம் நாள் எங்கள் வீட்டில் அந்த அதிசயம் நடந்தது. யாரும் எதிர்பார்க்காத வேளையில் அவர்கள் வீட்டிற்குத் திடுமென வந்தார்கள். பதினைந்து நிமிடங்கள் மட்டும் பேசுவதற்கான சந்தர்ப்பம் கிடைத்தது. புயல்போல

வந்தவர்கள் புயல்போலவே போய்விட்டார்கள். அவள் இன்னும் அதிகநேரம் இருக்க முடியவில்லையே என்பது எனக்கு அன்றைய கவலையாகியது.

அதன்பின்பு தங்கை அடிக்கடி வரத் தொடங்கினாள். அது எங்களுக்கு பெரும் கொண்டாட்டமாகியது. அம்மா மிகவும் பூரித்துப் போய் இருந்தா. அம்மா மகளுக்காக உடுப்புகள், கறுப்புக்கலர் பட்டியோடான கஸியோ கைக்கடிகாரம் எனத் தேவையானவற்றை வாங்கிக் கொடுத்து, உணவு ஊட்டி மீண்டும் மீண்டும் மகிழ்ந்து பூரித்தார்.

## 21

கொழும்பிலே அவன் புதிதான ஏமாற்று வியாபாரம் ஒன்றைக் கண்டுபிடித்தான். தவணைமுறையில் பணம் கட்டுபவர்களுக்கு கணினி கொடுப்பதாய் முற்பணம் வசூலிக்கத் துவங்கினான். பின்பு அவர்கள் அதைக் கேட்டு வந்தால் தனது உண்மையான சுயரூபத்தைக் காட்டுவான். அவர்கள் இவ்வாறு ஏமாறுவார்கள் என்பது நம்ப முடியாததாக இருந்தது. அவன் வலையில் மாட்டுபவர்கள் யாழ்ப்பாணத்தார் என்பது மேலும் ஆச்சரியத்தைத் தந்தது.

ஒரு தடவை வீட்டை வாடகைக்கு கொடுப்பதாய் ஒருவரிடம் முற்பணம் பெற்றுக்கொண்டு அவரை அலைய விட்டான். அவர்களும் அலைந்தார்கள். வீடும் வாடகைக்கு விடப் படவில்லை. சிலகாலம் அலைந்தவர்கள் பின்பு வரவேயில்லை. என்ன நடந்திருக்கும் என்பது ஊகம் மட்டுமே.

வீட்டில் இருந்து திட்டமிட்டு, நான் ஓடிவிடாமல் இருப்பதற்காய் என்னை வீட்டில் கண்காணிப்பதும் எனக்குத் தெரியும். அதை ஒருநாள் அவன் என்னிடமே சொல்லிக் காட்டினான். இத்தகைய ஓர் ஈனச்செயலை ஒருவனால் செய்யமுடியும் என்பதை என்னால் கற்பனை செய்யவும் முடியவில்லை.

மாமி மாமா கொழும்பில் ஒரு அறையில்தான் வாழ்ந்து வந்தார்கள். அங்கு போய் நிற்பது என்றால் எல்லாருக்குமே கஷ்டம். மாமிக்கு இடையில் மாரடைப்பு வந்தது. அவனுக்கு அதில் இருந்து தாய்ப்பாசம் அளவுக்கு மீறிப் பிறிட்டு வழிந்தது. அவன் என்னை இழுத்துக் கொண்டு அடிக்கடி தாயிடம் செல்லுவான். எனக்கு அந்த அறைக்குள் சென்றாலே மூச்சு முட்டுவது போல இருக்கும். அன்றும் என்னைக் கட்டாயப்படுத்தி அழைத்துச் சென்றான். நாங்கள் எல்லோரும் அந்த அறையில் கிழங்கடுக்கிய மாதிரிப் படுத்துக்கொண்டோம். எனக்கு முதலில் சத்தி வந்தது. சிறிது நேரத்தில் நான் மயங்கிப் போய்விட்டேன்.

மயக்கம் தெளிந்து பார்த்தபொழுது நான் ஒரு அரச மருத்துவமனையில் அனாதையாகத் தனிமையில் விடுப் பட்டிருந்தேன். அது வித்தியாசமான இடமாகத் தோன்றியது. அங்கு அநேகமானவர்கள் கருச்சிதைவுக்காக வந்து இருந்தார் கள். அதைவிடக் கொடுமையாகச் சிறுமிகள் கூடக் கர்ப்பமாகி வந்து இருந்தார்கள். ஏன் இந்த உலகத்தில் இப்படி நடக்கிறது என்பது எனக்கு விந்தையாக இருந்தது. அந்தக் கொடுமைகளைப் பார்த்துக் கொண்டு அங்கு இருக்கவும் எனக்குப் பிடிக்கவில்லை. என்னை அங்கு சேர்த்ததின் அர்த்தம் என்ன என்பதும் எனக்குப் புரியவில்லை. என்னைப் பார்க்கவும் அங்கு யாரும் வரவில்லை. நான் வீட்டிற்குப் போகவேண்டும் என்று முடிவு செய்து கொண்டேன். அதற்கு அவர்கள் தற்போது போவது நல்லது அல்ல எனவும், இருந்து பார்த்து விட்டுப் போகுமாறும் அறிவுரை கூறினார்கள். அங்கு இருந்து அந்த அநியாங்களைப் பாப்பதிலும் எனக்கு வீட்டிற்குச் செல்வதே மிகவும் உசிதமாகப்பட்டது. நான் கையெழுத்து வைத்துக் கொடுத்துவிட்டு வீட்டிற்குப் புறப்பட்டேன்.

அன்று அவன் திடீரென அந்தக் கதையைத் தொடக்கினான். இந்து முறைப்படி கலியாணம் செய்யச் சொல்லி உன்னுடைய அக்கா சொன்னாளே என்று திடீரெனக் கூறினான். எனக்கு கைகால் எல்லாம் ஓடி விறைத்தது.

முள்ளந்தண்டால் குளிரோடி மூளைக்குப் பாய்ந்தது. என்ன பேசுவது? பேசினால் நிச்சயம் அடி நடக்கும் என்பது எனக்குத் தெரியும். நான் அவன் பேச்சுக்கு வாய் போசாது இருந்தேன். அவனோ என்னை விடாது நோண்டிக் கொண்டிருந்தான். நான் அந்த ஆக்கினை பொறுக்க முடியாது "அது எப்போழுதோ நடந்த பிரச்சினை. அதை விடுங்க" என்று அந்தக் கதைக்கு முற்றுப் புள்ளி வைக்க முயன்றேன். அவனுக்கு ஏன் அதற்கு அவ்வளவு கோபம் வரவேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை. புரிந்தால் அதையும் கூறாது விட்டிருப்பேன். வாய்கூறி முடிவதற்குள் மேசையில் இருந்த சோடாப் போத்தல் என்னை நோக்கி வேகமாக வந்தது. நல்ல காலமாக நான் பின்நோக்கிச் சாய அது என்னில் படவில்லை. அதைப் பார்த்தவன் நளினமாகச் சிரித்துவிட்டு "அடுத்த முறை தப்பாதடி. உன்ர அக்காள் நாசமாய் போவாளடி. அவை எல்லாம் ஓட்டுமொத்தமாய் தெருவில நிண்டு பிச்சை எடுப்பினமடி. அவள் பெத்து வைச்சிருக்கிறதுகள் கண்டவனை இழுத்துக்கொண்டு ஓடுங்களடி. ஊரெல்லாம் உங்கட குடும்பத்தை பார்த்துக் கைகொட்டிச் சிரிக்குமடி. அப்ப உங்கட வள்ளல் எல்லாருக்கும் தெரியவரும்" எனப் பலவிதமாகத் திட்டிக்கொண்டே இருந்தான்.

## 22

"நீங்கள் திட்டமிட்டே கதைக்கிறியள் இல்ல." தமிழன்பன் மீண்டும் என் காதிற்குள் சொன்னான். வெறுத்தாலும் அவன் அண்மை இனிக்கத்தான் செய்தது. வெளியே தெரிந்தால் வெட்கக்கேடு என்கிற எண்ணமும் இலேசாகத் தலையைத் தூக்குகிறது.

நான் தழிழன்பனைப் பார்த்து, "ஐயோ அப்பிடி நான் செய்வேனா? ஏதோ பழய நினைவுகள் இண்டைக்குப் படையெடுத்துக் கொண்டு இருக்கின்றன. நீங்கள் வீட்ட வாங்க.

அப்ப உங்களோட நிறைய கதைப்பன். ஆனா நீங்கள் வீட்ட வருவீங்களோ இல்லையோ எண்டு சந்தேகமாக இருக்குது?"

"நான் யாரிடமும் போன் நம்பர் வேண்டி வைத்துக் கொண்டு வீட்ட வாரன் என்றெல்லாம் சொல்லுறது இல்ல. உங்களிட்டத்தான் முதன்முதல் அதைச் செய்து இருக்கிறன். என்னை நீங்கள் நிச்சயமாக நம்பலாம். நான் கட்டாயம் உங்க வீட்ட வருவன்..."

"வாங்க. உங்கள மாதிரியான ஆள்கள் வர நாங்கள் குடுத்து வைச்சிருக்கோணும்."

"சும்மா கொப்பில ஏத்தாதேங்க. நானும் ஒரு பரதேசி எண்டுறது மட்டுமே நிஜம்."

"எண்டாலும் வெளிநாட்டில இருக்கிற பணக்காரப் பரதேசி... இன்னும் தமிழை மறக்காத பரதேசி..."

"ம்... அந்தப் பணத்துக்குப் பின்னாலையும் எத்தனை சோகம் இருக்கும் எண்டதை அவங்களக் கேட்டாத்தான் தெரியும். பணம் இருந்து என்ன? நிம்மதி இருக்க வேணும்."

"அதெண்டா உண்மை."

"ம்... யாழ் மணக்குது "

"என்ன சொல்லுறியள்? "

"யாழ்ப்பாணத்துக்கே உரித்தான வாசத்தைச் சொன்னன்."

"ஓ நாங்கள் நித்தமும் சுவாசிக்கிற செம்மண் தூசி... அதில வித்தியாசம் தெரியிறேல்ல..."

பேருந்து யாழ் நகரப் பகுதிக்குள் நுழைந்தது.

"கொஞ்சம் கொஞ்சமா யாழ் மாறுது" என்றான் தமிழன்பன்.

"நத்தை வேகத்தில்..." என்றேன் நான்.

"நல்ல மாற்றங்கள் அப்படித்தான்" என்று இழுத்தான்...

தனது பொருள்களை எடுத்துச் சரி பார்த்துக் கொண்டான். எனது பையை எடுத்துப் பத்திரமாகத் தந்தான்.

நான் "தாங்ஸ்" என்றேன்.

அவன் 'பரவாயில்லை." என்றான். எங்கள் பேருந்து யாழ் பேருந்து நிலையத்தில் நின்றது. அவன் தங்கள் ஊருக்குப் போகும் உள்ளூர்ப் பேருந்து நிற்பதாய்க் கூறிவிட்டு அவசரமாக இறங்கிச் சென்றான்.

நான் பேருந்தைவிட்டு மெதுவாக இறங்கினேன். முதல் முறை ஒரு நல்ல நண்பன் பிரிந்து போவதான உணர்வு என்னைத் தாக்கியது. அது எனக்கே அந்நியமான உணர்வு. ஓட்டோக்காரன் என் காலடியில் வந்து நின்றான். நான் போகும் இடத்தைச் சொன்னபோது மீட்டரில் வருவதைப் பார்க்கிலும் ஐம்பது ரூபாய் அதிக மாகத் தர வேண்டும் என்றான். அது அவர்கள் வழக்கமாகி விட்டது. பேரம்பேசிப் பிரயோசனம் இல்லை. எனவே, ஏறி அமர்ந்து கொண்டேன்.

இரண்டு நாள்கள் சென்றிருக்கும். நான் சமையல் வேலைகளை முடித்துவிட்டுச் சற்று ஆறுதலாக இருந்தேன். என் நினைவில் ஒட்டிக்கொண்டிருந்த கொழும்புப் பயணத்தை மறக்க முயற்சி செய்தேன். தோல்வி மட்டுமே என்னைத் துரத்தித் துரத்தி அடித்தது. ஏனோ அடிக்கடி அந்த பேருந்தும் அதில் தமிழன்பனோடு கதைத்துக் கொண்டு வந்ததும் ஞாபகம் வந்தன. சைக்கிளை எடுத்துக் கொண்டு யாழ்பொது நூல் நிலையத்திற்குச் சென்று வந்தால் என்ன என்கின்ற எண்ணம் எழுந்தது. நான் புறப்பட்டுச் சென்றேன்.

'எரித்தாலும் என்னை நீங்கள் அழித்தாலும் நான் மீண்டும் எழுந்து நிற்பேன்' என்று சொல்வது போல யாழ் நூல்நிலையம் மீண்டும் எழுந்து நின்றது. இனியும் எரிக்கமாட்டார்கள் என்கின்ற சிங்கள நாகரிகம் இன்னும் இலங்கையில் மலர்ந்துவிடவில்லை என்பதும் புரிந்தது. தமிழன்பனைப் போன்றவர்களால் ஒரு போதும் அழிந்ததை ஈடுசெய்ய முடியாது. நடந்த அவலங்களை

ஆவணப்படுத்தும் பொறுப்பு அவர்களுக்கு உண்டு. அதற்கான சுதந்திரமும் அவர்களிடம் உண்டு. இருப்பதை அழியாது பாதுகாக்கும் நாகரிகம் இனி இலங்கையில் வருமா என்பதைச் சரித்திரமே சொல்லவேண்டும்.

யாழ் நூல் நிலையத்திற்கு உள்ளே சென்றேன். மனதையும் உடலையும் குளிரவைத்த உணர்வு எனக்கு ஏற்பட்டது. எங்கள் உயிர் மூச்சுகள் புத்தகத்தோடு ஒன்றிய காலம் இனியும் தொடரவேண்டும். நான் அங்கு தமிழன்பனின் ஒரு நாவலை இரவல் கொடுக்கும் பகுதியில் கண்டு எடுத்துக் கொண்டேன். அதில் பிரசுரமான பின்னட்டைப் புகைப்படம் இளமையில் அவன் இருந்த கோலத்தைக் காட்டியது. மீண்டும் ஒருமுறை படத்தைப் பாத்தேன். அதைப் பார்த்துக் கொண்டு இருக்கலாம் போலத் தோன்றியது. நான் தலையை ஆட்டியவண்ணம் வெளியே வந்தேன். சைக்கிளை எடுத்துக் கொண்டு வீட்டிற்குப் புறப்பட்டேன்.

நான் நாவல் வாசிக்கத் துவங்கினால் ஒரே மூச்சாக அதை முடித்துவிட்டுத்தான் எழுவது வழக்கம். தமிழன்பனின் அந்த நாவலும் அதற்கு விதிவிலக்காக இருக்கவில்லை. அவனது நடை நன்றாக இருந்தது. எளிமையான வாழ்வின் சம்பவங்களைக் கதையாகத் தந்திருந்த பாணி எனக்குப் பிடித்தது. என்னைப் போலவே மென்மையான உணர்வுகளும்... அதற்கேற்ற உள்மன ஓட்டங்களும் அவனது எழுத்தில் தூக்கலாக நிற்பது என்னை ஈர்ந்தது. சிறிது நேரம் அப்படியே இருந்து அந்த நாவலை அசை போட்டேன். இன்னுமொரு எழுத்தாளனின் நாவல் என்கின்ற சாதாரண முடிவுடன் என்னால் எழுந்திருக்க முடியவில்லை.

## 23

**சா**வகச்சேரி, கொடிகாமம் அகியவற்றின் சுற்றாடல் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சொந்த ஊர்போலப் பழகிவிட்டது. சாவகச்சேரியில் இருப்பது எங்களுக்கு பெரும் உதவியாகும்

என்பது ஆரம்பத்தில் புரியவில்லை. தங்கை வீட்டிற்கு வந்து போகத் தொடங்கியபோதுதான் அந்த இடத்தில் நாங்கள் தங்கி இருந்ததின் வசதியை எங்களால் உணரமுடிந்தது.

ஒருநாள் விடிய வீட்டிற்கு வந்த தங்கை ஆறுதலாக அன்று முழுவதும் எங்களுடன் தங்கி நின்றாள். எனக்கும் அம்மாவிற்கும் தலைகால் புரியாத சந்தோஷமாக இருந்தது. இப்படியே அவள் நின்றுவிட்டால் வாழ்வில் அதைவிடவொரு ஆனந்தம் இருக்க முடியாது என்பது எங்களுக்குப் புலப் படலாயிற்று. என்னால் வாயை வைத்துக் கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. நான் எப்படிப் பழகாத மனிதர்களிடம் வாயை திறக்க மாட்டேனோ அதைப் போல மிகவும் அன்பாய் இருப்பவர்களிடம் வாயை மூடிக்கொண்டும் இருக்கமாட்டேன். நான் விரும்பும் மனிதர்க்ளில் தங்கை முதலிடத்தில் இருந்தாள். அதற்கு அடுத்ததாக அம்மாவோடு செல்லம் பொழிதல் எனக்குப் பிடிக்கும்.

நான் அவளை இயக்கத்தை விட்டு உடனடியாக வரச்சொல்லிக் கேட்டேன். என்னைப் பொறுத்தவரையில் அவள் என் தங்கை என்கின்ற உரிமை இருந்தது. கட்டாயமாக இழுத்துச் செல்லப்பட்ட அவளால் இயக்கதிற்கு முழுமை யாக விசுவாசமாய் இருக்க முடியாது என்றும் நான் நினைத் தேன். நான் இதுபற்றிக் கேட்கவும் அவள் சிறிது அமைதியாக இருந்தாள். அந்தக் கணங்கள் எனக்கு தாங்கமுடியாத அவஸ்தைகளாகின. அவள் ஏதோ கடுமையாக யோசிப்பது புரிந்தது. என்ன சொல்லப் போகிறாள் என்கிற என் தவிப்பில் கணங்கள் நகர்ந்தன.

அவள் சிறிது நேரம் யோசித்துக் கொண்டு இருந்துவிட்டு தான் வந்தால் அவர்கள் தன்னைத் தேடி வருவார்கள் என்றும், தன்னைக் காணாவிட்டால் நிச்சயம் என்னை இழுத்துக் கொண்டு செல்வார்கள் என்றும், ஏற்கனவே போன ஒரு கொண்டையைவிட இன்னொரு கொண்டையை இழப்பது யாருக்கும் நன்மையாகாது என்று அவள் விளக்கம் தந்தாள். பின்னர் சந்தர்ப்பம் பொருந்தி வந்தால் திரும்பி

வர முயல்வதாகவும் உறுதி கூறினாள். சந்தர்ப்பம் கள நிலைமைகளினால் உருவாகும் என நான் நம்பினேன்.

இதை முதலில் கூறிய தங்கை இந்த விடயத்தை அம்மாவிடம் தற்போது கூற வேண்டாம் என்றும் கூறியிருந்தாள். அம்மாவிடம் கூறினால் சந்தோஷத்திலும் பரபரப்பிலும் அம்மா ஊருக்குள் உளறிக் கொட்டிவிடுவார் எனப் பயந்தாள்.

*

ஈழத்தில் இழவுகள் விழுவதால் நாள்கள் ஓடாது தரித்து விடுவதில்லை. அஃது இலத்திரனின் வேகத்தில் எம்மைத் தள்ளிவிட்டு முன்நோக்கிப் பாய்ந்தது. எந்த நாள் எப்படி இருக்கும் என்பது எமக்குத் தெரியாத மர்மமாய் நகர்ந்தது. ஒருநாள் இரவு இரண்டு மணியிருக்கும். பீரங்கிகளின், விமானங்களின் சத்தமில்லாததால் அமைதியாக வீதிகள் உறங்கிக் கொண்டு இருந்த நேரமது. பள்ளிப் பாடங்களைப் படித்த பின்பு கதைப்புத்தகம் வாசிக்கும் ஒரு பழக்கம் என்னிடமுண்டு. அன்றும் நான் படித்து முடித்து விட்டுக் கதைப் புத்தகம் வாசிக்கத் துவங்கினேன்.

திடீரென அந்த அமைதியில் எங்கோ ஒட்டை விழுந்தது. நாய்கள் பாய்ந்து பாய்ந்து குலைக்கும் சத்தம் கேட்கத் தொடங்கியது. எங்கள் வீட்டுக்கு அருகில் தொடங்கிய சத்தம் தொடராக ஊரெல்லாம் பரவியது. நாய்கள் இடைவிடாது குலைத்துக்கொண்டே இருந்தன.

எங்கள் வீட்டிற்கு முன்பாகப் புலிகளின் முகாம் இருக்கிறது. அது நந்திபோல் எங்கள் குடியிருப்புகளை மறைத்துக் கொள்ளும். அதைத் தாண்டி வருவது ஏழு கடலைத் தாண்டுவதுபோல ஆபத்தானது. அந்த நந்தியை பொறுமையாகத் தாண்டி வராததினால் அவளை நாய்கள் இனம் கண்டிருக்க வேண்டும். வேலியோடு உரசியவண்ணம் வந்தாலும் நாய் மோப்பம் பிடிக்கத் தவறுவதில்லை. எங்கள் வீட்டிற்குள் நுழைந்த பெண்ணின் மூச்சுக்காற்று கதை

வாசித்துக் கொண்டு இருந்த எனக்குச் சீறும் சர்பமாய்க் கேட்டது. என்ன அது என்கின்ற கேள்வியோடு நான் எழுந்து கொண்டேன். வீட்டில் இருந்த மற்றவர்கள் இடிவிழுந்தால் என்ன நாங்கள் தூங்குவோம் என்பது போலத் தூங்கிக் கொண்டு இருந்தார்கள். பாம்பு என்றால் படையும் நடுங்கும். கரப்பான் பூச்சிக்கே பயப்படும் எனக்குத் தொடையும் நடுங்கியது. நான் என்னைச் சமாளித்துக் கொண்டு, கைவிளக்கை எடுத் துக் கொண்டேன். பின்பு மெதுவாகச் சென்று வாசலில் நின்று எட்டிப் பார்த்தேன். எனக்கு மயக்கம் வருவதான சந்தோஷம் உச்சிக்கு ஏறியது. கைகால் ஓட மறுத்தது. விறைத்துப் போயின. அங்கே தங்கை ஓடிவந்த களைப்பிலே தனது முதுகைச் சுவரோடு சாய்த்து நின்றாள்.

அந்த வீட்டில் நாங்கள் மாத்திரம் குடியிருக்கவில்லை. அதற்கு நாட்டுநிலைமை இடம் கொடுக்கவில்லை. மாமாவீடு, சித்தப்பாவீடென உறவுகளின் சூழல். மற்றவர்கள் அருண்டு விடாத வண்ணம் தங்கையை உள்ளே மெதுவாக அழைத்து வந்தேன். நான் இரண்டு கதவுகளுடைய அலுவலக அறையில் படுப்பது வழக்கம். அதன் ஒரு கதவு ஹோலுக்கும் மறுகதவு வீட்டு வளவுக்கும் பாதைகளைத் திறக்கும். நான் அதற்குள் தங்கையைப் பின்கதவு வழியாகவே அழைத்து வந்தேன்.

என்ன நடந்தது? என்ன நடக்கப் போகிறது என்பது பற்றித் தங்கை என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை.

அறைக்குள் வந்த தங்கை சீருடையைக் கழற்றி வழமையான உடைக்கு மாறினாள். நாங்கள் விளக்குகளை அணைத்துவிட்டுப் படுத்துக் கொண்டோம். நாய்களின் குரைத்தல் மட்டும் தணியவில்லை. மாறாக உச்சத்திற்குச் சென்று கொண்டு இருந்தது. ஊரெல்லாம் நாய்களின் ஊளைச் சத்தமாயிற்று. தங்கை தான் ஓடிவந்ததையோ, அவள் ஓடி வந்தால் பெண்புலிகள் அவளைத் தேடிவருவார்கள் என் பதையோ எங்களுக்குக் கூறாமல், நீட்டி நிமிர்ந்து நித்திரை கொண்டாள். ஏதாவது விபரீதம் நிகழலாம் என்கிற பயத்துடன் நான் நித்திரைகொள்ள முயன்றேன்.

நாங்கள் அறியாவண்ணம் கிட்டத்தட்ட இருபது பெண் புலிகள் எங்கள் வீட்டைச் சுற்றி முற்றுகை இட்டிருப்பது மெல்ல மெல்லப் புரியத் தொடங்கியது. உள்ளே வந்த பெண்புலிகள் முதலில் ஹோலுக்குள் சென்றார்கள். அங்கே இடப்பெயர்வால் சாவகச்சேரிக்கு வந்திருந்த பலரும் படுத்துக் கிடந்தார்கள். அவர்கள் எல்லோரும் எழுந்து கொண்டதில் யாரைத் தேடிவந்தோம் என்கின்ற தடுமாற்றம் பெண் புலிகளிடம் ஏற்ப்பட்டது. அதில் தங்கையின் சாயலிலும் ஒத்த வயதிலும் மச்சாள் ஒருத்திருந்தது இன்னும் சிறிது அவகாசத்தை எங்களுக்கு தந்தது. என்ன அவகாசம் இருந்தாலும் நாங்கள் வீட்டை விட்டு வெளியே போக முடியாதவாறு அவர்கள் வீட்டைச் சுற்றிக் காவலுக்கு நின்று கொண்டார்கள். எல்லாம் முடிந்துவிட்டதான எண்ணமே என் மனதெல்லாம் நிறைந்து பயமுறுத்தியது. நாங்கள் பயத்தில் விறைத்துப் போய் தலையில் கைவைத்த வண்ணம், அடுத்த கணங்களை எதிர்கொள்ள முடியாத அவதியிலே தடுமாறினோம்.

திடீரென நாங்கள் சயனித்த அறையின் பின் கதவால் கௌரி புயல்போல உள்ளே வந்தாள். வந்த வேகத்தில் தங்கையைத் தூக்கிப் பொருள்கள் வைப்பதற்றகாகக் கட்டப்பட்ட சீமெந்துப் பரணில் ஏற்றினாள். நான் என் கண்ணையே நம்ப முடியாதவளாய் இருந்தேன். பின்பு கீழே கிடந்த சூட்கேஸ் பெட்டியை தூக்கிக் கொடுத்தேன். அவள் அந்த சூட்கேஸ் பெட்டிகளால் தங்கையை நன்கு மறைத்தாள். அதற்கு மேலும் துணியை விரித்து இன்னும் நன்கு மறைத்தாள். பின்பு அவசரமாக கௌரி பின்கதவால் வெளியே சென்று ஹோலில் நின்ற பெண்புலிகளுடன் எதுவும் நடவாதது போலச் சேர்ந்து கொண்டாள்.

தேடுதல் வேட்டை தொடர்ந்தது. யார் கையில் ஆயுதம் இருந்தாலும் நாங்கள் மண்டியிட வேண்டியது உயிர்வாழ்வதற்கான நியதி ஆகியது. தெரிந்த மொழியைப் பேசுபவர் என்றாலும், தெரியாத மொழி பேசுபவர் என்றாலும், ஆயுதத்தோடு வரும்போது நெஞ்சிற்குள் நீக்கமறப் பயம்

கப்பிக்கொள்ளுகிறது, பெண்புலிகள் ரோச் லைற்றை அடித்து ஒவ்வொருவராகத் துருவித் துருவி ஆராய்ந்தனர். இந்த அமளியில் பக்கத்தில் இருந்த ஆண் புலிகளின் முகாம் விழித்துக் கொண்டது. ஆண் போராளிகள் மதிலால் எட்டி வீட்டில் என்ன நடக்கிறது என்பதை விடுப்புப பார்த்தார்கள்.

என் தங்கையின் சாயலில் இருந்த மச்சாள் மாட்டிக் கொண்டாள். தங்கையின் முடியை வெட்டி விட்டார்கள். மச்சாளுக்கோ நீட்டாக முடி இருந்தது. அது பொய் முடி என்கின்ற எண்ணத்தில் அவள் முடியைப் பெண்புலிகள் பிடித்துக் குளறக் குளற இழுத்து உலுப்பினார்கள். ஒன்று இரண்டு முடியைத்தவிர மீதிமுடி அவள் தலையை விட்டு வரமறுத்தே விட்டது. கடைசியில் மச்சாள் என் தங்கை அல்ல என்கின்ற உண்மையை பெரும் தோல்வியோடு அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். அவள் தனக்கு நடந்த திடீர் இம்சையால் மிகவும் அரண்டு போய் நடுக்கத்தோடு முழித்துக்கொண்டு நின்றாள்.

அடிபட்ட புலிகளான அவர்கள் கோபம் அம்மாமேல் மொத்தமாகத் திரும்பியது. தங்கை வீட்டில் இல்லை என்பது அவர்கள் முடிவாக மாறுவதற்குக் கௌரி உதவி செய்திருந்தாள். அறையை மீண்டும் பரிசோதிக்க வரும்போது அவளே வந்து மேல் பிளாற் எல்லாம் நுணுக்கமாகப் பார்ப்பதாகப் பாவனை செய்தாள். இவ்வளவு அமளிக்குள்ளும் எனது தங்கை சிலவேளை நித்திரை கொண்டு இருப்பாள் என்பது எனக்கு மட்டுந்தான் தெரியும். அம்மாவைக் கோபமாகப் பார்த்த பெண் புலிகளின் தலைவி "மோள் வந்தால் கொண்டு வந்து ஒப்படைக்கோணும். அப்பிடிச் செய்தீங்கள் எண்டா ஆறுமாதத் தண்டனைதான். அல்லாட்டி நாங்களாகக் கண்டு பிடிச்சா உங்கட பிள்ளை திரும்பி வராது. நல்லா ஞாபகம் வைச்சிருங்கோ" என்பதாக வெருட்டிவிட்டுச் சென்றாள். அம்மா அந்த எச்சரிப்பில் திகைத்துப் போய் இருந்தா. பெண்புலிகள் புயலாக எங்கள் வீட்டை விட்டு வெளியேறினார்கள். அவர்கள்

வேட்டை வெற்றியாக முடியவில்லை. அது நிச்சயமாக அவர்களுக்கு ஏமாற்றத்தைத் தந்திருக்கும்.

அடுத்தநாள் காலை நான் முதல் வேலையாக மண்ணெண்ணை ஊற்றித் தங்கையின் சீருடையை ஏரித்தேன். எல்லாம் இத்தோடு தொலையட்டும் என்று கடவுளை வேண்டிக் கொண்டோம். எங்கள் மாமா ஒருவர் வீட்டிற்கு அருகே இருந்த ஆண்களின் முகாமிற்குச் சென்றார். அங்கு இரவு பெண்புலிகள் நடந்து கொண்ட முறை சரியா எனச் சாதுவாகக் கதை கொடுத்துப் பார்த்தார். அதற்கு அவர்கள் அப்படி வீடு புகுந்து தேடுதல் நடத்தமுடியாது என்றும், அது தங்கள் விதிமுறைக்கு புறம்பானது என்றும், அரசியல் துறையிடம் சென்று நீங்கள் முறையிடுங்கள் என்றும் அறிவுரை கூறினார்கள்.

எங்களுக்கு அது நல்ல தந்திரமாகத் தோன்றியது. இனி அவர்களை வீட்டிற்குள் ஏறவிடாமல் செய்வதற்கு அது நல்ல வழியாகப்பட்டது. மாமாவும் அம்மாவும் சென்று அரசியல் துறையிடம் முறையிட்டார்கள். அதன் பலாபலனாக அதன் பின்பு அவர்கள் வீட்டிற்குள் நுழையாவிட்டாலும், வந்து வெளியே நின்று விசாரித்துச் செல்வார்கள்.

என் தங்கை சில அத்தியாவசிய மனித உபாதை களைத் தணிப்பதற்கும், குளிப்பதற்கும் மட்டுமே வெளியே வருவது உண்டு. அவர்கள் கண்ணில் அவள் பட்டுவிடக்கூடாது என்பதில் நாங்கள் ஏகப்பட்ட கவனம் செலுத்தினோம். அவள் குளிக்கச் செல்வது ஒன்றும் சாதாரண காரியமாக இருந்ததில்லை. குளிப்பதற்குக் கிணற்றுக்குப் போகும்போது அவளை ஆண்கள் முகாமில் இருந்து யாராவது பார்ப்பதற்கு நிறையச் சந்தர்ப்பங்கள் உண்டு. அது எங்களுக்குப் பெரும் கிலேசத்தை ஏற்படுத்தியது. எந்தச் சந்தர்ப்பத்திலும் பிடிபட்டு விடக்கூடாது என்று வீட்டிலுள்ள நாங்கள் அங்கலாய்த்தோம்.

தங்கை வெளியே இறங்கி குளிப்பதற்குச் செல்வதென்றால் முதலில் தலையில் மொட்டாக்குப் போட்டுக் கொள்ளுவாள். பக்கத்து ஆண்கள் முகாமில் யாரும் வெளியே நிற்கிறார்களா

என்பதை அறிவிப்பதற்காக மாமாவின் மகன் ஒருவன் பூவரசம் இலையில் செய்த குழலுடன் தண்ணீர் தாங்கில் ஏறிக் கொள்வான். அதில் இருந்து பார்த்தால் முகாமில் யார் யார் எங்கெங்கே நிற்கிறார்கள் என்பதைக் கவனிக்கலாம். அவன் பூவரசம்குழல் சமிக்ஞை கொடுத்ததும், மாமாவின் மற்றைய மகன் தங்கைக்கு சமிக்ஞை கொடுப்பான். அதன்பின்புதான் அவள் குளிக்கச் செல்வாள்.

இவர்களின் இந்தச் சமிக்ஞைகள் சில போராளிகளுக்குச் சந்தேகத்தைக் கொடுத்தது. குழல் சமிக்ஞை கொடுத்து என்ன செய்கிறீர்கள் என்று சிரித்தவண்ணம் மச்சானைக் கேட்டு இருக்கிறார்கள். அவர்கள் தங்கை இருப்பதை அறிந்து இருக்கலாம். ஆனாலும், அதனை அவர்கள் பெரிதாக எடுத்துக்கொள்ளாதது எங்களுக்கு வியப்பினைத் தந்தது.

## 24

**வா**ழ்க்கை என்பது நீந்திக்கடக்க முடியாத ஆழியாக என்முன்னே விரிந்து பயமுறுத்திய காலம் அது. நான் மாட்டிக் கொண்ட சிறையில் இருந்து என்னால் விடுதலை பெற முடியவில்லை. சிறைக்குள் மரணமும் என்னை நெருங்க வில்லை. சித்திரவதை மட்டும் முடிவில்லாது தொடர்ந்தது. அம்மா எனது அவலத்தைச் சிறிது சிறிதாகத் தெரிந்து கொண்டதில் இருந்து, அதைப் பொறுக்க முடியாது அடிக்கடி யாழ்பாணத்திற்குப் புறப்பட்டுச் சென்றுவிடுவா. அப்பொழுது கிடைக்கும் தனிமையைப் பயன்படுத்தும் அவனின் கொடுமை முற்றுபுள்ளி காணாமலே தொடர்ந்தது.

எனக்கு வேண்டிய விடுதலைக்கான ஒரு வழியைக் கண்டுபிடிக்கும் கட்டாயத்துக்கு என்னை வெறுப்பு இழுத்துச் சென்றது. அதற்கு என்ன வழி என்பதைத் தேடித்திரிந்து அலுத்துப் போய்விட்ட நேரத்தில் கண்ணை மூடிக்கொண்டு

எதையாவது செய்து விடவேண்டும் வேண்டும் போலத் தோன்றியது. "இனியும் இந்த ஆக்கினையை உன்னால் தாங்க முடியாது. நீ செத்துப் போய்விடு" என்று என் மண்டைக்குள் ஓர் அசரீரி நச்சரித்தது.

இனி வாழ்வதில்லை என்கின்ற முடிவுக்கு வந்தேன். வாழ்வை எப்படி முடித்துக் கொள்ளப் போகிறேன் என்கிற தடுமாற்றம் சில தினங்கள் இருந்தன. சிலநாள்களில் அதையும் முடிவு செய்தேன்.

அன்று காலை பத்துமணி இருக்கும். மகளும் வீட்டிற்குள் இருந்தாள். தற்பொழுது வெளியே வரமாட்டாள் என்கின்ற துணிவு எனக்கு உண்டாகிற்று. எங்கள் வீட்டிற்கு குழாயில்தான் நீர் வருகிறது. அப்படி இருந்தும் சிறிய கிணறு ஒன்றும் எங்கள் வளவிற்குள் உண்டு. அந்தக் கிணற்றை பாவிப்பது மிகவும் அரிது. கிணற்றடிப்பக்கம் சென்றேன். ஒருமுறை கிணற்றை எட்டிப் பார்த்தேன். எவ்வளவுக்கு நீர் நிற்கிறது என்பதை என்னால் கணிக்க முடியவில்லை. இது எல்லாம் அளந்து பார்த்துச் செய்யும் வேலையுமில்லை. கண்ணை மூடிக் கொண்டு 'புருஷன்' என்ற எமன் கையில் பட்டுவிடாது கைலாசம் போக அந்தப் பிள்ளையார் இனியாவது உதவட்டும் என வேண்டிக் கொண்டேன். உந்தித் துள்ளி காற்றில் பறந்து, நீரை அடைந்தபோது, கால்கள் தரையிற்பட்டு தெறித்ததாக வலித்தன. நான் நீருக்குள் மூழ்கவில்லை. சா என்னை நெருங்கவும் இல்லை. யாருக்கு என்னிடம் பயம் இல்லாவிட்டாலும் சாவுக்கு மாத்திரம் என்னிடம் பயம் இருந்தது போலும். நான் வேண்டுமென்றே தெற்குப் பக்கமாகத் தலைவைத்துப் படுத்துப் பார்த்தேன். அதுவும் எனக்கு வேலை செய்யவில்லை. நியூட்டனின் விதி பொய்த்தாலும் பொய்க்கலாம், என்விதியில் மாத்திரம் எந்த மாற்றமும் ஏற்படாது என்பதாக எமன் எனக்கு டிமிக்கி கொடுத்தான்.

என் காலில் ஏற்பட்ட சுளுக்கு என்னை வலியில் வருத்தியது. வேதனையைவிட வெளியே வரும் போது ஏற்படப்போகும் அவமானத்தில் நான் குன்றிப்போனேன். இந்த

நரகாசுரனிடம் இருந்து ஏன் எனக்குக் கடவுள் விடைதர மறுக்கிறார் என்பது மட்டும் புரியவில்லை.

நான் கிணற்றுக்குள் குதித்ததை வெளியே வந்த என் மகள் கண்டுவிட்டாள்போலும். அவள் "அம்மா கிணத்துக்க... அம்மா கிணத்துக்க விழுந்திட்டா" எனக் கத்திக் குளற... அயலவர்கள் கூடிவிட்டார்கள். அவர்கள் ஓடிவந்து கிணற்றை எட்டிப்பார்க்க நான் அங்கு பரிதாபமாக, சொந்த உயிரை மாய்க்க மார்க்கமற்ற அனாதையாய் நின்றேன். அவர்கள் தங்கள் மனிதாபிமானத்திற்குப் பங்கம் ஏற்படாது கிணற்றில் இருந்து என்னை வெளியே தூக்கிக் காப்பாற்றி விட்டார்கள். எனக்குக் கிணற்றிற்குள் உள்ள சுதந்திரங்கூட வீட்டில் இல்லை என்பது மாத்திரம் அவர்களுக்குப் புரியப் போவதில்லை. அவன் சிங்களம் கதைத்தே அவர்களை ஏமாற்றிவிடுவான். என்றாலும் சில அயல்வீட்டுப் பெண்களுக்கு அவன் குணங்கள் சற்றுப் புரிந்திருக்கக்கூடும் என நினைக்கிறேன்.

முதலாவது தோல்வியோடு ஒவ்வொருவரும் ஓய்திருந் தால் எத்தனை சரித்திரங்கள் எழுதப்படாமல் விடுபட்டிருக்கும்? நானும் முதலாவது தோல்வியோடு ஓய்ந்து போய்விட விரும்பவில்லை. அடுத்த முயற்சி பற்றி நான் சிந்தித்தேன். மீண்டும் ஒருமுறை கிணற்றுக்குள் விழுந்து காலையும் மூக்கையும் உடைத்துக் கொள்ளும் உத்தேசம் எனக்கு இருக்கவில்லை. இம்முறை வேதனை இல்லாது நான் இந்த உலகை விட்டுப் போக வேண்டும். அதற்கு என்ன செய்யலாம் எனச் சிந்தித்தேன். எனக்கு ஒருநாள் நெற்கதிர் சேர்க்கும் எலியின் ஞாபகம் வந்தது. அது ஒவ்வொரு கதிராக வெட்டித் தனது வளையில் எவ்வளவு கதிரைச் சோத்து வைத்திருக்கும் என்பதைக் காரைநகரில் வறியவர்கள் புற்று வெட்டிக் கதிர்களை அள்ளும்போது பார்த்து வியப்புற்றது என்னைச் சிந்திக்கத் தூண்டியது. சிறுகச் சிறுகச் சேர்த்தே எதையும் சாதிக்கலாம் என்கின்ற நம்பிக்கையை அது தந்தது. வீதி எங்கும் மருந்துக் கடைகள் நிறைந்து கிடந்தன.

ஒரு குறிப்பிட்ட சிறிய தொகைக் குளிசை வேண்டும் என்றால் மருத்துவரின் துண்டைக் கொண்டு வா என்று எவருங் கேட்பதில்லை. நானும் கைகாவலாக இருக்கட்டும் என்று பிறிரோன் ஐந்து குளிசை ஒரு பாமஸியில் முதலில் வாங்கி னேன். அப்படிச் சில பாமஸியில் ஒவ்வருமுறையும் கடைக்குப் போகும் போது வாங்கிச் சேகரித்ததில் எனக்கு ஒரு திருப்தியும் துணிவும் ஏற்பட்டது.

நான் எனது இரண்டாவது முயற்சியில் வெற்றிகரமாக இறங்கினேன். இம்முறை எனது சாவிற்கான சில உண்மை களையாவது வெளியே சொல்லிவிட்டுச் சாகவேண்டும் போல இருந்தது. நான் அதற்காக ஒரு கடிதம் எழுதினேன். அந்தக் கடிதத்தில் எனது சாவினை என் கணவனே தூண்டினான். எனவே, அவனே முழுப்பொறுப்பு என்றும், எனது பிள்ளையை எனது அம்மாவோடு அல்லது எனது சகோதரர்களுடன் வளர விட வேண்டும் என்றும் கேட்டு அந்தக் கடிதத்தை எழுதி வைத்திருந்தேன். மருந்துக் குளிசையைப்போட மகளைப் பார்க்கும்பொழுது மனம் வருவதில்லை. அப்படியே நாள்கள் கடந்து சென்றன.

திடீரென அன்று தனக்கு அவசரமாகப் பணம் வேண்டும் என்றும் அதை அம்மாவிடம் கேட்டு வேண்டித் தருமாறும் கேட்டான். அம்மாவிடம் பணம் இல்லை என்பது எனக்குத் தெரியும். அதைவிட இவனின் குணம் அறிந்து சகோதரங் களும் இப்பொழுது அதிகமாக எனக்குப் பணம் அனுப்பி வைப்பதில்லை. நான் படும் சித்திரவதையில் எனக்கு வாழ்க்கையே வெறுத்தது. அந்தப் பவிசில் இவருக்குப் பணம் வேண்டிக் கொடுக்க வேண்டுமா? அவன் என்னை அம்மாவுக்குப் போன் பண்ணுமாறு ஒருதரம் கூறினான். நான் போன் பண்ணவில்லை. நான் யோசனையில் இருக்க அவன் எட்டிப் பாய்ந்து கையைப் பொத்தி மடக்கி என் அடிவயிற்றில் கராட்டி மர்மக் குத்தைக் குத்தினான். எனக்கு அந்தக் குத்து விழுந்தால் மயக்கம் வரும். அதன் வலியும் வேதனையும் நரகத்தை மூளையிலே சுழலச் செய்யும். அப்படியொரு கணம் இனி வாழ்வில் வரக்கூடாது என்று மனம் வெதும்பும்.

நான் கையெடுத்துக் கும்பிட்டவண்ணம் அப்படியே மயங்கிப் போய்விட்டேன். எனக்கு மயக்கம் தெளிந்தபொழுது அவன் வீட்டில் இல்லை. நான் சமையல் அறைக்குச் சென்று தாராளமாகத் நீர் கொண்டு வந்தேன். எனக்கு அப்பொழுது எதையும் பற்றி சிந்திக்கத் தோன்றவில்லை. செத்துப் போய்விட வேண்டும் என்பதே எனது முடிவு. நான் படுக்கை அறைக்குள் சென்றேன். இருபது பிறிரோன் மாத்திரைகளை ஒவ்வொன்றாக விழுங்கி நீர் அருந்தினேன். நித்திரைக் குளிசை போட்டுத் தற்கொலை செய்வதுகூடச் சாதாரண காரியம் இல்லை என்பதை நான் அன்று அனுபவித்தேன் எனக்கு முதலில் தலை கிறு கிறுத்தது. பின்பு தலை சுற்றியது. கிணற்றுக்குள் இருந்து சத்தம் வருவது போல சத்தம் கேட்டது. மெதுவாக நித்திரை மயக்கம் இறுக்கிப்பிடிக்கத் துவங்கியது. அதன் பின்பு என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. மருத்துவமனையில் சொல்லியது மட்டுந்தான் தெரியும்.

நித்திரை மயக்கத்தில் வாயால் நுரை தள்ளிக் கிடந்த என்னை மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றிக்கிறான். எங்கள் வாழ்கை பூனையும் எலியும் போன்றது. நான் செத்துவிட்டால் அவனுக்கு விளையாட எலி இல்லாமல் போய்விடும் என்கின்ற கவலையாக இருக்க வேண்டும். பணம் காய்க்கும் மரத்தை பிடுங்கியெறிய அவனுக்கு மனதும் இல்லை. பொன்முட்டையிடும் வாத்தை வெட்டிவிட்டால் ஒவ்வொருநாளும் பொன்முட்டைக்கு எங்கு போவது?

மருத்துவர் வாயில் புனல் வைத்துப் பருக்கிய கலவை யில் வயிறு ஊதி... சத்தி குடம் குடமாக எடுத்து... முகம் கைகால் வெளிறி சோர்ந்து போய்க் கிடந்தபோதும் உயிர் மாத்திரம் என்னோடு ஒட்டிக்கொண்டே கிடந்தது. பூலோகத்து எமனைக் கண்டு பரலோகத்து எமன் இம்முறையும் பயந்து ஓடி இருக்க வேண்டும். அந்தப் பரலோக எமன் குற்றத்திற்கு மாத்திரம் தண்டனை கொடுப்பான். இவன் குற்றமே செய்யாத என்னைத் தண்டித்துக் கொண்டு இருந்தான்.

மருத்துவமனையில் எனக்குச் செலையின் ஏற்றினார்கள். அத்தோடு அவர்கள் விட்டுவிடவில்லை. மருத்துவ சாஸ்திரத் தில் தாங்கள் கற்ற வித்தையால், உயிர்களைக் காப்பாற்று கிறோம் என்கின்ற நல்ல எண்ணத்தில், எனது சித்திரவதைக் காலத்தை நீட்டித்து விட்டனர்.

என்னைக் காப்பாற்றுவதாக எண்ணி எனது கடூழியத் தண்டனையை அவர்கள் நீட்டித்துவிட்டார்கள். ஏமாற்றும் இந்த உலகம்கூட சிலவேளை எப்படி ஏமாளி உலகமாக இருக்கிறது என்கின்ற உண்மை எனக்கு அப்போது வியப்பைத் தந்தது. அந்தச் சம்பவம் அவனிடம் இருந்து கிடைத்த அடிகளின் எண்ணிக்கையை சிறிது காலத்திற்கு தற்காலிகமாகக் குறைத்திருந்தது.

இலங்கையில் திடீரெனச் சமாதானக் காற்று வீசத் துவங்கி இருந்த காலம் அது. உண்மையில்லாதது, உள்ளச் சுத்தியில்லாது, ஓய்வு தேவைப்படும் பொழுது மட்டும் வீசும் அந்தக் காற்று எப்பொழுது திசை மாறும் என்பதை எவராலும் கணிக்க முடியாது. நீண்டகாலத்திற்குப் பின்பு வீசிய அந்தக் காற்றில் பலருக்கும் ஏனோ ஒருவித நம்பிக்கை ஏற்பட்டது. வன்னி தனிநாடு மாதிரியான தோறணை உருவாகி நிலைத்தது. அந்த நாட்டைப் பார்ப்பதற்குப் பலரும் படை யெடுத்தனர். உள்நாட்டு வெளிநாட்டு ராஜதந்திரிகள், பத்திரிகையாளர்கள், புலிகளின் ஆதரவாளர்கள் என அந்தப் பட்டியல் நீண்டது. வன்னி தனிநாடானால் அதில் தன்சுவடு எதுவுமே இல்லாது போய்விடுமோ எனத் திடீரெனச் அவன் சிந்திக்கத் தொடங்கினான். அதற்காக அங்கு போக இரகசியமாகத் திட்டமிட்டான். சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுது அதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதில் அவன் வலுகவனம்.

ரணிலின் புண்ணியத்தில் வீசிய சமாதானக் காற்றை நன்கு கவனித்த அவன் வலைத்தளத்தில் புலிகளின் சமாதானச் செயலகத் தொலைபேசி எண்ணைத் தேடி எடுத்துக் கொண்டான். அந்த எண்ணை எடுத்தவன்

தன்னை விலாசம் காட்டும் வீர பிரதாபத்திற்காக அவர்களைத் தொடர்பு கொண்டான். அந்தத் தொடர்பின் பயனாக வன்னிக்கு இரண்டு மூன்று முறை சென்று வந்தான்.

புலிகள் அவன் மட்டும் வன்னிக்கு வந்து போவது போதாதெனவும்... வீட்டில் குடியிருக்கும் அனைத்து உறுப்பினர்களையும் தாங்கள் பார்க்க வேண்டும் என்றும் கூறி இருக்கிறார்கள். தனது சுயநலத்திற்காய் யாரையும் பலி கொடுப்பதற்கு தயங்காத மிருகம் அவன். எங்களைப் பாவிப்பதற்குப் சற்றும் பின்னுக்கு நிற்கவில்லை. எங்களை முறிகண்டிப் பிள்ளையார் கோவில் வரையும் எனது விருப்பத்தையும் மீறி அழைத்துச் சென்றான். அங்கு அவர்கள் ஒழுங்கு செய்த வானுக்குள் எங்களை மாற்றி ஏற்றினார்கள். பின்பு எங்களுக்கு தலைசுற்றும் வண்ணம் அதை குறுக்கு மறுக்காக ஓட்டிச் சென்றார்கள். மறுக்க முடியாத நடுக்கத்துடன் நானும் என்னுடைய குழந்தையும் அந்தப் பயணத்தில் ஈடுபடவேண்டியாதாகிற்று. உலகில் எல்லோருக்குமே பயப்பட வேண்டியதுதானா என் விதி என்கின்ற கேள்வி மட்டுமே என்னை அப்பொழுது இடை விடாது துரத்தியது.

முறிகண்டிப் பிள்ளையார் கோவிலில் வைத்து எங்களைப் பார்த்துவிட்டு அவர்கள் திருப்பி அனுப்பி இருக்கலாம். அப்படி விட்டிருந்தால் நாங்கள் சந்தோஷமாக யாழ் சென்றிருப்போம்.

எங்களை யாழ் செல்ல விடுமாறும், மீண்டும் அவன் கொழும்பு வரும்போது அங்கு வந்து சேருகிறோம் என்றும் மன்றாடினேன். அவன் அதை முற்றாக மறுத்து விட்டான். அவன் தயவு தாட்சண்ணியம் இன்றித் எங்களை இழுத்துச் சென்றான்.

வன்னியைச் சென்றடைந்ததும் விசேடவிருந்தினர் தங்கும் முகாமில் எங்களைத் தங்க வைத்தனர். என்னால் எதையுமே புரிந்து கொள்ள முடியவில்லை. எப்படி ஒரு

மனிதன் இருக்க கூடாதோ அப்படியான ஒரு மனிதனுக்கு உதாரணமாய் இருக்கும் அவனைக் கணிக்க முடியாது இராஜ மரியாதை கொடுப்பவர்களை என்ன வென்று சொல்வது? அவர்கள் உலக அரசியலில் நடக்கப் போகும் சூதாட்டத்தில் வென்று, எங்களை எப்படிக் காப்பாற்றப் போகிறார்கள்? மனித உளவியல் பற்றி அறிந்திருக்க வேண்டிய இடத்தில்... எழுந்த மானத்தில் நம்புவதும் சந்தேகப்படுவதும் எங்கு கொண்டு செல்லும்? ஒரு பக்கம் எனக்கு கோபமாகவும் மறுபக்கம் எனக்கு அது மிகவும் கவலையாகவும் இருந்தது. எனது நேரம் அங்கு அல்லாட்டத்தில் கழியலாயிற்று. எங்களுக்கு காலையில் கண்முழிக்க முன்பு படுக்கைக்குக் கோப்பி வந்துவிடும். சில நாள்கள் உல்லாச விடுதியில் இருந்தது போல இருந்தது. சமையலுக்கும் அவனிடம் இருந்து விழும் அடிக்கும் விடுதலை கிடைத்தன. எங்களுக்கு எல்லா வசதிகளும் அங்கு தடல்புடலாக இருந்தன. என்னால் இதை யெல்லாம் நம்பமுடியவில்லை. மக்கள் போராட்டம் என்று மக்களைப் பிச்சை எடுக்க வைத்துவிட்டு, ஒட்டுண்ணி களுக்கும், சைக்கோக்களுக்கும் வகை தெரியாது கொடுக்கப் பட்ட உபசரிப்பும் விருந்தும் என்னைக் கதிகலங்க வைத்தது. நாங்கள் எங்கள் தலையிலேயே மண்ணள்ளிப் போட்ட இனம் என்பதற்கான காரணம் சாதுவாகப் புரியத் தொடங்கியது.

அவனுக்கு விதம் விதமான இறைச்சி வகைகளுடன் உணவு பரிமாறப்பட்டது. நான் மரக்கறியோடு எனது உணவைக் கட்டுப்படுத்திக் கொண்டேன். அவன் உணவு வகைகளில் காட்டிய அக்கறையை மற்றையவிடயத்தில் காட்டாது... சமைத்துவரும் உணவு பற்றி, அவரகளுடைய முதுகுக்குப் பின்னால் என்னோடு இரகசியமாகக் குறைப்பட்டுக் கொள்ளத் தவறவில்லை.

ஏமாற்றுக்காரனான அவனுக்கு வன்னியை ஒவ்வரு நாளும் சுற்றிக்காட்டுவதிலும், அவனைப் பல முக்கிய பிரமுகர்கள் வந்து சந்தித்துப் போவதிலும் ஒரு கிழமை கரைந்து போயிற்று. என்னை அடிக்கடி நான் கிள்ளிப் பார்த்தேன். மேலும் மேலும் அதிர்ச்சியும் வியப்பும் என்னைத்

தாக்கின. அவன் சொல்லும் பொய்களுக்கு இப்படி யொரு சக்தி இருக்கிறதா என்பது என்னைக் கிலி கொள்ள வைத்தது. எனக்கு எதிராக அவனால் எங்கும் எப்போதும் பொய் சொல்லி மாட்டிவிட முடியும் என்பதும் புலப்பட்டது.

தற்பெருமை காட்டும் சைக்கோவின் கள்ளத்தனத்திற்கு எவரெல்லாம் ஏமாந்தார்கள் என்பதை நேரில் சென்று பார்த்த போது எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. முதலில் அவன் சமாதானச் செயலகப் பொறுப்பாளரிடம் சென்று கதைத்தான். தமிழனாய் பிறந்ததற்காகக் தான் ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்று வெற்றுவசனம் பேசினான். அதை அவர்கள் அப்படியே நம்பினார்கள். அது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவனுடைய வாய்ஜாலத்தைப் புரிந்து கொள்ள இயலாத அவர்களா, போராட்டத்தை நடத்தி தமிழீழம் எடுக்கப் போகிறார்கள்? இந்த எண்ணத் தோன்றியது. ஒரு மனநோயாளியைக் கண்டுபிடிக்க முடியாத அமைப்பால் எமது இனத்தை எப்படிக் காப்பாற்றமுடியும் என்கின்ற கேள்வி மீண்டும் எழுந்தது. போராட்டத்திலே வீரத்துடன் விவேகமும் கலந்திருக்க வேண்டும் என்பது என் நம்பிக்கை.

அவன் அரசியல்துறைப் பொறுப்பாளரிடமும் சென்று கதைத்துப் பழக்கம் ஏற்படுத்திக் கொண்டான். அத்தோடு பல முக்கிய பொறுப்பாளர்களும் அவனுடன் பழகினார்கள். அவன் கதைகளுக்கு அவர்கள் கொடுத்த பெரும் மதிப்பு எனக்கு அருவருப்பை ஏற்படுத்தியது.

அங்கு இருந்த இளநிலை அதிகாரியான – புலிஊறுப்பினர் ஒருவருக்கு மட்டும் இவனது குணங்களை அடையாளம் கண்டுகொள்ள முடிந்திருந்தது. அது எனக்குச் சற்று சந்தோஷத்தைத் தந்தது. அடுத்த கிழமை இவனுக்கு பயிற்சி அளிக்க வேண்டுமென அந்த இளநிலை அதிகாரி கூறியதோடு அவனில் சந்தேகம் கொண்டு அவதானிக்கவும் துவங்கினான். அந்த அதிகாரி என்னிடம் வந்து "அக்கா உண்மையிலேயே அவர் நல்லவரா? நீங்கள் பயப்படுவது போலத் தெரியுதே? உங்களை அவர் அடிப்பரா?" எனக் கேட்டார். நான் பேசாது இருக்க "அவர் பயிற்சிக்கு வரட்டும்

அப்போது கவனித்துக் கொள்கிறேன்'' என்று அந்த இளநிலை அதிகாரி கூறியது எனக்கு வியப்பையும் அதே சமயம் சந்தோஷத்தையும் தந்தது.

நான் பின்பு எனது மௌனத்தைக் கைவிட்டு "எனக்கு அவரைப்பற்றி முழுமையாகத் தெரியாது. வேண்டும் என்றால் நீங்கள் நிரந்தரமாக அவரை வைத்துக் கொள்ளுங்கள். நான் மகளுடன் யாழ்சென்று வாழுகிறேன்.'' என்றேன். அவன் அதற்கு "எங்களிடம் போராட நிறையப் போராளிகள் இருக்கிறார்கள். கொழும்பு போன்ற இடங்களில் இருந்து உதவி செய்யவே எங்களுக்கு ஆள்கள் வேண்டும்'' என்று கூறினான். அவர்கள் என்னையும் சேர்த்து சிக்கலில் மாட்டிவிடுவார்களோ என்ற பயமும் என்னைப் பற்றிக்கொண்டது. அவன் தற்சமயம் பிடி பட்டால் சிலவேளை முதலில் என்னை மாட்டிவிட்டு தான் தப்பித்துக் கொண்டாலும் தப்பித்துக் கொள்வான் என்பது எனக்குப் புரியலாயிற்று.

முதல்நாள் புலிகளின் சீருடை அணிந்து விதம் விதமாகப் புகைப்படம் எடுத்துக் கொண்டான். அவன் அப்படிப் புகைப்படம் எடுக்கும் பொழுது எங்களையும் அவர்கள் வில்லங்கத்திற்கு கூப்பிட்டுச் சில புகைப்படம் எடுத்துக் கொண்டார்கள். அப்போழுது அவர்களில் ஒருவர் "நீங்களும் எங்களுடன் சேரலாமே அக்கா?'' என்றான். எனக்குச் சற்று எரிச்சலாக இருந்தது. "கலியாணம் செய்து பிள்ளை பெற்ற பின்பா சேருவார்கள்?'' துணிவான விடை ஒன்றை அவனுக்கு கொடுத்து அவனுடைய கூச்சத்தைப் பார்த்தேன்.

இளநிலை அதிகாரியிடம் சென்று தினேஸ் பயிற்சி முகாம் எப்பிடி இருக்கும் என்று கேட்டான். அதற்கு அவன் அங்கு எந்த வசதியும் இருக்காது எனவும், கடுமையாக பயிற்சி செய்ய வேண்டும் எனவும், விழுந்து காயப்பட்டால் எந்தக் கவனிப்பும் கிடையாது எனவும் வெருட்டி வைத்தான்.

அந்த ஒரு வெருட்டல் அவனுக்குப் போதுமானதாயிற்று. அடுத்நாள் காய்ச்சலும் வயிற்றுப்போக்கும் அவனைப்

பயத்தில் பீடித்துக் கொண்டன. அவர்கள் இரண்டு அல்லது மூன்றுநாள் கழித்துப் பயிற்சிக்குப் போகலாம் எனத் தள்ளி வைத்தார்கள். யோசித்துக்கொண்டே இருந்த தினேஸ் தான் பயிற்சி செய்ய முடியாது எனப் பயத்தில் மறுதலிக்கத் தொடங்கினான். பின்பு அவன் பெறுப்பானவர் களோடு அதைப்பற்றிக் கதைத்தான். தான் திரும்பிப் போவதற்கு முடிவும் செய்துவிட்டதாக அவர்களுக்குக் கூறினான்.

அதை அவர்கள் மறுத்த பொழுது தர்க்கப்பட்டுச் சண்டை பிடித்தான். புலிகளோடு தர்க்கப்பட்டுச் சண்டையிட்டபோது "இப்ப போங்க அண்ணை, உங்கள நாங்கள் கவனிக்கிற மாதிரிக் கவனிக்கிறம்" என்று எச்சரித்து அனுப்பி வைத்தார்கள்.

## 25

அன்று திடீரென எனது செல் சிணுங்கியது. நான் அதையெடுத்துப் பார்த்தேன். என்னைத் திடுமென இன்ப அதிர்ச்சி தாக்கிற்று. தமிழன்பன் எனது தொலைபேசி எண்ணைச் சும்மா வேண்டிச் செல்கிறான் என்றுதான் எண்ணி இருந்தேன். எனக்குப் போன் செய்வான் என்று பெரிதாக எதிர்பார்க்கவில்லை. நான் அந்த அதிர்ச்சியில் இருந்து விடுபட்டுப் போனை எடுத்தேன்.

"ஹலோ..."

"நான் தமிழன்பன்."

"தெரியும்."

"ஓ பெயரும் எழுதி வைச்சு இருக்கிறியளா?"

"இலங்கையில இருக்கிறம் எண்டதுக்காக நாங்கள் செல்லப் பார்க்கேல்ல எண்டு நீங்கள் நினைக்கக் கூடாது?"

“நான் அதுக்குச் சொல்லேல்ல.”

“தெரியும். நானும் சும்மாதான் சொன்னன். அது சரி என்ன விஷயம்?”

“உங்கட குரல் வண்ணத்திபூச்சியின்ர இறக்கையால சங்கில தடவுறமாதிரி இருக்குது.”

“இதைச் சொல்லவா எடுத்தியள்?.”

“நான் நாளைக்கு உங்கட வீட்ட வரலாமா?.”

“உது என்ன கேள்வி? சும்மா வாறத்துக்கு ஏன் கேட்டக் கொண்டு எல்லாம் நிக்கிறியள்? உங்கட புன்னகைப்பூ வாசிச்சன். நல்லா இருந்திச்சு.”

“தாங்ஸ்.”

“நீங்க போன் பண்ண வேண்டாம். நேர வீட்ட வாங்க.”

“எதுக்கும் நான் யாழ்ப்பாணம் வரேக்க போன் செய்யிறன்.”

“அது உங்கட விருப்பம்.”

“தாங்ஸ்... என் விருப்பத்திற்கு போன்பண்ண அனுமதி தந்ததுக்கு.”

“ஐயோ எனக்கு ஐஸ் வைச்சது காணும்.”

“ஓ. கே. அப்ப சந்திப்பம்.”

“சந்திப்பம்.”

அடுத்தநாள் காலை எழுந்த பொழுது தமிழன்பனின் நினைவுதான் முதலில் வந்தது நின்றது. தமிழன்பன் என் குரலை வண்ணத்திப் பூச்சியின் இறக்கை என்கின்றான். இந்த வண்ணத்திப் பூச்சிக்கு என்ன நடந்தது என்ற உண்மை சிலருக்கு மாத்திரம் கிடைக்கும் அதிர்ச்சியான கதை. அந்தக் கதையை ஒருநாள் தமிழன்பனுக்குச் சொல்ல வேண்டும் என எண்ணிக்கொண்டேன்.

தமிழன்பன் தனது ஊரில் இருந்து யாழ்ப்பாணம் வந்த பின்பு இதுவரையும் ஏனோ என்னுடன் தொலைபேசியில் தொடர்பு கொள்ளவில்லை என்பதுதான் மனஸ்தாபமாய் இருந்தது. திடீரென வீட்டிற்கு முன்பு வந்து நின்ற ஓட்டோவில் இருந்து அவன் சிரித்தவண்ணம் இறங்கியபொழுது நான் அதிர்ந்துதான் போய்விட்டேன். அந்தச் சிரித்த முகத்தைப் பார்த்தால் எந்தக் கோபம் மனதில் இருந்தாலும் பட்டென்று பறந்து போய்விடும். அவனை யார் பார்த்தாலும் சிரித்துவிடுவார்கள் என்றுதான் எனக்குத் தோன்றியது. வஞ்சகம் இல்லாத சிரிப்புத்தான் அது. யாரிடமும் எதுவும் எதிர்பாராத அந்தச் சிரிப்பு அழகுதான். நானும் அப்படித்தானே சிரித்தேன்.

“என்ன... வீட்டுக்குள் வரச்சொல்ல மாட்டிங்களா?”

“ஏதோ யோசனை... நீங்க வாங்க...” நான் அவனைக் கூட்டிச் சென்று ஹோலில் இருந்த கதிரையில் அமர வைத்தேன். அவன் இருக்கும்போது தான் வாங்கி வந்திருந்த அப்பிள் பழங்களை நீட்டினான்.

“நீங்கள் போறவாற இடத்திற்கு எல்லாம் இப்படிக் கொண்டு போவீங்களா, எழுத்தாளரே?”

“ச்... சும்மா வெறுங்கையோட முதன்முதலாக வரக் கூடாது எண்டிட்டு. அதோட, கடையிலே நல்ல அப்பிள் பழங் களையும் பார்த்தேன். உங்களப் பார்க்க வாறது... அதுதான் ஏதாவது இனிப்பா இருக்கட்டும் எண்டு...”

“ஓ அப்படியா? எதுக்கும் நன்றி எழுத்தாளரே!” எனக்கு அவனைச் சீண்டவேண்டும் போல் இருந்தது. எனது மகள் அப்பொழுது பாடசாலையால் வந்து வீட்டிற்குள் புகுந்தாள். தமிழன்பன் அதிர்ச்சி அடையலாம் என்று நினைத்தேன். எனது மகளைப் பார்த்துச் சிநேகபூர்வமாகச் சிரித்தான். பின்பு என்னைப் பாத்து “உங்கள் சாயல் மகளில் நிறையவே இருக்கிறது.”

“அவள் என்மகள் என்று உங்களுக்கு...”

“அதுதானே சொன்னேன் உங்கள் சாயல் என்று...”

“உங்களுக்கு நான் எப்படிக் கலியானம் செய்து விட்டேன் என்று தெரியும்?”

“சிம்பிள்... பேருந்தில் நீங்கள் சீறியபோதே உங்களுக்குத் திருமணமாகி ஒரு நரகத்தை கண்டிருப்பீங்கள் என ஊகித்துக் கொண்டேன். அது இப்பொழுது சரி என விளங்குகிறது.”

## 26

எங்கள் போராட்டம் ஓயாத அலைகள்தான். அது சாவகச்சேரியில் ஓய்ந்துவிடவில்லை. சாவகச்சேரிக்கு இராணுவம் முன்னேறத் தொடங்கி இருந்ததாகக் கேள்விப் பட்டோம். தற்காலிகப் பின்னடைவு. வெளியில் கருத்துச் சொல்வதற்கு யாருக்கும் துணிவு ஏற்படவில்லை. சாவகச் சேரியை இராணுவம் நெருங்க நெருங்க மக்கள் வன்னியை நோக்கி ஓடத் துவங்கினார்கள். உயிர் வேண்டும் என்கின்ற எண்ணம் ஒருபக்கம்., நின்றால் கொன்று விடுவார்கள் என்கின்ற பீதி இன்னொரு பக்கம், அவர்களை வெருட்டிக் கலைத்தது. இராணுவம் ஓர் இடத்தைப் பிடித்தபோது நடந்துகொள்ளும் முறை அவர்களை மேலும் கிலிகொள்ள வைத்தது. திக்குப் புரியாத செம்மறிக் கூட்டமாய் மக்கள் ஓடினார்கள்.

எங்களால் சட்டென்று வன்னிக்கு ஓடமுடியாது போய் விட்டது. தங்கையைப் பொத்திப் பொத்திப் பாதுகாத்து விட்டு, எப்படி வன்னிக்கு அழைத்துச் செல்வது? தங்கையின் குட்டையாக வெட்டப்பட்ட முடியைக் கண்டாலே பிடித்துக் கொண்டு சென்றுவிடுவார்கள் என்பதுதான் உண்மை. இதனால் எங்கள் வன்னிப் பயனம் தாமதப்பட்டுக் கொண்டே வந்தது.

இராணுவம் தனது முன்னேற்றத்தை எதற்காகவும் நிறுத்திவிடாது என்பதைச் சாவச்சேரியின்மீது ‘செல்’ மழை தொடங்கியபோது புரிந்து கொண்டோம். சனங்கள் அதற்கு

மேல் தாமதியாது வன்னிக்கு அள்ளுப்பட்டுச் செல்லத் துவங்கினார்கள். அந்த அவசரத்திலும் அமளிதுமளியிலும் ஓடமுடியாது இருப்பதற்கு அம்மம்மாவும் ஒரு காரணமாய் அமைந்தார். நாங்கள் கொஞ்சத் தூரம் நடந்து சென்று ஏ9-ஐக் கடந்த போது அம்மம்மா தன்னால் இனி ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது என மறுத்துவிட்டார். நாங்கள் எல்லோரும் முதலில் திகைத்துப் போனோம். பின்பு வேறு வழியின்றி அங்கு திறந்த நிலையில் கைவிடப்பட்ட வீடொன்றில் தங்குவது என்று முடிவு செய்தோம். அதற்குமேல் நடப்பது நடக்கட்டும் என்று ஆண்டவனிடம் எங்கள் விதியை ஒப்படைத்து அந்த வீட்டிற்குள் புகுந்தோம்.

மாமி தான் ஒரு மேதை என்பதை அன்று எல்லோருக்கும் நிரூபித்து இருந்தார். வன்னி நோக்கி ஓடவேண்டும் என்றவுடன் எல்லாரும் சில துணிமணிகளை, நகைகளை எடுத்துக் கொண்டு புறப்பட்டார்கள். மாமி மட்டும் சாப்பாட்டை பெரிய பேஸினில் கொட்டித் தலையில் சுமந்து கொண்டு வந்து இருக்கிறா. அதை யாரும் அறியவில்லை.

அந்தக் கைவிடப்பட்ட வீட்டிற்குள் போய்ச் சரணடைந்த பின்பு எல்லோருக்கும் வயிற்றைக் கிண்டத் தொடங்கியது. மாமி அப்போழுது தனது பேஸினைத் திறந்து குழையல் போடத் துவங்கினார். பளபளக்கும் நகையும் பணமும் பசிக்கு உதவாது என்பதை அப்பொழுது பலர் புரிந்து கொண்டு மாமியின் சமயோசிதத்தைப் பாராட்டினார்கள்.

எல்லோரும் சுற்றி இருந்து உருண்டைகளைப் பெற்றுச் சாப்பிட்டோம். சாப்பிட்டபின்பு ஜீப்பில் சென்று கொண்டிருந்த புலிகளிடம் இராணுவம் எந்த இடம் வரைக்கும் வந்து இருக்கிறார்கள் என்று கேட்டபோது... அவர்கள் ஏ9-ஐக் கடந்து இன்னும் வரவில்லை என்கின்ற தகவல் எங்களுக்குக் கிடைத்தது. அதையடுத்து செல்லடியும் ஓய்ந்து போயிற்று. அந்தரத்தில் இழுபட்டு வந்த களைப்புத்தீர எல்லோரும் நித்திரை கொண்டார்கள். செல்லடி ஓய்ந்திருந்தாலும் அந்த நித்திரையால் வந்த குறட்டையொலி என் நித்திரையைக் குழப்பியது.

அந்தக் கைவிடப்பட்ட வீட்டின் ஹோலில் பெண்கள் எல்லோரும் படுத்திருந்தோம். முற்றத்தில் சீமேந்து போட்ட போட்டிக்கோவிலிலே ஆண்கள் படுத்திருந்தனர். அவர்களைத் தாண்டி பெரியதொரு மாமரம் சடைத்து நின்றது.

ஆண்களின் குறட்டையின் சத்தத்திலே எனக்கு வந்த அரைகுறை நித்திரையும் போய்விட்டது. அம்மாவும் நித்திரை யின்றி எழுந்திருந்தா. பின்பு நாங்கள் இருவரும் மெதுவாக கதைத்துக் கொண்டிருந்தோம். அப்படிக் கதைத்துக் கொண்டு இருக்கும்போது அந்த மாமரத்தில் முதலில் ஒரு மின்மினிப் பூச்சியைக் கண்டோம். பின்பு அது இரண்டு மூன்று என பல்கிப் பெருகிற்று. நாங்கள் பயத்தில் உறைந்து போய் இருந்தோம். எதுவும் இனி நடக்கலாம் என்பது புரிந்தது. எங்கள் உயிர் யாராலும் எப்போதும் பறிக்கப்படலாம் என்பது தெளிவாகிற்று. நீரில் இருந்து எடுக்கப்பட்ட மீன்களாக எங்கள் உயிருக்கு எந்தப் பாதுகாப்பும் இருக்கவில்லை. அபலைகளான நாங்கள் கடவுளை மட்டுமே நினைத்து வாழ்ந்த கணங்கள் அவை. அந்த மாமரங்களில் இருந்து சட சட எனச் சத்தம் கேட்டது. மாங்காய் விழும் சத்தங்களும்... கொம்புகள் முறியும் சத்தமும் வரவர அதிகரித்தது. நாங்கள் பயத்தில் நடுங்கினோம்.

மின்மினிப் பூச்சிகள் இயற்கையின் நுண்ணிய மின் குமிழ்கள். சிறுபிள்ளையாக இருக்கும்பொழுது கையில் வைத்து அழகுபார்த்த ஞாபகம் உண்டு. அதை பிற் காலத்தில் இராணுவத்திற்கும் பயன்படுத்தலாம் என்பதைப் போராளிகள் கண்டுபிடித்து வைத்திருந்தனர். மின்மினிப் பூச்சிகள் திடீரெனப் பெருகினால் போராளிகள் அங்கு மறைந்து இருக்கிறார்கள் என்றும் ஊகிக்கலாம். அன்றைய நிலைமை அப்படி இருக்கவில்லை. பெடியள் பாவிக்கும் அதே உத்தியை விரைவில் இராணுவமும் பாவிக்கத் தொடங்கி இருந்தது.

நாங்கள் பார்த்துக் கொண்டு இருக்கவே திடீரென கறுப்பாக இரண்டு உருவங்கள் அந்த மாமரத்தால் இறங்கி எங்களை நேக்கி வந்தன. பேயறைந்தது போன்ற அதிர்ச்சியில் உறைநிலை அடைந்திருந்தோம்.

அந்த இருவரும் கிட்ட வந்தபோதுதான் அவர்கள் புலிகளைப் போல இருப்பது தெரிந்தது. அவர்கள் எங்களுக்குத் தெரிந்த யாழ்பாணத்தமிழ் கதைக்காமல் சற்று வித்தியசமான தமிழ் கதைத்தார்கள். அது அவர்கள் இராணுவமாய் இருக்குமா என்கின்ற சந்தேகத்தை எங்களுக்கு உண்டு பண்ணியது.

அவர்கள் எங்களைப் பார்த்து இராணுவம் எந்தப் பக்கமாக வருகிறது எனக் கேட்டார்கள். அதற்கு நாங்கள் பயத்தில் மௌனம் சாதித்தோம். இராணுவமே மாறுவேஷத்தில் வந்து இராணுவம் எந்தப்பக்கம் வருகிறது என்று எங்களைக் கேட்டுவிட்டு, நாங்கள் எதும் உளறினால், புலியின் உள வாளிகள் என்று சுட்டுவிட்டுப் போய்விடுவார்களோவென எங்களுக்குப் பயமாக இருந்தது. எங்கள் பயமும் மௌன மும் அவர்களுக்கு நன்கு புரிந்திருக்க வேண்டும். மிகவும் அருகில் வந்து “இல்லையம்மா நாங்களும் புலிகள்தான். நீங்கள் எங்களைத் தாராளமாக நம்பலாம்” என மிகவும் அன்பாகக் கூறி எண்தகட்டையும், சயனெற் குப்பியையும் காட்டினார்கள். சயனெட் குப்பியைக் காட்டியமை எங்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

பின்பு அவர்கள் தாங்கள் மட்டக்களப்பில் இருந்து யாழ்ப்பாணத்திற்கு வந்து இருப்பதாகவும், அந்தப் பயணத்தின் போது தாங்கள் நீண்ட தூரம் நடந்து வந்ததாகவும், தங்களுக்குப் பசிப்பதாகவும், சாப்பிட ஏதாவது கிடைக்குமா எனவும் கேட்டார்கள். அவர்களைப் பார்க்க எனக்குப் பாரிதாப மாக இருந்தது. இப்படி வருவார்கள் என்று தெரிந்திருந் தால் எங்களது சாப்பாட்டையாவது மிச்சம் பிடித்து வைத்து இருந்திருக்கலாம். பசியோடு... திக்குத் தெரியாத ஒரு ஊரில்... திசை தெரியாத ஒரு பயணத்தில்... எனக்கு அவர்களை அதற்குமேல் பார்க்க முடியாது போய்விட்டது.

அம்மா அவர்களுக்கு அவசரமாகத் தேநீர் வைத்துக் கொடுத்தா. யார்பெற்ற பிள்ளைகளோ என்கின்ற தவிப்பு அவவிடம் இருந்தது. அவர்கள் அதற்கு தாங்கள் சொந்த அம்மாவின் கையால் தேநீர் குடிப்பதைப் போன்று இருப்பதாகக்

கூறி நெகிழ்ந்தார்கள். நான் அப்போது என்னைக் கட்டுப்படுத்த முடியாது அழுதேன். எனக்கு இரு அண்ணன்கள் இருந்து, அவர்கள் தாங்கள் சாவதற்காய் களத்திற்கு போகிறோம் எனக் கூறுவது போல இருந்தது.

நாங்கள் பின்பு அவர்களை இராணுவம் வரும் திசையில் செல்ல வேண்டாம் என்று மறித்தோம். அவர்கள் அதற்கு மறுத்து விட்டு "கட்டளையை நிறைவேற்றாது மறுதிசைக்குச் சென்றாலும் பிரச்சனையே" எனக் கூறியவண்ணம் விடை பெற்றுச் சென்றார்கள். அந்த நினைவுகள் என்றும் அழியாத ஓவியமாய் என் நெஞ்சில் பதிந்து கிடக்கிறன. அவர்கள் சென்ற சில கணத்தில் வேட்டுக்களின் ஓசை இரு பகுதி யிலும் இருந்து அதிர்ந்தன. பின்பு சிறிது நேரத்தில் அவை ஓய்ந்தன. அதைத் தொடர்ந்து பிக்கப், செயின்புளக் என்பன பெரும் சத்தத்தோடு எங்கள் வீட்டை நோக்கி வந்தன.

அவ்வளவு நேரமும் எனது தங்கை நித்திரை போலும். அவளது குரல் கேட்கவில்லை. தற்போது விழித்துக் கொண்டவள் போசாது இருந்திருக்கலாம். ஏற்கனவே பயத்தில் மருண்டு போய் இருப்பவர்களை மேலும் உருவேற்றினாள்.

"இவங்கள் போய்த் தேவையில்லாமல் தொடக்கீட்டாங் கள்... அவங்கள் செயின்புளக், றக், ஜீப்பில எல்லாத்தோடை யும் அள்ளுப்பட்டு வாறான்கள். அப்பிடி வறாவங்கள் செயின் புளக்காலை வீட்டோட வைச்சு எங்களை நசிக்கப் போறாங்கள். எல்லாரும் கண்ண மூடிக் கொண்டு குப்புற படுத்துக் கடவுள வேண்டுங்கோ. இனி மனிசராப் பிறக்காமல் சொர்க்கத்திலேயே நிரந்தரமா வாழ்வு தரச்சொல்லிக் கேளுங்கோ. அதுவும் உந்தக் கல்லுக் கடவுளுக்கு விளங்குமோ தெரியாது" என்று கூறியவள் தானும் வேகமாகக் குப்புறப்படுத்துக் கொண்டாள். அத்தை, அம்மா போன்றவர்கள் உலகத்தில் உள்ள எல்லாக் கடவுளுக்கும் நேர்த்தி வைப்பதில் மூச்சுவிடாது ஈடுபட்டார்கள் எத்தனைபேர் நேர்த்திக் கடன் வைத்திருப்பார்கள்? கடவுளுக்கு தான் ஈழத்து தமிழரைப் பற்றி நினைப்பதற்கு நேரம் கிடைக்கவில்லைப்போலே தோன்றியது.

வேகமாக வந்த நான்கு செயின்புளக்குகள் முன்வளவு வரையும் வந்து உள்ள பனைகளை எல்லாம் முறித்து தள்ளிவிட்டு மூச்சு விட்டது. அடுத்தது எங்கள் வீடுதான் என்கின்ற கிலியில் நாங்கள் கடைசி மூச்சுக்களோடு போராடிக் கொண்டிருந்தபோது எதிர்பாரதவிதமாக அவை திரும்பிச் சென்றன. சிலவேளை இன்னும் உலகத்தில் கடவுள் இருக்கிறார் என்று நம்பவேண்டும் என அப்போது எனக்குத் தோன்றியது.

எங்களுக்கு இருந்த கிலியை உச்சத்துக்கு ஏற்றிய தங்கை அப்போது அமைதியாகத் தூங்கிக் கொண்டியிருந்தாள். என்னால் அப்படி நடப்பது நடக்கட்டும் என்று தூங்க முடியவில்லை.

அடுத்தநாள் விடிந்தது. நாங்கள் உயிர் வாழ்கிறோம் என்பது உண்மையாயிற்று. காலைக்கடனை கழிக்கச் சென்றவர்களுக்கு பேரதிர்ச்சி காத்திருந்தது. சிறிது தூரத்தில் அந்த இரு விடுதலைப் புலிகளின் நிர்வான உடல்கள் ஆகாயவைத்துப் பார்த்து வெறித்துக் கொண்டு கிடந்தன. அந்த உடல்களைக் கண்டவர்கள் பயத்தோடு காவோலையால் மூடிவிட்டு விரைவாக அவ்விடத்தை விட்டு நகர்ந்தார்கள். இராணுவம் காவோலையால் மூடுவதைப் பார்த்துவிடக்கூடாது என்பது அவர்கள் பரிதவிப்பாகியது.

பின்பு எல்லோரும் கிளாலியை நோக்கிப் புறப்பட்டுச் செல்லத் துவங்கினார்கள். அப்போது கிளாலிப்பக்கம் இருந்து திரும்பி வந்தவர்கள் கிளாலியில் செல் அடிப்பதாகக் கூறினார்கள். அத்தோடு கெலியாலும் சுடுவதாகவும், அதைவிட மண்டதீவில் இருந்து செல் அடிப்பதாகவும் கூறினார்கள். கிளாலியில் சனங்கள் கடலிலும் தரையிலும் செத்துக் கொண்டிருக்கிறார்கள் என்கின்ற உண்மையைக் கூறிய அவர்கள் அங்கு போவதிலும் இங்கு எங்காவது பொது இடத்தில் இருப்போம் எனவும், அதற்கு மேல் நடப்பது

நடக்கட்டும் என்று கூறிக் கொண்டார்கள். அதையடுத்து எல்லோரும் திரும்பி மடத்தடிப் பிள்ளையார் கோவிலை நோக்கிச் சென்றனர். அங்கு இராணுவத்தினர் ஏற்கனவே பலரைக் கைது செய்ததாக இடையிலேயே சிலர் கூறினார்கள். என்ன செய்வது என்பது புரியாது மக்கள் தொடர்ந்தும் செல்ல, இராணுவத்தினர் தங்களது கட்டுப்பாட்டிற்குள் உள்ள வீடுகளுக்குப் போகுமாறும் பணித்தனர். அதுவே எங்களுக்குப் பாதுகாப்பபெனவும் கிளாலிப்பக்கம் செல்வது ஆபத்து எனவும் கூறிய இராணுவத்தினர் எங்களைத் தங்களது கட்டுப்பாட்டுப் பகுதிக்குள் அனுப்பி வைத்தனர்.

வீட்டைவிட்டு ஓடத் தொடங்கி இரண்டு கிழமையில் மீண்டும் நாங்கள் உயிரோடு சாவகச்சேரி வீட்டிற்கு வந்து சேர்ந்தோம். எங்கள் கோலங்கள் பிச்சைக்காரரை விடக் கேவலமாக இருந்தாலும் உயிர்கள் மாத்திரம் மிச்சமாக இருந்தன. இராணுவக்கட்டுப்பாட்டில் வாழ்க்கை ஓடத் தொடங்கியது. தங்கைக்குப் பிரச்சினை வராதிருந்தால் அத்தோடு நாமும் நம்பாடும் என்று வாழ்ந்திருந்தால், எங்கள் காலம் யாழ்ப்பாணத்தில் சுமூகமாய்ப் போய் இருக்கும். அது சுதந்திரமான வாழ்க்கையா? அடிமையான வாழ்கையா என்கிற தத்துவம் பற்றி எங்களுக்கு அக்கறை இருக்கவில்லை. எங்கள் முதல் நோக்கம் மானத்தோடு உயிர்வாழுதல் மட்டுமே. இராணு-வக் கட்டுப்பாட்டில் இருந்து கொண்டு சுதந்திரம்... தனிநாடு... என்கின்ற கனவில் மிதக்க எங்களால் முடியாது. ஆத்மார்த்த உணர்வு நாங்கள் அடிமை என்றாலும் உயிர்வாழும் ஆசை அதையும் மிஞ்சி நின்றது. ஆயுதத்திற்கு முன்பு கையைத் தூக்குவதுதான் ஒரேவழி. கையைத் தூக்கியபின்பு அவர்கள் தயவை நாடுவதுதான் அடுத்த வழி. சுதந்திரக் கனவு எங்கள் அடிமனதில் அடைந்து கிடக்கிறது. மானத்தோடு அமைதியாக வாழவேண்டும் என்பது அதையும் முந்தி நிற்கும் அன்றாடத் தேவையாகிறது.

கெடுபிடிகள் ஓய்ந்தன. நாங்கள் யாழ்ப்பாணத்தில் குடியேறி வேம்படியில் படிப்பைத் தொடர்ந்தோம். நாற்பதாயிரம் இராணுவத்தால் பாதுகாக்கப்படும் யாழ்ப்பாணத்தில் இனி பிரச்சனை வராது என்கின்ற ஒரு நப்பாசையில் ஒட்டிக்கொண்டு வாழ்ந்தோம்.

## 27

புலிகளோடு பிரச்சினைப்பட்ட பின்பு அவசரமாக நாங்கள் யாழ்ப்பாணம் சென்றோம். எங்கள் வீட்டுக்கு அருகில் இருந்த இராணுவத்தோடு அவன் சிங்களத்தில் பாலும் தேனும் ஒழுகக் கதைத்ததில் அவர்கள் மெழுகாக உருகிப் போனார்கள். அந்த உருக்கம் அவனை அங்கு இராணுவத்தில் இருந்த 53 ஆவது டிவிசன் பொறுப்பாளரோடு பழக்கமாக்கியது. அந்த உறவு வலுத்து முறுக்கேறிற்று. பின்பு கொழும்புக்கு வந்ததும் அவனது வீட்டுக்குத் தொலைபேசிமூலம் தொடர்புகொண்டான். பின்பு அவரது வீட்டிற்குச் சென்று கதைத்துக் கதைத்து தனது பாதுகாப்பைப் பலப்படுத்தும் செயலில் ஈடுபட்டான்.

கொழும்பு திரும்பி வந்ததும் தனது தமிழ்பற்று வேஷத்தை அடியோடு மாற்றிக் கொண்டான். புலிகளை அவதூறு செய்வதில் முக்கிய கவனம் செலுத்தினான்.

ஒரு நாள் திடீரென இரண்டு ஆள்கள் வீட்டிற்கு வந்து அவனை விசாரித்தார்கள். நான் அதற்கு அவர் வெளியில் போய் விட்டார் என்கின்ற உண்மையைக் கூறினேன். அவர்கள் தேடிவருவார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

சிலநாள்களின் பின்பு அவன் தாய் வீட்டிற்கு மோட்டார் சைக்கிளில் சென்ற போது இருவர் அவனைப் பின்னால் வேறு ஒரு மோட்டோர் சைக்கிளில் கலைத்துக் கொண்டு சென்று இருக்கிறார்கள். அவன் புத்திசாலித்தனமாக வேறு ஒரு சிங்கள வீட்டிற்குள் மோட்டார் சைக்கிளை விட்டுவிட்டு அவர்களோடு கதைக்கத் தொடங்கி இருக்கிறான். கலைத்து வந்தவர்கள் எதுவும் செய்ய முடியாது திரும்பிப் போய்விட்டார்கள்.

பின்பு மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு தப்பினேன் பிழைத்தேன் எனத் திரும்பியிருக்கிறான்.

அப்படி வந்தவன் வீட்டில் நிற்கப் பயந்து தாய் வீட்டிற்க்குச் சென்றான். அங்கும் அவனுக்கு நம்பிக்கை இல்லாது போக, இராணுவத்துடன் கதைத்து நடந்த விடயத்தைக்கூறி இருக்கிறான். அவர்கள் யாழ்ப்பாணத்தில் வந்து இருக்குமாறும், தாங்கள் அதற்கு வீடொன்று தயார் செய்து தருவதாகவும் கூறி இருக்கிறார்கள். அவன் என்னையும் இழுத்துக் கொண்டு மீண்டும் யாழ்பாணம் புறப்பட்டான்.

யாழ்பாணத்தில் அம்மாவோடும் அவனோடும் நான் அல்லாடத் தொடங்கியபோது சமாதானம் முறிந்து மீண்டும் போர் துவங்கியது.

அவன் கப்பல் பயணத்துக்குப் பதிந்து மீண்டும் என்னையும் இழுத்துக் கொண்டு கொழும்பிற்கு வந்து சேர்ந்தான்.

கொழும்பிற்கு வந்தபின்பு புலிகளுடன் இருந்த தொடர் பினால் அவர்களின் பயம் அவனுக்குப் போய்விட வேறு பராக்குத் தேடித் திரிந்தான்.

அப்பொழுதுதான் அவனுக்கு இயற்கையாகவே இருந்த திறமை புரிந்திருக்க வேண்டும். அது புரிந்தவுடன் அவன் செயலில் ஈடுபடத் தொடங்கினான். தமிழ்த் திரைப்பட நடிகை ஒருத்திக்கு தொலைபேசி செய்து கதைத்தான். இந்தியாவில் நடிப்பதற்கு ஆள்களா இல்லை? அவனை யாரும் ஆராத்தி வைத்தும் அழைக்கவும் இல்லை. சிறிது காலத்தில் சக்தி ரீவியிலே தனது முகத்தைக் காட்ட அலைந்து திரிந்தான். அங்கும் அவனது முகத்திரை விரைவில் கிழிந்துவிட்டது.

தனது பாதுகாப்புக்காக இராணுவத்தைப் பாவித்துக் கொண்டு வந்தவன், இனி அவர்கள் தேவையில்லை என்றவுடன் அவர்களுடனான தொடர்பைத் துண்டித்துக் கொண்டான்.

அன்று அவனது பெற்றோர் எங்கள் வீட்டிற்கு வந்திருந்தார்கள். நான் வழமைபோல உபசரிக்க வேண்டி

இருந்தது. தந்தைக்கே அடிக்கப் போவது அவன் வழக்கம். பெற்ற தகப்பனுக்கு கொடுக்கும் மரியாதை மிகவும் மட்டமாக இருக்கும். ஆனால் எங்கள் வீட்டிற்கு அவர்கள் வரும்போது என் முன்பு அதீதமான நடிப்பு அரங்கேறும். நான் இந்த நாடகங்களை அறிந்து இருந்தாலும் எதையும் அறியாதவாள் போல் என் காரியங்களைப் பார்ப்பேன். முதலில் பெரிய கொண்டாட்டமாய் நான் சமைத்துப் போடச் சாப்பிட்டார்கள். பின்பு எப்படியோ தெரியாது அவனுக்கு விசர் துவங்கிவிட்டது. அவன் அவர்களை நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகுமளவிற்குப் பேசத் தொடங்கினான். சண்டை சிறிது சிறிதாக வலுத்து, கொலை காரர்கள் போலச் சண்டை பிடித்தார்கள். எனக்கு பயமாகவும் அருவருப்பாயும் இருந்தது. மகள் பயத்தில் ஓடிப்போய் எங்கயோ ஒளிந்து கொண்டாள். கடைசியாகப் பெற்றோர் கோபித்துக் கொண்டு சென்றுவிட்டார்கள். அவன் அவர்கள் போன பின்பும் அவர்களைத் தரக் குறைவாகப் பேசிக் கொண்டிருந்தான். நான் எதுவும் போசவில்லை. பேசினா-லோ, பேசாவிட்டாலோ அடி விழலாம். அது எப்பொழுது விழும் என்பது தெரியாத நிலையில் திகிலாக இருக்க அதைப்பற்றியே யோசித்தேன். அப்பொழுது எனக்குள் திடீரென வேறு ஓர் எண்ணம் வந்தது. இனி ஒருகணம்கூட இவனோடு இருக்ககூடாது என்கின்ற முடிவுக்கு நான் அன்று வந்தேன். என்ன நடந்தாலும் இந்த வீட்டை விட்டுப் புறப்பட வேண்டும் என்று நான் திடமாக முடிவு செய்து கொண்டேன்.

அதற்கு இடையில் அம்மா யாழ்ப்பாணத்திலிருந்து கொழும்புக்கு ஒருமுறை வந்து இருந்தா. அவனுக்குப் பணி விடை செய்வதிலேயே என்னுடைய காலம் கழிந்துவிடும். அதுவும் அம்மா வந்திருந்தால் அவன் வேலை வாங்க என்னை விரட்டுவது இன்னும் அதிகமாகும் அம்மாவேடு நான் கதைத்து ஏதாவது திட்டம் போடலாம் என்கின்ற சந்தேகத்தில் அவன் அலைந்தான். மகளுக்கு அந்தக் கட்டுப்பாடுகள் இல்லை. அவள் அம்மம்மாவோடே எப்பொழுதும் இருப்பாள். அப்படி தனித்து இருக்கும்பொழுது “அம்மம்மா எங்களை உ_ங்களோடு கூட்டிக்கொண்டு போங்க. பிளீஸ் அம்மம்மா” என்று கூறிக் கட்டிப்பிடித்து அழுது இருக்கிறாள். அதில

இருந்து அம்மாவுக்கு மகள் வாழமுடியாத நரகத்தில் வாழ்கிறாள் என்பதும், பிஞ்சு ஒன்று வீணே கருகுகிறது என்கின்ற உண்மையும் புரிந்தது. தனித்து அலையும் தன்னால் என்ன செய்ய முடியும் என்பது புரியாத மனவுளைச்சலோடு அம்முறை ஊருக்குப் புறப்பட்டு யாழ்ப்பாணம் சென்றபோதிலும் பேத்தியின் குமுறல் அவவை அதிகமாக வாட்டத் தொடங்கியது.

அன்று அவனால் எனக்கு காவலுக்கு நிற்க முடிய வில்லை. நான் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி அம்மாவுடன் தொலைபேசியில் கதைத்தேன். என்னால் சில கணங்கள் எப்படி அதை அம்மாவிடம் விபரிப்பது என்பது புரியவில்லை. பின்பு கண்ணீரை கட்டுப்படுத்திச் சொற்களைத் தொண்டைக்குழியில் இருந்து பிடுங்கி எடுத்து வசனங்கள் அமைத்தேன். நான் உருவாக்கிய வசனங்கள் மறுகரையில் பெரும் அதிர்வுகளை உண்டுபண்ணும் என்பது எனக்குத் தெரியும். அம்மாவிற்கு ஏற்கனவே பலவிடயங்கள் தெரிந்தாலும் இத்தோடு அவனுடனான திருமண பந்தமே முடிவுக்கு வரும் என்று எதிர்பார்த்து இருக்க மாட்டா. அது இன்று திடீரென்று முன்னே வந்து நின்றது அவவை அதிர்ச்சிக்குள் தள்ளிவிட்டது. கவலையில் குரல் உடைந்து கனதியாக வந்தது. மறுமுனை யில் அம்மா அழுவது எனக்குப் புரிந்தது. நான் போனை வைத்தபின்பு நீண்ட நேரம் அழுதுகொண்டு இருந்தேன். அழுது முடிந்தபொழுது, ஏன் இனி அழவேண்டும் என்கின்ற கேள்வி என்னை எட்டி உதைத்தது. நான் சற்றே தெளிவடைந்திருந்தேன்.

## 28

**அ**ன்று தமிழன்பனோடு கதைத்துக் கொண்டிருந்ததில் நேரம் வேகமெடுத்துப் பறந்தது. அதிக நேரமாகத் தேநீர்கூடக் கொடுக்கமல் கதைத்துக் கொண்டு இருந்தமை சட்டெனப்

புரிய, பதறியடித்து தேநீர் போட்டுக் கொடுத்தேன். தேநீர் அருந்திய பின்னர் ஆறுமணிபோல் போக எழுந்தான். எனக்கு அவனை இன்னும் கொஞ்சம் இருந்து போகச்சொல்ல வேண்டும்போல் இருந்தது. அப்படிச் சொல்வது என்னையே நான் காட்டிக் கொடுப்பதாகும் என்கின்ற பயம் என்னைத் தடுத்தது. அவன் மனம் இல்லாதவன்போல் எழுந்து சென்றான். அவனைத் தடுப்பதற்கு பெண்மை என்னைப் பின்னால் நின்று இழுத்தது. அவன் கேற்றைத் தாண்டிய பின்பு திரும்பிக் கைகாட்டிவிட்டுச் சென்றான். எதுவுமே செய்ய முடியாத ஏலாமை ஒரு பெருமூச்சாக மட்டுமே வெளிவந்தது.

அவன் போனபின்பு சிறிதுநேரம் வீட்டில் நிலவிய கலகலப்பை யாரோ திருடிச் சென்றது போன்றிருந்தது. பேருந்தில் கண்டவுடன் வெறுப்பதாகக் கூத்தாடிய நானா அவன் பிரிவை உணர்வது என்பது எனக்கு வியப்பாக இருந்தது. சலனம் இல்லாது இருந்த மனதை அவன் சிரிப்பு சலனப்படுத்தி விட்டது. அதைவிடத் தனது கௌரவத்தைப் பாராட்டாது வீடுதேடி வந்துவிட்டுப்போகிறான் என்பது இனிய கற்பனையை வளர்த்தது. இது நட்பாகவே இருக்க வேண்டும் என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டேன். அதுதான் எல்லாருக்கும் நலமாக அமையும். அதைமீறிப் போய்ச் சமுதாயத்திற்குப் பதில் சொல்லும் துணிவு எனக்கு இல்லை.

அவன் என்ன கொண்டு வந்தான்... என்ன கொண்டு சென்றான் என்பதைக் கவனிக்கவில்லை. அவர் கொண்டுவந்த அந்தக் குட்டி கனோன் கமரா தொலைக்காட்சிப் பெட்டிக்குப் பக்கத்தில் இருப்பதைக் கண்டபோழுது இன்னும் ஒருமுறை தமிழன்பன் வரவேண்டி வரும் என்பது புரிந்தது. அவன் உடனடியாகத் திரும்பி வரவில்லை. நான் இரவுச் சாப்பாட்டை தயார் செய்யத் துவங்கியதும், என் மனம் பழைய நினைவுகளை அசைபோடத் தொடங்கியது.

அன்று சமைத்து முடித்துவிட்டுக் குளித்தேன். வீட்டில் யாரும் இல்லை. அணிலின் சத்தமும் காகத்தின் கரைதலும்

வளவிற்குள் இருக்கும் வாழை மரங்களில் இருந்து வந்தன. இந்த யாழ்மண் அக்கினிக்களம் கண்டு தற்பொழுது மௌனமாக இருக்கிறது. இந்த மௌனமாவது நீடித்து விட வேண்டும் என்பதாக மனது அடித்துக் கொள்ளுகிறது. அணில், குயில், காகம் எனத் தென்றலோடு சேர்ந்து இயற்கை கொஞ்சுவது தனியழகைத் தருகிறது. இந்த அழகை எல்லாம் என்னால் இரசிக்க முடிந்தாலும் பொருத்தமாக எழுத்தில் என்னால் வடிக்க முடிவதில்லை. அது அவனால் முடிகிறது. எனது சிந்தனை என்னிடம் கேளாது தமிழன்பனிடம் சென்றது. அன்று கடைசியாகச் சிரித்துக் கொண்டு சென்ற அவனின் முகம் இன்னும் ஞாபகம் இருக்கிறது. அவனது குட்டிக் கமராவை இடையிடையே எடுத்துத் தடவிப் பார்க்கும் போது ஏதோ ஒருவகை இன்பம் மின்சாரமாகக் கையில் ஏறுகிறது. தமிழன்பன் ஏன் தொலைபேசியில் அழைக்கவும் இல்லை... அந்த கமராவை எடுக்க வரவுமில்லை என்பதும் மட்டும் புரியவில்லை. நான் என்றாலும் தொலைபேசி எடுத்துச் சொல்வதுதான் முறை என திடீரென ஓர் எண்ணம் எழுந்தது. தொலைபேசியை எடுத்து அவனது எண்களை அழுத்தினேன்.

“ஹலோ” மறுமுனை உயிர் பெற்றுக் கொண்டது.

“நான் குமுதினி.”

“சொல்லத் தேவையில்லை உங்கள் குரல் எனக்கு மறக்கமுடியாத ஒரு கவிதை.”

“ஐயோ உந்தப் புகழ்ச்சிய தாங்கிற வலிமை எனக்கு இல்ல. அது சரி! கமராவை மறந்தே போயிட்டியள் போல இருக்குது.”

“கமராவை மறந்தாலும் கமரா வைச்சிருக்கிற ஆள மறக்க இல்ல. அதாலா அந்த ஆளைப்பாக்க வந்து கொண்டிருக்கிறன்.”

“உண்மையாவா? “

"அப்ப பொய்க்கு வாறன் எண்டு சொல்லுவனா?"

"சரி சரி வாங்க... நான் வெயிற் பண்ணுறன்..."

நான் தன்னிச்சையாக ஓடிச் சென்று சிறிது ஒப்பனை செய்து கொண்டேன். உள்ளங்கை ஏதோ குளிராக வியர்த்தது. நெஞ்சக்கூட்டிற்குள் இதயம் இடியாக முழங்கித் தள்ளியது. இடைக்கிடையே வயிற்றுக்குள் வண்ணத்துப் பூச்சிகள் பறந்தன. எனக்குப் புரியவில்லை. ஆயிரமாயிரம் ஆண்களைக் காண்கிறோம். அப்போதெல்லாம் மனதில் எந்தச் சஞ்சலமும் இருந்தது கிடையாது. தமிழன்பன் வருகிறான் என்றவுடன் எனக்கு ஏன் இவ்வளவு பரபரப்பு வரவேண்டும் என்பது புரியவில்லை. நான் அவனுக்காக அதிக நேரம் காத்திருக்கத் தேவையில்லாது படலையில் ஓட்டோ வந்து நின்றது. அதே சிரிப்போடு தமிழன்பன் ஓட்டோவில் இருந்து இறங்கி வந்தான். ஓடிப்போய் அணைத்துக் கொள்ள வேண்டும் போல் இருந்தது. பெண் என்ற யாழ்ப்பாண வரைமுறை என் காலை அடித்துப் பின்வாங்கச் செய்தது.

"வாங்க."

"நீங்கள் சொல்லாட்டியும் நான் உள்ளுக்கு வருவனே."

"ஓ அப்பிடியா? அவ்வளவு உரிமை எடுத்திட்டியளா."

"என் எடுக்க கூடாதா?"

"உண்மையச் சொல்லட்டுமா?"

"சொல்லுங்க."

"எடுக்காமல் இருந்திருந்தாத்தான் கவலையா இருந்திருக்கும். இப்ப உண்மையாவே ஏனோ சந்தோஷமாய் இருக்குது."

"சாப்பிடுங்க. எங்கட வீட்டில சாப்பிடுவீங்கதானே?"

"உங்களிட்ட சாப்பாடு தாராளமாய் இருந்தா நான் சாப்பிட றெடி. எனக்கு எல்லாமே செமிக்கும். எந்தவீட்டில சாப்பிட்டாலும் செமிக்கும்"

“எங்களிட்ட சாப்பாடு தாராளமாய் இருக்கு. ஒரு நிமிஷம் இருங்க.”

“குமுதினி இப்ப வேண்டாம். ஏதாவது குடிச்சிட்டு கொஞ்ச நேரம் செல்லச் சாப்பிடுகிறன். “

“சரி அப்ப தேநீர் போட்டாறன்.”

முதலில் ரீ குடித்தான். இருவரும் நேரம் போவது தெரியாது கதைத்துக் கொண்டு இருந்தோம். பின்பு சாப்பிட்டான். சாப்பிட்ட பின்பு வீட்டிற்கு பின்பக்கமாக கிணற்றடியில் கைகழுவத் தண்ணி ஆள்ளி ஊற்றும்பொழுது...

என்னைப் பார்த்து “பிடிச்சிருக்குது” என்றான். எனக்குப் புரிந்தும் புரியாததும் போல இருந்தது. உடல் சாதுவாய் நடுங்கியது. மனது அந்தரத்தில் இறக்கைகட்டிப் பறந்தது. இந்தக் கணமே இதயம் நின்றுவிட வேண்டும் போல ஆசை எழுந்தது.

நான் மீண்டும் உலகிற்கு வந்து புரியாதவள் போல, “என்ன சாப்பாடா?” என்று கேட்டேன்.

“இல்ல; எல்லாம்.” அவன் கண் உணர்ச்சியில் கலங்கி இருந்தது. எதுக்காக அவன் இப்போழுது கலங்க வேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை. எல்லாம் என்றால் என்ன என்று கேட்க வேண்டும் போலவும் இருந்தது.

“எல்லாம் என்றால்?” கேட்டேவிட்டேன்.

“உம்ம... உம்மட சாப்பாட்டை.”

“ம்”- என்னால் முனகத்தான் முடிந்தது. அதற்குமேல் என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை.

கையைத் துவாயில் துடைத்தவண்ணம், “எனக்கு உங்களப் பிடிச்சதுக்காய் உங்களுக்கு என்னை பிடிக்கோணும் எண்டு கட்டாயம் இல்லை. என்னுடைய ஃபீலிங்கைச் சொன்னன். சொன்னது தப்பு எண்டா சொறி.”

என்னை ஆழம் பாக்கிறானா? என்ன சொல்லுவது? சில கணம் குழப்பமாக இருந்தது. உண்மையைச் சொல்ல வேண்டும் என்பதே எனது விருப்பமாயும் இருந்தது.

"அப்பிடியில்ல. எனக்கும் உங்கள பிடிச்சு இருக்குது. ஆனா இது காலம் கடந்த முயற்சி எண்டு நினைக்கிறன்..."

"அன்புக்கு காலம் இருக்குதா என்ன? பார்ப்பம் எப்பிடிப் போகுதெண்டு."

"ம்... உங்களோட கதைக்க அடிக்கடி சந்தர்ப்பம் கிடைக்கிறதே பாக்கியம்தான்."

அதன்பின்பு ஹோலில் இருந்து எல்லோருடனும் கதைத்துவிட்டு அவன் விடை பெற்றுச் சென்றான்.

அவன் சில நாள்களில் இலங்கையிலிருந்து போய் விடுவான் என்கின்ற தகவல் மாத்திரம் என்னை வாட்டி யெடுத்தது. அதன் பின்பு என்னுடன் எல்லாம் மினக்கெட்டு கதைக்க மாட்டன் என்பது புரிந்தபோது நெஞ்சு வலித்தது. அந்த வலியோடு படுக்கையில் வீழ்ந்த எனக்கு நித்திரை வரவில்லை. பழைய நினைவுகள் நிரையாக வந்து என்னை ஏறி மிதித்தன.

## 29

**அ**ம்மம்மா நல்லதொரு மதியத்தூக்கத்தை கண்மூடிச் சுகித்தா. அப்படியான ஒரு சயனத்திற்கூட கண்கள் மூடியிருக்க அம்மம்மாவின் வாய்மட்டும் பேசும். கண்மூடியிருக்க வாய் பேசுவதுபற்றி இதுவரை எவரும் அவவிடம் குறைபட்டுக் கொண்டது கிடையாது. அது இப்படி ஒரு பெரும் பிரச்சினையில் தன்னையும் பேத்தியையும் மாட்டும் என்று தெரிந்து இருந்தால் கண்ணைத் திறந்து யார்ரென்று பார்த்துவிட்டு அம்மம்மா கதைத்து இருப்பா. தனது பேச்சுக்கள் பெருமை பேசுபவையே தவிரப் பேரிடியாகும் என்கின்ற அச்சம் அவவிடம் ஒருபோதும் இருந்தது இல்லை.

சிவில் உடையில் வந்த சிஐடி ஹோலிற்குள் வந்து அம்மம்மாவின் கால்மாட்டில் பவ்வியமாக நின்று கொண்டான். அம்மம்மாவுக்கு யாரோ வருவது தெரிந்து இருந்தாலும் கண்ணைத் திறக்க வேண்டும் என்கிற விருப்பம் இருக்க வில்லை. வந்த அதிகாரி மிகவும் பணிவாக அம்மா... அம்மா... எனக் கூப்பிட்டான். அம்மம்மா கண்ணை மூடியவண்ணம் குரலை மட்டும் கேட்டுக் கொண்டா. அதன்மூலம் தனக்கு கதைப்பதற்கு ஆள்கிடைத்ததில் அவ பூரித்துப் போய்விட்டா. குரலுக்குரியவனைப் பார்க்க மறந்து அம்மம்மா அவனோடு சம்பாஷணையில் ஈடுபட்டா.

அவன் தங்கையின் பெயரைச் சொல்லி அவள் எங்கே என்று கேட்டு இருக்கிறான். அம்மம்மா கண்ணை மூடியவண்ணம் தங்கையின் நண்பர்கள் யாரோ தான் கேட்கிறார்கள் என்கின்ற எண்ணத்தில் வேம்படிக்கு போய்விட்டாள் என்பதை கூறிப் பெருமைப்பட்டு இருக்கிறா. வேம்படியில் பேத்திகள் படிக்கிறார்கள் எனபதைச் சொல்வதில் உள்ள அலாதியான பெருமையை அவவால் எப்போதும் விட்டுவிட முடிவதில்லை.

வந்தவன் தனது அலுவல் முடிந்தும் திரும்பிச் சென்றான். அப்பொழுது இராணுவப் பயிற்சி எடுத்தவர்கள் நடக்கும்போது உண்டாகும் லெப் றைற் என்கின்ற விதமான சப்பாத்து ஒலிகேட்டு நெஞ்சு திடுக்கிட அம்மம்மா எழுந்து கொண்டா. அதன்பின்புதான் தன்னுடன் கதைத்தவன் யார் என்று அம்மம்மா பார்த்தா. அவன் சிவிலில் வந்த இராணுவத்தைச் சார்ந்தவன் என்பதை கண்டபோது அம்மம்மா பதைத்துப் போய்விட்டா. உடனடியாக அம்மாவிடம் ஓட்டமும் நடையுமாகச் சென்ற அம்மம்மா, என்ன நடந்தது என்பதை அம்மாவிடம் சொல்லி இருக்கிறா. அதன் பின்பு இருவரு மாகப் பதற்றத்தோடு சென்று முன்வீட்டுக்காரர்களோடு கதைத்து இருக்கிறார்கள். அப்பொழுது அவர்கள் அறிந்த புதினங்கள் இருவரையும் பெரும் கிலி கொள்ள வைத்தது.

இயக்கத்தை விட்டு வெளியே வந்தவர்களின் நிலைமை இருதலைக் கொள்ளி எறும்பாகவே இருப்பது உண்டு.

இயக்கத்தை விட்டு ஏன் விலகினாய் எனப் புலிகள் துரத்த, இயக்கத்தில் இருந்துவிட்டு எதற்காக வந்தான் என்கின்ற சந்தேகத்தோடு இலங்கைப் புலனாய்வுப்படை துரத்தும். அதைவிட மற்ற இயக்கங்களும் வேட்டையாட ஆக்ரோஷமாய்த் திரியும்.

எங்கள் பகுதியைச் சார்ந்த ஒருவன் புலி இயக்கத்திலிருந்து தப்பி வந்து விட்டான். அவனை இலங்கைப் புலனாய்வுப் பிரிவினர் பிடித்து வைத்திருந்தனர். இலங்கைப் புலனாய்வுப் பிரிவிடம் அகப்பட்டால் என்ன நடக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அவர்கள் அவனைச் சித்திரவதை செய்து மற்றவர்களைக் காட்டிக் கொடுக்குமாறு நிர்பந்தித்திருக்கிறார்கள். ஆயிரம் நரகங் களை ஒரே கணத்தில் அநுபவிக்கும் வேதனையில் அவன் காட்டிக் கொடுக்கத் தொடங்கி இருந்தான். அதை வைத்து முதலில் அயலில் இருந்த ஒரு மாஜி புலி உறுப்பினரைக் கைது செய்து விட்டார்கள். அடுத்த வேட்டைக்காக எங்கள் வீட்டிற்கு புறப்பட்டு வந்திருக்கிறார்கள். தங்கையின் அதிர்ஷ்டம் அவள் அப்பொழுது வீட்டில் இருக்கவில்லை. எங்கள் வாழ்க்கையில் ஆயிரம் முறை கற்பை நிரூபிக்கும் தீக்குளிப்புகள் தொடர்ந்துள்ளன.

அவர்கள் தங்கையை விட்டுவிடுவதாய் இல்லை. வீட்டில் பிடிபடாத ஏமாற்றத்தில் பாடசாலையில் பிடித்துவிட வேண்டும் என்கின்ற அவசரத்தில் அவர்கள் வேம்படிக்கு விரைந்தார்கள்.

பாடசாலைக்குச் சென்றவர்கள் அதிபரிடம் வகுப்பறைக்குச் செல்வதற்கு அனுமதி கேட்டிருக்கிறார்கள். அவர் அதீத துணிச்சலோடு எதுவென்றாலும் பாடசாலைக்கு வெளியே வைத்தே செய்யலாம என்பதை வலியுறுத்தி, வகுப்பறைக்குச் செல்ல அனுமதி மறுத்து விட்டார். அவர்கள் ஒன்றும் செய்ய முடியாது வெளியே சென்று வாசலில் காருடன் காத்திருக்கத் தொடங்கினார்கள்.

அம்மா என் பிரத்தியேக வகுப்புக்கு வந்து என்னை அவசரமாக அழைத்து வந்தா. பின்பு அதே அவசரத்தோடு அயல் வீட்டாரையும் கூட்டிக் கொண்டு, சைக்கிளில் வேம்படிக்கு விரைந்தோம். அப்போது அங்கே காருடன் பாடசாலைவாசலில் புலனாய்வுப் பிரிவினர் நின்று கொண்டிருந்தனர். அவர்களோடு நின்று காட்டிக்கொடுத்த மாஜிப் புலி உறுப்பினரின் முகம் வீங்கி, சொண்டு வெடித்து, இரத்தம் காய்ந்துபோய் பட்டை கிளம்பிக்கிடந்தது. முடிவில்லாது மனித வேட்டையாடும் நாடு இது எனத் தோன்றியது. ஒருவரிடம் தப்பினாலும் மற்றவரிடம் தப்ப முடியாத இக்கட்டான நிலைமையில் எங்கள் வாழ்கை அல்லாடியது. அந்த மாஜிப் புலியைப் பார்க்கப் பரிதாபமாய் இருந்தாலும், முதுகெலும்பு இல்லாது பெண் போராளிகளையும் காட்டிக் கொடுத்ததைச் சகிக்க முடிய வில்லை. அந்தப் பெண் போராளிகளின் வாழ்வை நாசம் செய்யும் அவன்மேல் இரக்கத்திற்குப் பதிலாக கடும் கோபமே வந்தது. என் தங்கைமேல் இருந்த பாசத்தில் அவன் படும் சித்திரவதையை நான் பொருட்டாகக் கொள்ளவில்லை. என் கோபம் காட்டிக் கொடுப்பதாக அவன்மேல் சீறிப் பாய்ந்தது. எனக்கு அதற்குமேல் அவனைப் பார்க்க பிடிக்கவில்லை.

இலங்கைப் புலனாய்வுப் பிரிவால் கொடுக்கப்படும் சித்திரவதை, வர்ணிக்க முடியாத நரகம் என்பது ஈழத்தில் பிறக்கும் ஒவ்வொரு தமிழ்க் குழந்தைக்கும் தெரிந்த உண்மை. எமதர்மனே நேரில் வந்து இவர்களிடம் அதைக் கற்றுக் கொண்டு போகலாம். அப்படி எமதர்மன் வந்தால் தான் கற்காது இருந்த வித்தைகளை எண்ணி நிச்சயம் வெட்கித் தலைகுனிவான். அந்த வேதனைகள் என் தங்கை அநுபவிக்க கூடாது என்பதும், அதற்கு நாங்கள் என்ன செய்ய முடியும் என்பதுமே எனது மூளையெல்லாம் நிறைந்து கிடந்த சிந்தனையாயிற்று.

அதிபருடன் நாங்கள் சென்று கதைத்தபோது அதிபர் மிகவும் குழம்பி இருந்தார். பயத்தில் வியர்வை அவரை ஈரமாக்கிக் கொண்டிருந்தது. தன்னம்பிக்கையை மட்டும்

இழக்காத அவர் ஒரு சிறிய திட்டம் தீட்டி அதைச் செயற்ப் படுத்தினார். அம்மாவையும் என்னையும் கேற்றடியில் போய் தங்கைக்காகக் காத்திருப்பதுபோலக் காத்திருக்குமாறு கூறினார். அப்படி நாங்கள் அங்கு காத்திருக்க அயலவரில் ஒருவரை பின்புறமாக இருந்த வாசலில் வந்து நிற்குமாறு பணித்தார். பாடசாலை விடும் பொழுது தங்கையைப் பின்பக்கம் அனுப்பி விடுவதாயும், அப்போது முன்பக்கம் காத்திருக்கும் புலனாய்வுப் பிரிவினரிடம் இருந்து தப்பிக்கலாம் எனவும் அவர் தனது திட்டத்தை விளக்கினார். அதற்குமேல் தன்னால் எதுவும் செய்ய முடியாது எனவும்... கடவுள் நல்ல வழி செய்வார் எனவும் கூறினார். அம்மா ஒவ்வொரு கடவுளாக வேண்டத் தொடங்கினா. நானும் மனதிற்குள் அந்தக் கடவுள்களிடம் மன்றாடினேன்.

முதற்கட்டத் திட்டம் நல்லபடியாக நிறைவேறியது. அடுத்த கட்டம் சொதப்பலாகப் போய்விட்டது. அயல் வீட்டுக்காரர் தங்கையை வேறு எங்காவது கூட்டிச் சென்று இருக்க வேண்டும். அவர் பதட்டத்தில் எங்கள் வீட்டிற்கே கூட்டிக்கொண்டு வந்துவிட்டார். நாங்களும் அப்போது சைக்கிளில் வீட்டிற்கு வந்து சேர்ந்தோம். அதேநேரம் புலனாய்வுப் பிரிவினர் எங்களுக்குப் பின்னால் காருடன் வந்து சந்தியில் நின்று கொண்டார்கள். அவர்கள் வீட்டிற்குள் தங்கை வந்ததைப் பார்த்து விட்டார்கள் என்பது எங்களுக்கு நன்கு புரிந்தது. 'எங்கே ஓடிவிடுவார்கள்?' என்கின்ற நினைப்பில் அவர்கள் சந்தியில் இருந்த கடைக்குள் சென்றார்கள்.

நாங்கள் அவசர அவசரமாக தங்கையின் பாட சாலைச் சீருடையை மாற்றிப் புதிய உடுப்பை அவளுக்கு அணிவித்தோம். பின்பு அயல் வீட்டுக்காரர் தங்கையை வீட்டிற்குப் பின்பக்கம் இருந்த ஒழுங்கை வழியாக அழைத்துச் சென்றார். அப்படிப் போகும்போது ஒரு கொப்பியும் அடையாள அட்டையும் எடுத்துக் கொண்டு சென்றார்கள். அவரும் அவரது மகனும் சிறிய ஒழுங்கை வழியாக நல்லூரை நோக்கிப் போவதாயும், எங்களை பிரதான சாலை வழியாக

அங்கு வருமாறும் மீண்டும் ஒரு உதவாத திட்டத்தைச் சொன்னார். என்மனதில் இருக்கும் எண்ணங்களுக்கு எல்லாம் சொல்வடிவம் கொடுக்காதுவிடும் தவறை முதன்முறையாக நான் உணர்ந்தாலும், வாய் மட்டும் வழமைபோலத் திறக்க மறுத்து அடம்பிடித்தது. அத்தனை வயது முதிர்ந்தவர்களையும் எதிர்த்து என் திட்டத்தை முன்னுக்கு வைக்க சற்றும் துணிவு வரவில்லை.

அவர்கள் வீட்டிற்குப் பின்னால் இருந்த ஒழுங்கையால் வெளியே சென்ற சில கணத்தில் வீட்டிற்குள் புலனாய்வுப் பிரிவினர் வந்தார்கள். இம்முறை அம்மம்மா புத்தியாக நடந்து கொண்டா. வீட்டில் இருந்த அம்மம்மாவை அவர்கள் கேள்விகளால் துளைக்கத் தொடங்கினார்கள்.

"இப்ப வீடு வந்த உங்கட பேத்தி எங்க போயிட்டா?"

"ரியூஷனுக்குப் போயிட்டா?" என்று கூறினார்.

"எங்க ரியூஷன்? " அவர்கள் கேட்க, "எங்கயெண்டு எனக்குத் தெரியாது " எனப் பதில் கூறி இருக்கிறா.

"எத்தின மணிக்குத் திரும்பி வருவா?"

"ஐந்து மணிக்குத் திரும்பி வருவாள் எண்டு நினைக் கிறன்" எனக் கூறிவிட்டு நித்திரை கொள்வது போலப் படுத்துக் கொண்டா.

அவர்கள் அம்மம்மாவின் பேச்சை அப்படியே நம்பி இருக்க வேண்டும். திரும்பவும் ஐந்து மணிக்கு வந்து காத்திருக்கத் துவங்கினார்கள். ஆறரைமணி வரையும் காத்திருந்து ஏமாந்து போய்விட்டார்கள். இப்பொழுது அம்மம்மா பொய் சொல்லி இருக்கிறா என்பது அவர்களுக்குப் புரிந்திருக்க வேண்டும்.

அம்மம்மாவைக் கோபமாகப் பார்த்த அவர்கள், "நாளைக்கு வரேக்க உன்ர பேத்திய தரவேணும். இல்லாட்டி உங்களக் குடும்பத்தோட கூட்டிக் கொண்டு போகவேண்டி

வரும் எண்டதை ஞாபகம் வைச்சிருங்கோ'' என்று கூறிவிட்டுச் சென்றார்கள்.

அதன் பின்பு அவர்கள் ஒவ்வொரு நாளும் திடீர் திடீர் என்று கால நேரம் இல்லாது வீட்டிற்க்குள் பாய்வார்கள். அவர்களுக்கு அப்போதெல்லாம் ஏமாற்றம் மட்டுமே கிடைத்தது. புலிகளை வீட்டிற்கு வெளியே நிறுத்தியது போன்று இவர்களை வெளியே நிறுத்த முடியவில்லை. எந்த சட்ட ரீதியான பாதுகாப்பையும் இலங்கையின் அரசு இயந்திரம் எங்களுக்குத் தராது அடிமைகளாய் நடத்தியது. சொந்த நாட்டில் சொந்த வீட்டில் கைதிகளாக எங்கள் வாழ்க்கை தொடர்ந்தது.

சிலகாலத்தின் பின்பு நீட்டு மயிருடன் இருந்த நான் சிங்கள மகாவித்தியாலத்திற்கு தங்கையின் பெயரில் சென்றேன். அங்குதான் கொழும்புக்கு விமானத்தில் செல்வதற்கான கிளியறன்ஸ் கிடைக்கும். அது எந்தவித இடையூறும் இல்லாது நடந்து முடிந்தது. சிங்கள மாகாவித்தியாலத்திற்குள் நின்ற அவ்வளவு நேரமும் நான் பட்ட அவஸ்தை என்றும் மறக்க முடியாது. இன்றும் அது எனக்கு வியர்வையை கொட்டச் செய்துவிடும். அதன்பின்பு என் தங்கை கொழும்பு பயணமானாள். அத்தோடு துன்பம் தீர்ந்ததாய் எண்ணி நான் நிம்மதி அடைந்தேன்.

## 30

**நா**ன் போன் பண்ணிய பின்பு அம்மாவால் யாழ்ப் பாணத்தில் நிம்மதியாக இருக்க முடியவில்லை. ஏற்கனவே உடல் மாத்திரம் அங்கு வாழ, மனம் எப்பொழுதும் எங்களைச் சுற்றிவரவே வாழ்கையை நகர்த்திக் கொண்டு இருந்தா என்பது எனக்கு நன்கு தெரியும். எனது இந்த முடிவைக் கேட்ட பின்பும் அவவால் பொறுமையாக அங்கு இருக்க முடியவில்லை. எங்களைப் பார்க்க அம்மா யாழில் இருந்து

விமானத்தில் வந்து சேர்ந்தா. அம்மா வருவா என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அம்மா வந்து நிற்பது ஏதாவது திட்டத்தோடே என்கின்ற ஐயம் அவனை ஆட்டிப் படைத்தது.

அம்மா வந்து நான்கு வாரங்கள் கழிந்தன. நாங்கள் ஓடிவிடுவோம் எனக் கணக்குப் பண்ணினான். நாங்கள் தப்பித்து விடக்கூடாது என்பதற்காக அவன் வீட்டில் பழிகிடந்தான். அம்மாவோடு அதிகம் கதைப்பதுகூட அவனுக்குப் பிடிக்கவில்லை. அப்படிக் கதைப்பதைத் தடுப்பதில் மிகவும் கவனமாக இருந்தான்.

நிலைமை இப்படியே இழுபட்டுக் கொண்டிருந்ததால் எந்த அலுவலும் என்னாற்ச் செய்ய முடியவில்லை. ஒரு கணங்கூட அவனிடம் இருந்து நான் தப்பித்துக் கொள்ள முடியாது போய்விட்டது. அம்மா இருக்கும் வரைக்கும் அவன் கவனிப்பு இப்படியே இருக்கும் என்கின்ற உண்மை மெல்ல மெல்லப் புரியத் தொடங்கியது. நான் அம்மாவை முதலில் வவுனியாவுக்கு அனுப்பி வைக்கத் திட்டமிட்டேன். வவுனியாவில் இருந்து கொழும்புக்கு வருவதற்கு அதிக நேரமோ சிரமமோ இருக்காது என நினைத்தேன். யாழ்ப்பாணம் போவதாக கூறிப் புறப்பட்டு, வவுனியாவில் இருக்கும் மாமா வீட்டிலே தங்குமாறு அம்மாவிடம் கூறினேன். அத்தோடு எல்லாத் தொடர்புகளையும் கைத் தொலைபேசியில் மாத்திரம் வைத்துக் கொள்ளுமாறும் கூறி இருந்தேன். என் திட்டத்தின்படி சந்தர்ப்பம் வரும்போது அம்மா கொழும்புக்கு வந்தால், நான் கடைக்குப் பொருள்கள் வாங்க வெளியே வரும்போது மகளையும் கூட்டிக் கொண்டு வந்தால்... அப்படியே தப்பித்துக் கொள்ளலாம் என எண்ணி இருந்தேன். அப்படித் தப்பிப்பதை ஒரு பொது இடத்தில் வைத்து ஆரம்பிப்போம் என்பதையும் அம்மாவிடம் கூறியே வவுனியாவுக்கு அனுப்பி வைத்தேன்.

அம்மாவுக்கு நான் இன்னும் விரலை வாய்க்குள் வைத்தால் கடிக்கத் தெரியாதவள் என்கின்ற நினைப்பு.

அவசரமாக ஓடிப்போய் மற்ற மாமா ஒருவரிடம் புத்திமதி கேட்டுக் கொண்டா. அவர் பொலீசில் கூறி அவனை ஆறுமாதம் பிடித்து உள்ளுக்குப் போட்டால் எந்த இழப்பும் இல்லாது தப்பித்துக் கொள்ளலாம் எனப் புத்திமதி கூறியிருக்கிறார். இந்தத் திட்டம் செயற்படுத்தப்படவில்லை.

அம்மா சென்று இரண்டு மாதங்கள் கழிந்தும் எதுவும் நடக்கவில்லை. உதவுவதாக வாக்களித்த மாமா வெளிநாடு சென்றுவிட்டார். எனக்குக் குற்றம் செய்யாமலே சிறைத்தண்டனை மீண்டும் மீண்டும் நீட்டிக்கப் பட்டதான துன்பம் தொடர்ந்தது. நானாகத் தனித்துத் தப்பித்துச் செல்ல முடியாது என்பதும் புரிந்தது. அவனைக் கொலை செய்ய வேண்டும் போல் ஆத்திரம் இருந்தாலும் அதற்கு உடற்பலம் இல்லை என்கிற நினைவு சோர்வைத் தந்தது. நான் தப்பிக்கும் நாளுக்காய்த் தவம் இருக்கத் துவங்கினேன்.

அன்று ஒருநாள் அம்மா கைத்தொலைபேசியில் கதைத்தா. அதில் தான் ஆசையம்மா வீட்டிற்குச் செல்கிறேன் என்றா. நான் எதிர்பார்த்துத் தவம் கிடந்த வசனம்தான் அது. அம்மா ஆசையம்மா வீடு என்பது எதைக் குறிக்கும் என்று எனக்குப் புரிந்தது. அது மகிழ்வாய் இருந்தாலும் அம்மாவின் பதற்றம் எனக்கு கவலையைத் தந்தது. இந்தப் பதற்றமே எல்லாத் திட்டத்தையும் சறுக்க வைக்குமோ என்று பயந்தேன்.

அம்மாவும் வவுனியா மாமாவும் கொழும்புக்கு வந்தார்கள். கொழும்பில் அவர்கள் மாமா வீட்டில் தங்கி நிற்கிறார்கள் என்பதை அம்மாவோடு கதைக்கும் பொழுது அறிந்து கொண்டேன். அது நல்ல முயற்சி என்றாலும் எனது திட்டத்தை அடியோடு குழப்புவது போல அவர்கள் கொழும்பு மாமாவீட்டில் இருந்து எனது கைத்தொலைபேசிக்கு போன் செய்திருந்தார்கள். அது நான் வகுத்த கைத்தொலைபேசி விதியை மீறியது. எனது போனைப் பறித்து அவன் பார்த்தால் கடைசியாக எங்கிருந்து போன் வந்து இருக்கிறது என்பது

புரிந்துவிடும். நான் அதன் பதிவுகளை அழித்த பின்னரும், மீண்டும் மாமா தனது கைத்தொலைபேசியில் இருந்து எங்கள் வீட்டுப் போனுக்குப் பேசினார். அதை என்னால் அழிக்க முடியாது. அதன்மூலம் எங்கிருந்து கடைசியாகப் போன் வந்தது என்பதை அவன் அறியும் வாய்பை ஏற்படுத்தி விட்டார்கள். எங்கள் திட்டத்தில் குழப்பம் ஏற்பட்டது. நான் செல்லும் பாதையையும், முகவரியையும் அவனிடம் எழுதிக் கொடுத்துவிட்டு பயணம் ஆரம்பித்தது.

மேலும் மேலும் குழப்புவது போலக் கொழும்பு மாமா பலமுறை வீட்டுக்குத் தனது கைத்தொலைபேசியில் இருந்து போன் செய்தார். ஆரம்பத்திலேயே தோல்வி வந்துவிட்டதான உணர்வுடன் நான் வீட்டில் இருந்து புறப்பட்டேன். அதைவிட நிலைமையை மோசமாக்கும் வகையில் திட்டத்தை மாற்றிக் காருடன் எங்கள் வீட்டிற்கு வந்திருந்தார்கள். அது மேலும் எங்கள் வெளியேற்றத்தை ஊருக்குச் சங்கூதிக் காட்டிற்று.

இப்பொழுது நாங்கள் வெளியேறிச் செல்வதற்கு சாட்சிகள் இருந்தன. எனக்குத் மண்டையோடு வெடிப்பது போலத் தலையிடித்தது. பேசாமல் நானே வவுனியா பஸ்சில் ஏறிச் சென்றிருக்கலாம் என்று நினைத்தேன். ஆகக்குறைந்தது எனக்கு அந்த துணிவு வந்திருக்க வேண்டும். இத்தனை ஆர்ப்பாட்டமும் அவசியம் இல்லாமல் போய் இருக்கும் என்பது புரிந்தது.

நாங்கள் கொழும்பு மாமாவீட்டிற்குச் சென்றோம். அங்கு கொழும்பு மாமா என்னை ஒரு கடிதம் எழுதித் தரச் சொன்னார். அதில் நாங்கள் எங்கள் விருப்பத்தின் பெயரி லேயே புறப்பட்டுச் செல்லுகிறோம் என எனது கைப்பட எழுதினேன்.

மேற்கொண்டும் கொழும்பில் தங்கி இருக்க முடியாது என்பது முடிவாகியது. உடனடியாக யாழ்ப்பாணம் போகவேண்டும் என்பதே எங்கள் விருப்பம். அதற்கு நாட்டு நிலைமை இடம் கொடுக்கவில்லை. உடனடியாக

வவுனியா போவதாகத் திட்டம் வகுத்தோம். அவசர அவசரமாக வான்பிடித்து கொழும்பில் இருந்து வவுனியா சென்றோம். நாங்கள் அநுராதபுரத்தை அடையும் பொழுதே ஆறுமணியாகி விட்டது. ஆறுமணிக்குப் பின்பு அநுராதபுரத்தைத் தாண்டித் தனிபட்ட வாகனம் செல்ல முடியாததால், அநுராதபுர புகையிரத நிலையத்தில் வானைச் சாரதி நிறுத்தினார். பின்பு அவரே எங்களுக்காகப் பயனச்சீட்டு வாங்கி வந்து புகையிரத்தில் வவுனியாவுக்கு அனுப்பி வைத்தார். அந்தச் சிங்களச் சாரதிக்கு இருந்த மனிதாபிமானம் என்னை வியப்பில் ஆழ்த்தியது.

நாங்கள் பல இன்னல்கள் மத்தியிலும் ஒருவாறு வவுனியா சென்றடைந்தோம். அந்த நாள் இருட்டோடு கலக்க நாங்களும் முகவரி இல்லாத மனிதர்களாக வாழவேண்டிய கட்டாயத்தில் எங்கள் புதிய வாழ்வை தொடங்கினோம்.

கொழும்பில் அன்று வீட்டிற்குத் திரும்பி வந்த அவன் முதலில் யாரோ எங்களைக் கடத்தியதாக எண்ணி தேடித் திரிந்து இருக்கிறான். பின்பு எங்களைக் காணவில்லை என்று பத்திரிக்கையில் விளம்பரம் கொடுத்திருக்கிறான். அவனது கள்ள மூளை அத்தோடு தூங்கிவிடவில்லை. அடுத்தநாள் தொலைபேசி பதிவுகளைப் பார்த்து யார் யார் எந்த நேரத்தில் தொலைபேசி செய்து இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொண்டான். அவன் பின்பு டயலாக் நிறுவனத்திற்குச் சென்று நாங்கள் காணாது போனதைக்கூறி மாமாவின் கைத்தொலைபேசி எண்ணைக் கொடுத்து யார் அதற்குச் சொந்தக்காரர் என்பதை அறிந்து கொண்டான். சாதாரணமாக டயலாக் நிறுவனம் அந்த விபரத்தை சொல்லமாட்டார்கள். கடத்தல் என்றவுடன் பயந்து அதை அவனுக்கு கூறிவிட்டார்கள்.

அவன் வீட்டிற்குத் திரும்பி வந்து பக்கது வீட்டில் கேட்கவும் அவர்கள் கார் ஒன்றில் நானும் பிள்ளையும் போனதாய்க் கூறியிருக்கிறார்கள். எல்லாவற்றையும் கூட்டிக் கழித்துப் பார்த்தவன் உடனடியாக மாமாவீட்டிற்குச் சென்றான்.

மாமா வீட்டிற்குச் சென்று பார்த்தபோது நாங்கள் அங்கு இருக்கவில்லை. அதை அறிந்தவுடன் மாமாவோடு சண்டை பிடித்துவிட்டு பொலீசிற்குச் சென்று எங்களை மாமா கடத்திவிட்டார் என என்றி போட்டான். கொழும்பு மாமா நான் எழுதிக் கொடுத்த கடிதத்தைப் பொலீசில் கொடுத்திருக்கிறார். அதைப் பார்த்த பொலீஸ் என்னைத் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டது. அப்போது நான் பொலிசுக்கு உண்மையைக்கூற அவர்கள் அவனது முறைப்பாட்டை ஏற்றுக் கொள்ளாது விட்டுவிட்டார்கள்.

இந்தக் குழப்பத்தின் பின்பு நாங்கள் வவுனியா காவல் நிலையத்திற்குச் சென்று முறைப்பாடு செய்தோம். அப்பொழுது அவர்கள் வத்தளையில் நடந்ததிற்கு இங்கு தாங்கள் என்றி எடுக்க முடியாது என்றதோடு, இங்கு வந்து அவன் எதாவது பிரச்சினை பண்ணினால் தாங்கள் அதற்கான நடவடிக்கை எடுப்பதாகவும் கூறினார்கள்.

நாங்கள் வவுனியா மாமா வீட்டில் தங்கவில்லை. வவுனியா வந்தும் எங்களை ஆயிரம் அச்சங்கள் துரத்திக் கொண்டிருந்தன. நாங்கள் வேறு ஒரு உறவினர் வீட்டில் பாதுகாப்புக் கருதி அடைக்கலம் புகவேண்டியதாகிற்று. அடுத்த நாள் அவன் வவுனியா மாமா வீட்டிற்கு வந்திருந்தான். அங்கு அத்தையிடம் நான் யாருடனோ ஓடிவிட்டேன் என்று கூறியதோடு, தன்னை அங்கு கூட்டிவந்தவனின் தங்கையைத் தான் கலியாணம் செய்யப்போவதாகவும் கூறி இருக்கிறான். பின்பு அங்கு நின்று என்னைப்பற்றிக் கீழ்தரமாகச் சிறிது நேரம் பேசிவிட்டுச் சென்றுவிட்டான். என்னை அவமானப்படுத்த வேண்டுமென்ற அவன் கற்பனை அத்தோடு நின்று விடவில்லை.

அத்தைக்கு அவன்மேல் அடக்கமுடியாத ஆத்திர மாய் இருந்தது. “இவன் நாக்கழுகிச் சாவான்... புழுப்பிடித்துச் சாவான்..” என அவனைத் தண்டிக்க முடியாத இயலாமையில் சாபம் கொடுத்துத் தனது கோபத்தை ஆற்றிக் கொண்டார்.

என் வாழ்க்கையில் குறுக்கிட்ட அவன் முழுமையாகத் தனது பிடியை விட்டு விடவில்லை. அவன் எங்களது வீட்டிலேயே தொடர்ந்தும் குடியிருந்து வருகிறான். சட்டங்கள் லஞ்சத்துக்கும், சிங்களத்துக்கும் வளைந்து கொடுக்க, அவன் அதன்மீது சவாரி செய்து கொண்டு வாழ்கிறான். காலம் எனது சுயத்தில் சிலதை மட்டும் மாற்றியிருக்கிறது. அப்படித்தான் மகளுக்கும் இருக்கும் என எண்ணினேன். அது பிழையோ என அன்றைய நிகழ்ச்சி என்னை அச்சம் கொள்ள வைத்தது.

வவுனியாவில் வாழ்ந்தபொழுது, சிறிது காலத்தின் பின்புதான் பயம் மெதுவாக அவளைவிட்டு விலகத் தொடங்கியது. அது எனக்கு மகிழ்ச்சியை அளித்தது. அவள் மற்றைய சிறுவர்களோடு சேர்ந்து விளையாடிய போது பெரும் நிம்மதி வந்தது. இப்படி விளையாடு வதை அவன் ஒருபொழுதும் அனுமதித்ததே கிடையாது. தனது குரூரமான நடத்தையை மற்றவர்களுக்குச் சொல்லி விடலாம் என்கின்ற அச்சம் அதற்குக் காரணமாக இருந்திருக்கலாம்.

அன்று மகள் விளையாடப் போய் இருந்தாள். மச்சான் முறையான நாலுவயதுப் பையனும் ஆறுவயதுப் பையனும் அவளது நண்பர்களாய் இருந்தனர். அவர்களுடன் விளையாடத் தொடங்கியதில் அவர்களுடைய நட்பு அவளுக்குச் சுகமாக இருந்தது. அப்பாவைப்பற்றிக் கதைக்கத் தொடங்கி இருக்கிறார்கள். அப்பொழுது மகள் கோபமக "அப்பாவைத் துண்டு துண்டாக வெட்டோணும். வெட்டிப் போட்டு அள்ளிக் கிணத்துக்க போட்டு கிணத்தை இறுக்கி மூடிவிடோணும். பிறகு அவர் உயிரோட திரும்பியே வரவிடக்கூடாது. வந்தா எங்களைக் கொலை செய்து போடுவார்" என்று கூறியதாக அந்தப் பையன்கள் வந்து சொன்ன பொழுது நான் நடுங்கினேன் அந்தப் பயம் என்னை நீண்டகாலம் வாட்டியது. நாட்டுப் பிரச்சினை தணிய யாழ் வந்து சேர்ந்தோம். யாழ் வந்தபின்பு சுதந்திரமாக அவளால் பாடசாலை சென்றுவர முடிந்தது. பழைய ஞாபகங்கள் படிப்படியாகக் குறைந்து போயின.

*

தமிழன்பன் கடைசியாக வந்துவிட்டுப் போய் ஏழுநாள்கள் கழிந்து வெளிநாடு சென்றுவிட்டார். பெரும்பாலும் வெளிநாட்டிலே குடியேறுபவர்கள், புகலிட நாட்டினை அடைந்ததும் இலங்கையை மறந்துவிடுவார்கள் என்கிற பொதுவான அபிப்பிராயம் உண்டு. அதற்கு தமிழன்பன் மாத்திரம் விதிவிலக்காக இருக்க முடியாது என்று நான் நினைத்திருந்தேன். நான் அவனை மறக்க முயன்று கொண்டிருந்தேன். எனது முயற்சிகள் அடிக்கடி தோல்வியைச் சந்திக்கவும், வேதனைப்படலானேன்.

அன்று இரவு தொலைக்காட்சில் காட்டப்பட்ட மோகமுள் படத்தைப் பாத்துவிட்டு படுப்பதற்கு தயாராகும்பொழுது எனது கைத்தொலைபேசி சிணுங்கியது. எடுத்து அதன் எண் களைப் பார்த்தபொழுது அது நற்பத்தி எழில் தொடங்கியது. எனக்கு இன்ப மயக்கமே வந்தது. அந்த மயக்கத்திலும் நிலத்தில் விழுந்துவிடாது "ஹலோ" என்றேன்.

மறுமுனையில் "ஹலோ நான் தமிழன்பன்... பேருந்தில் நீயெனக்கு யன்னலோரம்" என்றான். பின்பு அட்காசமாய்ச் சிரித்தான். சிரிப்பு தொற்றுநோயா? எனக்குத் தெரியாது. ஆனால் தமிழன்பனின் சிரிப்பு என்னைத் தொற்றிக்கொண்டது!

❀